# செம்மொழி
## இலக்கியச் சிந்தனைகள்

மணிவாசகர் பதிப்பக பொன்விழா ஆண்டு
வெளியீடு



முனைவர் பழ. முத்துவீரப்பன்

மணிவாசகர் பதிப்பகம்
31, சிங்கர் தெரு, பாரிமுனை
சென்னை-600108.

முதல் பதிப்பு : ஆகஸ்ட், 2011

திருவள்ளுவர் ஆண்டு : 2042



**விலை : ரூ. 80.00**

மணிவாசகர் பதிப்பக வெளியீட்டு எண் : 1810

நினைவில் வாழும்

நிறுவனர்



**ச. மெய்யப்பனார்**

டாக்டர் ச. மெய்யப்பன், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்.

பல்கலைக்கழகங்கள் பலவற்றில் இவர் அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்.

**'வள்ளுவம்'** இதழின் நிறுவன ஆசிரியர்.

குன்றக்குடி அடிகளார் **'தமிழவேள்'** என்றும், தருமபுரம் ஆதீனத் தலைவர் **'செந்தமிழ்க் காவலர்'** என்றும் விருதுகள் வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

**'பதிப்புச் செம்மல்'** என அறிஞர்கள் இவரைப் பாராட்டுவர்.

*கிடைக்குமிடங்கள்:*

**மணிவாசகர் நூலகம்**

12-B, மேல சன்னதி, சிதம்பரம் - 608001. ✆:04144-230069

31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600108. ✆:044-25361039

6, சிவஞானம் தெரு, தி. நகர், சென்னை - 600017. ✆:044-24357832

110, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை - 625001. ✆:0452-2622853

15, ராஜ வீதி, கோயமுத்தூர் - 641001. ✆:0422-2397155

296/134, செரி சாலை, சேலம் - 636007. ✆:0427-3207722

28, நந்தி கோயில் தெரு, திருச்சி - 620002. ✆:0431-2706450

---

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ்,

சென்னை – 600 021, தொலைபேசி : 25954528

# முன்னுரை

ஆய்வு என்பது புதுமை காண்பது. பழமையின்றிப் புதுமை ஏது? இந்நூற் கட்டுரைகள் மரபுவழித் தடமொற்றுபவை; மறித்தோடிச் சிந்திப்பவை. கருத்தரங்குகளிலும் பயிலரங்குகளிலும் வாசிக்கப்பட்டவை. முதல் ஐந்து கட்டுரைகள் முறையே ஒரு கோட்பாட்டை, ஒரு புலவரின் தனித்திறனை, ஒரு பதிப்பின் உரைச் சிறப்பை, ஒரு நூலின் சமயக் கோட்பாட்டை, ஒரு அறிஞரின் கருத்துகளை மதிப்பிடுபவை; சங்க நூற்கள் குறித்தவை. பின்அமைந்த ஆறுகட்டுரைகள் கீழக்கணக்கு நூல்கள் தொடர்பானவை. நான்கு கட்டுரைகள் திருக்குறள், நான்மணிக்கடிகை தொடர்பாகத் தனிநிலையிலும் இரண்டு கட்டுரைகள் கீழக்கணக்கு நூல்கள் குறித்துப் பொதுநிலையிலும் விளக்கி எழுதப்பட்டவை.

ஒவ்வொரு கட்டுரையும் தன்னளவில் புதிய செய்திகள் சிலவற்றைக் கொண்டுள்ளன. வினையுவமப் போலிக்கு வழிவழியாகத் தரப்பட்டுவரும் விளக்கம் மறு சிந்தனைக்குரியது என்றும் தலைவன் நெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்த பாடல்களில் உள்ளுறை உவமம் இருப்பதாக உரையாசிரியர் தரும் விளக்கம் பொருந்துமா? என்னும் ஐயப்பாட்டையும் முதற்கட்டுரை முன்வைக்கிறது.

வெள்ளிவீதியார் ஒருமுகப் போக்கிற்கு முதன்மை அளிப்பவர். ஒருசில பாடல்களில் முடிவுரையைப் பாட்டின் இடையிலும் அமைத்துள்ளவர், அளபெடைச் சொற்களைக் கையாண்டு உணர்வுகளைக் காட்சிப்படுத்தி யிருப்பவர், அல்குல் என்ற சொல்லைப் பாடலில் கையாண்டுள்ள ஒரே பெண்பாற் புலவா, சங்க மரபிற்கு மாறாக ஆண் புலியைக் காத்து நிற்கும் பெண்புலி குறித்து வருணித்துள்ளவர், என்றினைய கருத்துகளை இரண்டாம் கட்டுரை சான்றுகளோடு புலப்படுத்தியுள்ளது.

உ.வே.சா.வின் குறுந்தொகை விசேடவுரையை எண்வகையாகப் பகுத்து விளக்குகிறது மூன்றாம் கட்டுரை. இரண்டு கூற்றுகள் குறிப்பிடப்பட்டுள்ள பாடல்களில் எது சரியான கூற்று என்று சுட்டியிருப்பதும் நயவுரை கூறும் திறனும் உவே.சா.வின் ஆய்வுள்ளத்தின் வெளிப்பாடு என்பது எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

'திருமுருகாற்றுப்படை கூறும் சமயநிலை' என்னும் நான்காம் கட்டுரை முருகனைக் குறித்த வடமொழிப் புராணச் செய்திகளைப் பரிபாடல் போல முழுமையாக ஏற்காமல் அளவோடு ஏற்று, பழந்தமிழரின், முருகவழிபாட்டு நெறியையும் பதிவுசெய்து சமயசமரச உணர்வுடன் விளங்குகிறது முருகாற்றுப்படை என்பதை விரிவாக விளக்குகிறது. 'தமிழண்ணலின் சங்க இலக்கிய ஆய்வுகள்' என்னும் ஐந்தாம் கட்டுரை திணை, துறை, திணைமயக்கம், திணை இலக்கியக் கொள்கைகள், கோட்பாடுகள் முதலியவை குறித்தும் அவர் சங்கப் பாடல்களை வகைமை அடிப்படையில் வடமொழி, கிரேக்க, இலத்தின் பாடல்களோடு ஒப்பிட்டு விளக்கியுள்ள சிறப்புக் குறித்தும் எடுத்துரைக்கிறது.

'திருக்குறள் இயல்புரை – ஒரு மதிப்பீடு' என்னும் ஆறாம் கட்டுரை சிறந்த மூலபாடம், பொருத்தமான உரைஏற்பு, நயமான புதிய உரை ஆகியவை பேராசிரியர் இரா. சாரங்கபாணியாரின் இயல்புரையின் சிறப்புகள் என்பதை விளக்குகிறது.

'அறவியல் நோக்கில் திருக்குறள்' என்னும் ஏழாம் கட்டுரை வள்ளுவம் மிகுதியும் வலியுறுத்தும் செயலறங்களில் சிறப்பான சிலவற்றை விளக்கி, புறவாழ்வு சார்ந்து ஆணிற்கும் அகவாழ்வு சார்ந்து பெண்ணிற்கும் அறங்கள் கூறப்பட்டுள்ளன என்பதைச் சுட்டிக்காட்டியுள்ளது.

'திருக்குறளில் அறிவியல்' என்னும் எட்டாம் கட்டுரை கல்வியியல், வேதியியல், சுற்றுச் சூழலியல், உளவியல், விலங்கியல், மருத்துவவியல் குறித்த குறட் கருத்துக்களை விளக்கியுள்ளது.

'கவிதையாக்க நோக்கில் அறஇலக்கியங்கள்' என்னும் ஒன்பதாம் கட்டுரை நாலடியார் பாடல்களைத் தரவுகளாகக் கொண்டு சொல்தேர்வு, தொடராக்கம், நிறுத்தம்(பிணை), அளபெடை, விளிப்பயன்பாடு, ஒலிக்குறிப்பு, வினாஅடுக்கு, அணிநலம் ஆகிய தலைப்புகளில் சான்றுகள் தந்து சிறந்த செய்யுட்களாக அறஇலக்கியங்கள் அமைந்திருப்பதை விளக்கியுள்ளது.

'நான்மணிக்கடிகை அமைப்பழகும் அறக்கருத்துகளும்' என்னும் பத்தாம் கட்டுரை கடிகை கூறும் நல்லறங்களைத் தொகுத்துக்கூறி, அமைப்பழகை விளக்கி, ஓரிரு பாடல்களில் நான்கு கருத்துகளுக்குப் பதிலாக ஓரிரு கருத்துகள் இடம்பெற்றிருப்பதை எடுத்துக்காட்டுகிறது.

'பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் காட்டும் அரசியல் அறம்' என்னும் பதினொன்றாம் கட்டுரையில் திருக்குறளிலும் பிற அறநூல்களிலும் காணப்படும் அரசனைப்பற்றிய கருத்தாக்கம் ஆய்வுநோக்கில் விரிவாக

விளக்கப்பட்டுள்ளது. அரச அறங்களை விளக்கியிருப்பதில் திருக்குறளே முதன்மையான நூல் என்பது எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

இவ்வாய்வுக் கட்டுரைகள் உருவாவதற்குக் களம் அமைத்துத்தந்த உலகத்தமிழ்ச் செம்மொழி மாநாடு, பெரியார் பல்கலைக்கழகம், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம், இலங்கை இந்து சமயக் கலாச்சார அலுவல்கள் திணைக்களம், மயிலம் கலைக்கல்லூரி, சிவகாசி, அய்யநாடார் ஜானகிஅம்மாள் கல்லூரி ஆகிய நிறுவனங்கள், அமைப்புகளுக்கு என் நன்றி உரியது.

அண்ணாமலைப் பல்கலைக்கழகம் என் வாழ்வைப் பொருள் பொதிந்ததாக ஆக்கிய பல்கலைக்கழகம். அண்ணாமலை தீபத்தால் அறிவு வெளிச்சம் பெறுவோர் தொகை ஆண்டுதோறும் இலட்சக் கணக்கில் கூடி வருகிறது. இம்மாபெரும் உடனுறைப் பல்கலைக்கழகத்தை நிறுவிய **அரசர் அண்ணாமலையார்,** பணி தந்து வாழ்வு நலம் தந்த **இராஜா சர் முத்தையவேள்,** தமிழியல்துறைத் தலைவராகவும் இந்திய மொழிப்புல முதன்மையராகவும் பணி உயர்வு தந்து பெருமை சேர்த்துள்ள இந்நாள் இணைவேந்தர் மாண்பமை **டாக்டர் எம்.ஏ.எம். இராமசாமி** ஆகியோர்க்கு என் வாழ்நாள் நன்றி உரியது.

இந்நூலை செப்டம்பர் **2011**–இல் ஆயிரம் பிறை கண்டு முத்துவிழாக் காண இருக்கும் எங்கள் இணைவேந்தர் அவர்களுக்குக் காணிக்கை யாக்குவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

நூலை வெளியிடுவதற்கு அனுமதி அளித்த அண்ணாமலைப் பல்கலைக்கழக நிருவாகத்திற்கு என் பணிவார்ந்த நன்றி உரியது.

செம்மல் வ.சுப. மாணிக்கனாரால் பாடல்பெற்ற சிறப்பிற்குரிய என் ஆசிரியர், பதிப்புச் செம்மல் திரு ச. மெய்யப்பனாரின் அருமைப்புதல்வரும் மணிவாசகர் பதிப்பக உரிமையாளருமாகிய திரு ச.மெ. மீனாட்சிசோமசுந்தரம் அவர்கள், தந்தையாரின் இலட்சியங்ளைத் தொடர்ந்து நிறைவேற்றி வருபவர். நூலை வெளியிடும் தமிழுலகின் பாராட்டுதலுக்குரிய திரு சோமசுந்தரம் அவர்களுக்கும் நூலை வனப்புற விரைந்து வெளியிடுவதில் ஆர்வம் காட்டிய பதிப்பக மேலாளர் இராம. குருமூர்த்தி அவர்களுக்கும் அச்சக நண்பர்களுக்கும் என உளமார்ந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

# உள்ளுறை

# தொல்காப்பிய, சங்க இலக்கிய உள்ளுறை மரபுகள்

உள்ளுறை என்பது தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ள செய்யுள் உறுப்புகள் முப்பத்து நான்கில் ஒன்றன்று. ஆனால், அவற்றுள் ஒன்றான கூற்று என்பதைச் சிறப்பிக்க வருவது. தொடர் பற்றிய குறிப்புப் பொருளாய்ச் செய்யுளில் இடம் பெறுவது. குறிப்பு வருணனை என இதனைக் குறிப்பிடலாம். உள்ளுறை குறித்த கருத்துகளைத் தொல்காப்பியர் அகத்திணையியல், பொருளியல், உவமவியல் ஆகிய மூன்று இயல்களுள் குறிப் பிட்டுள்ளார். அவர் கூறும் உள்ளுறை குறித்த கருத்துகளையும் சங்க இலக்கியங்களில் குறிப்பாக நற்றிணையில் அவ்வுத்தி ஆளப்பட்டுள்ள விதம் குறித்தும் தொகுத்தும் பகுத்தும் தெளிவு தருவதே இகட்டுரையின் நோக்கமாகும்.

**தொல்காப்பியம் கூறும் உள்ளுறை**

அகத்திணையியலில்

1. உள்ளுறை உவமம் ஏனை உவமம் எனத்
   தள்ளா தாகும் திணை உணர்வகையே

2. உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலன் எனக்
   கொள்ளும் என்ப குறியறிந்தோரே

3. உள்ளுறுத்து இதனொடு ஒத்துப்பொருள் முடிகென
   உள்ளுறுத்து இறுவதை உள்ளுறை உவமம்

என்பன நூற்பாக்கள்.

உள்ளுறை திணையை உணர்த்தும் ஒரு கூறு *(நச்.நூ.46)* இக்கருத்தை நச்சினார்க்கினியரே அன்றி இளம்பூரணர், நாவலர், மு. அருணாசலம் பிள்ளை, பாலசுந்தரம் அனைவரும் உடன் படுகின்றனர். தெய்வம் நீங்கலாக பிற கருப் பொருள்களை நிலைக்களனாகக் கொண்டு வரும் *(நச்.நூ.47)* தத்துவங்களின் உருவகமாக அமைத்துக் கொண்ட தெய்வங்கள் இருவகைத் திணைகளுள் அடங்காமையின் அவற்றை ''உயர்திணை மருங்கின் பால் பிரிந்திசைக்கும்'' என உயர்திணைக் கண் சார்த்திக் கூறினார். அம்முறைமையான் தெய்வத்திற்கு மக்களின் ஒழுகலாறுகளை ஏற்றிக் கூறலின் தெய்வமும் உள்ளுறை கோடற்கு நிலமாகாதாயிற்று என்பர் ச. பாலசுந்தரம் *(பொரு ளதிகாரம்-1, தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகையுரை, பக்.112)*. தெய்வமும் தெய்வத்தின் செயல்களும் கண்ணுக்குப் புலனாகாததாலும் தெய்வ நிகழ்ச்சி யாவும் உய்த்துணரும் வகையில் அமைவதாலும் தெய்வ நிகழ்வுகள் வெளிப்படை யாக அமையாததாலும் தெய்வம் உள்ளுறைக்கு நிலனாக அமையாது என்கிறார் ஆ. சிவலிங்கனார் *(தொல்காப்பியம் கூறும் உள்ளுறையும் இறைச்சியும் பக்.5)*. உவமைகளைக் கூறி அவற்றுள் உள்ளுறுத்தப்பட்ட செய்திகளை ஒத்துப் பொருள் கொள்க என்று முடிவது உள்ளுறை *(நூ.48)*

பொருளியலில்

1. வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்தல்
தாவின்று உரிய தத்தம் கூற்றே

2. உடனுறை உவமம் சுட்டுநகை சிறப்பெனக்
கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே

3. அந்தமில் சிறப்பின் ஆக்கிய இன்பம்
தன்வயின் வருதலும் வகுத்த பண்பே

4. மங்கல மொழியும் வைஇய மொழியும்
மாறில் ஆண்மையின் சொல்லிய மொழியும்
கூறியல் மருங்கின் கொள்ளும் என்ப

5. சினனே பேதைமை நிம்பிரி நல்குரவு
அனைநால் வகையும் சிறப்பொடு வருமே

என்பன பொருளியலில் இடம் பெற்றுள்ள நூற்பாக்கள்.

வாயிலாக வருவோர் வெளிப்படையாகக் கூற்று நிகழ்த்த உரியவர். எனவே வாயில்கள் அல்லாத பிறர் கூற்றுகளில் உள்ளுறை இடம் பெறும் *(நூ.241)* என்பது இளம்பூரணர், தமிழண்ணல், பாலசுந்தரம் முதலியோர் கருத்து. ஆனால், வாயிலாக வருவோரிடம் வாயில் மறுத்துக் கூறும் போது தலைவனது பழிகளை வெளிப்படையாகக் கூறுவது தலைவி, தோழிக்கு உரியது என்று உரை வரைந்துள்ளார் நச்சினார்க்கினியர். தொல்காப்பியர் கருத்துப்படி தோழியும் வாயில்களுள் ஒருத்தியாக இடம் பெறுவாள் என்பதால் நச்சினார்க்கினியர் கருத்தே பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. தோழி வாயிலாகச் செயற்படாத இடங்களில் உள்ளுறை கூறுகின்றாள் என இலக்கியங்களில் காண்கிறோம் என்பர் அண்ணல். உள்ளுறை உடனுறை, உவமம், சுட்டு, நகை, சிறப்பு என ஐவகைப்படும் *(நூ. 242)*. அந்தமில்லாத சிறப்பினாகிய இன்பத்திடத்து உள்ளுறைப் பொருண்மை வருதலும் வகுத்த இயல்பு *(நச்.நூ. 243)*. இந்நூற்பா விளக்கத்தில் ''நுண் எழில் மாமைச் சுணங்கணி ஆகம்'' என்ற கலித்தொகை 4ஆம் பாடலை எடுத்துக் காட்டி, இன்பத்தின் கண்ணும் பிறிதோர் பொருள் உண்டென்பது தோன்றுகின்றது என்பர் இளம்பூரணர். அந்தமில் சிறப்பின் ஆகிய இன்பம் தன்வயின் என்று பாடங் கொள்ளும் நச்சினார்க்கினியர் உள்ளுறை பற்றித் தலைவர்க்கு வருவதோர் வழுவமைக்கின்றது என்கிறார். தன்வயின் என்பதற்குத் தலைவன் கண்ணும் என்று விளக்கம் தந்துள்ளார் அவர். நூற்பாவில் இடம் பெற்றுள்ள சொற்களுக்கு விளக்கம் தரும் போது அகப் பொருட் செய்யுட்கண் உள்ளுறையாகிய குறிப்புப் பொருள் பற்றி வரும் தொடர்கள் முதற்கண் தமக்குரிய வெளிப்படைப் பொருள்களை உணர்த்திப் பின்னர்க் குறிப்புப் பொருளையும் தருவனவாகும் என்று விளக்கி, சிறப்பு என்றது களவும் கற்பு மாகிய அக ஒழுக்கத்தினை. இன்பம் என்றது ஊடலும் கூடலு மாகிய பொருளினை. இன்பந்தன் வயின் என்றது இன்பத்தின்

வயின் என்றவாறு என்பர் பாலசுந்தரம் *(பொருள் பகுதி II பக்.249)*

சொல்லாற் பொருள்படாத மங்கல மொழி, அவையல் மொழி, ஆளுமைத் தன்மையை மிகுத்துச் சொல்லும் மொழி *(வைஇய மொழி) (பழிபடச் சொல்லும் மொழி - நச்)* ஆகியவை எல்லாம் வழூவமைதியாக உள்ளுறையில் இடம் பெறுவன *(நூ.244)*. இவை அகத்திற்கும் புறத்திற்கும் பொது என்பர் பாலசுந்தரம்.

உள்ளுறை வகைகளுள் ஒன்றான சிறப்பு உள்ளுறை, சினம், பேதைமை, நிம்பிரி, நல்குரவு ஆகிய நான்கும் காரணமாகத் தோன்றும் *(நூ. 245)*.

தலை மக்கட்கு ஆகாதவை என்று மேல் வரும் மெய்ப் பாட்டியலில் விலக்கப்படும் பத்துக் குற்றங்களுள் சினம், பேதைமை, நிம்பிரி. நல்குரவு ஆகியவை நான்கும் யாதானும் ஒரு பொருளைச் சிறப்பித்தல் காரணமாக வரும் என்பர் இளம் பூரணர். இக்கருத்தை ஏற்றுக் கொள்ளும் நச்சினார்க்கினியர் இவை நான்கும் தலைவிக்கும் தோழிக்கும் உரிய என்கிறார்.

இந்நான்கும் அகப் பொருள் ஒழுக்கத்தைச் சார்ந்து தலைவி மாட்டுத் தோன்றும் என்கிறார் பாலசுந்தரம் *(பக்.251)* இதுவே ஏற்புடையதாகத் தோன்றுகிறது. இந்நூற்பா சிறப்பு உள்ளுறை குறித்தது என்பது மேலாய்விற்குரியது.

உவமவியலில்

''பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி
முன்ன மரபின் கூறுங் காலைத்
துணிவொடு வரூஉம் துணிவினோர் கொளினே''

''உவமப் போலி ஐந்தென மொழிப''

''தவலருஞ் சிறப்பின் அத் தன்மை நாடின்
வினையினும் பயத்தினும் உறுப்பினும் உருவினும்
பிறப்பினும் வரூஉம் திறத்தியல் என்ப''

என்பன உவமவியலில் இடம் பெற்றுள்ள நூற்பாக்களாகும்.

உள்ளுறை என்பது குறிப்பாகப் பொருள் அமைப்பது. உள்ளுறுத்துக் கூறுவது என்பது எவ்வளவு கடினமோ அந்த அளவு கடினமானது அப்பொருளை உணர்ந்து கொள்வதும். பொருள் கொள்வோரும் கற்றுத் தெளிவுடையவராயிருந்தாலே உண்மையான உள்ளுறையை உய்த்துணர முடியும் என்பதை இங்குத் தொல்காப்பியர் சுட்டிக் காட்டுகிறார் *(பக்.19)* என்பர் தமிழண்ணல். நல்லுணர்வுடையோர்க்கே புலனாகும் என்பர் பேராசிரியர். உவமைப் போலி எனப்படும் உள்ளுறை உவமம் ஐந்து வகைப்படும். உவமை என்பது வினை, பயன், மெய், உரு ஆகிய நான்கு அடிப்படைகளில் பிறக்கும் என்று முன்னர்க் குறிப்பிட்டுள்ள காப்பியர், இந்நான்குடன் பிறப்பைச் சேர்த்து ஐந்து அடிப்படையில் உள்ளுறை பிறக்கும் என்கிறார். பிறப்பு என்பது என்ன? சாதி என்பர் பேராசிரியர். குலப் பிறப்பு என்பர் பாலசுந்தரம். பிறப்பு என்பது பிறப்பினால் ஏற்படும் இயல்பையே சுட்டும் என்பர் தமிழண்ணல் *(பக்.45)* குலச் சார்பும் அதனால் எழும் குணமுமாம் *(பக்.49)*.

**பண்டைய இன்றைய உரையாசிரியர்களின் விளக்கங்கள்**

உள்ளுறையாவது பிறிதொரு பொருள் புலப்படுமாறு நிற்பதொன்று. அது கருப் பொருள் பற்றி வரும் *(பக்.352 இளம்பூரணர்)* அவையெல்லாம் சொல்லாற் பொருள்படாமையின் உள்ளுறைப் பாற்படும் *(பக்.353)* என்பது இளம்பூரணர் விளக்கம்.

நச்சினார்க்கினியர் ஒன்றினை உள்ளுறுத்து அதனை வெளிப்படாமல் கூறலின் அவற்றை உள்ளுறை என்றார் *(நூ.242 விளக்கம், பக்.332 நச்)* யான் புலப்படக் கூறுகின்ற இவ் உவமத்தோடே புலப்படக் கூறாத உவமிக்கப்படும் பொருள் ஒத்து முடிவதாக வென்று புலவன் தன் உள்ளத்தே கருதி, தான் அங்ஙனம் கருதும் மாத்திரையே யன்றியும் கேட்டோர் மனத்தின் கண்ணும் அவ்வாறே நிகழ்த்துவித்து அங்ஙனம் உணர்த்துதற்கு உறுப்பாகிய சொல்லெல்லாம் நிறையக் கொண்டு முடிவது *(நூ.48 விளக்கம் பக்.113)*. இதனானே புலவன் தான் கருதிய கூறாத வழியும், கேட்டோர் அவன் கருதிய

பொருள் ஈதென்றாராய்ந்து கோடற்குக் கருவியாகிய சில சொற்கிடப்பச் செய்தல் வேண்டுமென்பது கருத்தாயிற்று *(பக்.113-114)*.

உள்ளுறை உவமம் செய்யுளுக்கே உரியது. அது எல்லோர்க்கும் புலனாகாது நல்லுணர்வுடையோர்க்கே புலனாகும். அவ்வாறு பொருள் கொள்ளுமாறு உள்ளுறை உவமை அமைக்கப்பட வேண்டும் என்பர் பேராசிரியர் *(பக்.154)*.

உவமம் போலப் பொருள் கொள்ளப்படுதலின் அஃது உள்ளுறை உவமம் எனப்பட்டது *(பக்.154)*. மேலும் இஃது ஒப்பினான் வந்த பெயரென்றும் உவமப் போலி என்ற பெயரால் இதனை அறியலாம் என்றும் கூறுவர் அவர்.

வினை, பயன், மெய், உரு, பிறப்பு என்பனவற்றுள் ஒரு செய்யுளில் சில சேர்ந்து ஒருங்கு வருவதும் உண்டு என்கிறார் *(பக்.90)*.

அகத்திணைப் பாடல்களில் உள்ளுறை உவமமே பெரிதும் இடம் பெறும் என்பதும், ஏனை உவமம் அருகியே வரும் என்பதும் நச்சினார்க்கினியர் கருத்தாகும். உள்ளுறை உவமத்தைத் தரும் கருப் பொருட்குச் சிறப்புக் கொடுத்து நிற்கும் ஏனையுவமே சிறப்புள்ளுறை என்று இவர் கூறுவது பொருந்தாது *(நச்.பக்.111)*.

''கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே'' என்று காப்பியர் தொகை கொடுத்துக் குறிப்பிடுவதால் உள்ளுறையின் ஐந்து வகைகளும் வேறு வேறான தன்மை உடையன என்பர் மு. அருணாசலம் பிள்ளை *(தொல்பொருள் ம.கா.ப. 1975 பக்.529)*. இவை ஐந்தும் தமக்கென வரையறுக்கப்பட்ட கோட்பாட்டை உடையவை. எனவே நச்சினார்க்கினியர் உடனுறையை இறைச்சி என்றும் சுட்டு என்பதை இறைச்சியுட் சுட்டி வருவன என்றும் சிறப்பென்பது ஏனையுவமம் உள்ளுறை உவமத்தைச் சிறப்பிப்பது என்றும் பொருள் கொண்டிருப்பது பொருந்தாது.

நச்சினார்க்கினியர் உள்ளுறை உவமம் ''புறத்திற்கும் பொது'' என எழுதியிருப்பது ஆராயத் தக்கது என்றும், இது

களவிற்கும் கற்பிற்கும் பொதுவென்றேனும் ஏனையுவமம் புறத்திற்கும் பொதுவென்றேனும் நச்சினார்க்கினியர் எழுதி யிருந்த உரை புறத்திற்கும் பொதுவெனப் பிழைபட்டிருக்கலாம் என்றும் கருதுவர் அருணாசலம் *(பக்.529).*

ஓர் அகப் பொருட் செய்யுளில் சில அடிகளில் வரும் கருப் பொருட்களால் பெறப்படும் உள்ளுறைப் பொருள், அச் செய்யுளின் மற்றைய அடிகளால் பெறப்படும் பொருளுக் குதவியாகி அதனோடியைந்து ஒரு பொருள் பயந்தால் அஃது உள்ளுறை உவமம் ஆகும் என்பர் நா. சுப்பையாப் பிள்ளை *(மேற்கோள், ஆ. சிவலிங்கனார், தொல்காப்பியம் கூறும் உள்ளுறையும் இறைச்சியும், பக்.5).* உள்ளுறைப் பொருள் பாட்டின் உயிர்ப் பொருள் என்பர் லெ.ப.கரு. இராமநாதன் *(மேலது பக்.521).* வெளிப்படையாகக் கூறியுள்ள பொருள் ஆண்டைக்கு வேண்டுதலன்றி அதனோடு ஒப்பாகக் கொள்ளப் படும் உட்பொருளே இயைபுடையதாய் இருக்குமாறு கூறப்படு வது என்பர் வேங்கடராஜீலு ரெட்டியார் *(மேலது பக்.52).*

தொடர் உருவகமே உள்ளுறை. உள்ளுறையில் உள்ளுறுத் தமைத்த குறிப்பு ஒவ்வொரு கூறிலும் இருக்கும் என்பர் தெ.பொ.மீ *(மேலது பக்.53).* உள்ளுறையுவமம் என்பது கருப் பொருளின் அடிப்படையில் உரிப் பொருளின் தொடர்பால் விளங்குவது என்பர் சோம. இளவரசு *(பக்.56).* உவமைக்குத் தலைமையும் சிறப்பும் கொடுத்தால் அது உள்ளுறை உவமம் எனக் கொள்ளப்படும் என்பர் ரா. சீனிவாசன் *(பக்.56).* உள் ளுறை உவமம் கருப் பொருளைச் சார்ந்து அமைய, இறைச்சி உரிப் பொருளைச் சார்ந்து வரும் என்பர் இரா. தண்டாயுதம் *(மேலது பக்.58).*

**உள்ளுறை உவமை கூறுதற்குரியோரும் கூறும் மரபுகளும்**

''கிழவி சொல்லின் அவளறி கிளவி''

''தோழிக் காயின் நிலம் பெயர்ந் துரையாது''

''கிழவோற் காயின் உரனொடு கிளக்கும்''

''ஏனோர்க் கெல்லாம் இடம் வரை வின்றே''

''இனிதுறு கிளவியும் துனியுறு கிளவியும்
உவம மருங்கில் தோன்றும் என்ப''

''கிழவோட் குவமை ஈரிடத் துரித்தே''

''கிழவோற் காயின் இடம் வரைவின்றே''

''தோழியுஞ் செவிலியும் பொருந்துவழி நோக்கிக்
கூறுதற் குரியர் கொள்வழி யான''

என்பன நூற்பாக்கள்.

தலைவி அவள் அறிந்த கருப் பொருள்களாலும், தோழி தான் வாழும் நிலத்தில் உள்ள கருப் பொருள்களாலும் உள்ளுறை உவமம் கூற வேண்டும். நூற்பா எதிர்மறை முகத்தால் கூறப் பட்டுள்ளதால் பிற நிலப் பொருள்களாலும் மயங்கி வரினும் அமைத்துக் கொள்ளப்படும் என்பர் பாலசுந்தரம் *(பக்.381)*. தலைவன் தன் உடைமை தோன்றச் சொல்ல வேண்டும். உடைமை என்பது அறிவுடைமை என்றிருப்பது நலம் என்பர் கணேசையர் *(பக்.161)*. இளம்பூரணரும் அறிவோடு என்று விளக்கம் கூறியுள்ளார். உள்ளுறை உவமம் இன்ப துன்பங்கள் தோன்றச் சொல்லப்படும். தலைவி மருதம், நெய்தல் ஆகிய இரண்டு நிலத்துப் பிறந்த பொருள் பற்றி உள்ளுறை உவமம் கூறுவாள். குறிஞ்சிக் கண் அத்துணை உரித்தன்று என்றவாறு *(பக்.163)* என்பர் பேராசிரியர். ஈரிடமாவன தோழியிடமும் தலைவனிடமுமாம் என்பர் பாலசுந்தரம் *(பக்.384)*. ஐந்து நிலப் பாடல்களிலும் உள்ளுறை உவமம் இருப்பதற்குப் பாடற்சான்று காட்டிப் பேராசிரியர் கருத்துப் பொருந்தாது என்பர் அவர் *(பக்.385)*. தலைவன் உள்ளுறை உவமம் கூறுவதற்கு எல்லா நிலனும் உரியவாம். தலைவி, தோழி, பாங்கன், பாகன், பரத்தை, பாடினி, பாணன் என யாவர் மாட்டும் தலைவன் உள்ளுறை உவமம் கூறற்குரியன் என்பர் பாலசுந்தரம் *(பக்.385)*. தோழியும் செவிலியும் காலத்திற்கும் இடத்திற்கும் பொருந்து மாற்றான் உள்ளுறை உவமம் கூறப் பெறுப.

''ஏனோர்க்கெல்லாம் இடம் வரைவின்றே'' என்பதால் எல்லோரும் உள்ளுறை உவமம் சொல்லப் பெறுவர் என்று

பொருள் கொள்ளலாம். ஆனால், ''நற்றாயும் ஆயத்தாரும் தந்தையும் தன்னையரும் உள்ளுறை உவமம் கூறப் பெறார்'' என்று தோழியும் செவிலியும் நூற்பா விளக்கத்தில் கூறுவர் பேராசிரியர் *(பக்.165, கணேசையர் பதிப்பு)*. தோழியைப் போலச் செவிலியும் நிலம் பெயர்ந்துரையாத பொருளால் உள்ளுறை உவமம் கூறுவாள் என்பர் அவர்.

***உவமப் போலி என்பது உள்ளுறை உவமமா? ஏனை உவமமா?***

உவமப் போலி என்பது ஏனை உவமமே என்பது இளம் பூரணர் கருத்து. உவமப் போலி வினை, வயன், உறுப்பு, உரு பிறப்பு என்ற ஐந்தினாலும் வரும் என்று காப்பியர் கூறி யிருப்பதால் ஏனை உவமை வேறு, உவமப் போலி வேறு. ஏனை உவமம் போல உவமப் போலி உவம உருபு பெற்று வருவதில்லை. உவமப் போலி என்பது உள்ளுறை உவமம் என்பது பேராசிரியர் கருத்து. இதனைத் தமிழண்ணலும் முத்து சாமியும் உடன்பட்டுள்ளனர்.

''கிழவோட்குவமை ஈரிடத்துரித்தே'' என்று நூற்பாவிற்கு முன் நூற்பாக் கருத்தோடு பொருத்தி இளம்பூரணர் மகிழ்ச்சி பயக்கும் கூற்றும் புலவி பயக்கும் கூற்றும் உவமப் பக்கத்தால் தோன்றும் என்று குறிப்பிடுகிறார். ஆனால், பேராசிரியர் மருதம், நெய்தல் ஆகிய ஈரிடங்களில் தான் தலைவி உள்ளுறை கூற உரிமை உடையவள் என்கிறார். இவ்வுரை சங்க இலக்கியப் பயிற்சியால் எழுந்த உரை. ''கிழவி சொல்லின் அவளறி கிளவி'' என்ற நூற்பாவிற்கு விளக்கம் அளிக்கும் போது பேரா சிரியர் மேற்கோள் காட்டியுள்ள குறுந். 208ஆம் செய்யுள் குறிஞ்சி நிலக் கருப் பொருள் பற்றித் தலைவி உள்ளுறை உவமை கூறியதாகும்.

ஈரிடம் என்பது மருதம், நெய்தல் என்பதற்குரிய குறிப்பு சூத்திரத்தில் இல்லை. எனவே இளம்பூரணர் கருத்தே ஏற்புடை யது என்பர் பேராசிரியர் வெள்ளைவாரணனார். இக்கருத்தைப் பேராசிரியர் முத்துச்சாமி உடன்படுகிறார். இவர் சங்க இலக் கியங்களில் உள்ள உள்ளுறைகளை அட்டவணைப்படுத்திப் பார்த்து தலைவி கூற்றில் நெய்தலில் மிகுதியான உள்ளுறையும்,

மருதம், குறிஞ்சியில் இணையான உள்ளுறையும் முல்லை, பாலை முதலியவற்றில் ஓரளவு உள்ளுறையும் உள்ளமை கண்டறியப்பட்டது எனவே பேராசிரியர் கருத்து பொருந்தாது என்கிறார்.

''ஏனோர்க்கெல்லாம் இடம் வரைவின்றே'' என்ற நூற்பாவில் ஏனோர் என்பது நற்றாய், செவிலி முதலியோர் என்கிறார் இளம்பூரணர். பாங்கனும் பாணனும் முதலாயினோர் என்கிறார் பேராசிரியர். தொல்காப்பியர் ஏனோர் என்று யாரைக் குறிப்பிடுகிறார் என்பது தெளிவாக இல்லை.

உவமப் போலி என்று வேறு பெயரிட்டிருப்பதாலும், உவமை வகைகள் நான்கிற்கும் உவம உருபுகள் கூறியிருப்பது போல உவமப் போலிக்கு உவம உருபு கூறாததாலும், உவமப் போலி ஆராய்ந்தே பொருள் உணரத் தக்கது என்று கூறியிருப்ப தாலும் உவமப் போலி என்பது உள்ளுறை உவமமே என்பர் முத்துச்சாமி *(பக்.64)*.

உள்ளுறை வகைகளும் ஆய்வாளர் கருத்துகளும்

உள்ளுறை, உடனுறை, உவமம், சுட்டு, நகை சிறப்பு என ஐந்து வகைப்படும் என்பர் காப்பியர்.

உடனுறை என்பதை இறைச்சி என்றும் சுட்டு என்பதை இறைச்சியுட் சுட்டி வருவன என்றும் சிறப்பென்பது ஏனை யுவமம், உள்ளுறை உவமத்தைச் சிறப்பிப்பது என்றும் நச்சினார்க்கினியர் பொருள் கொள்கிறார்.

''கெடலரு மரபின்'' என்று காப்பியர் குறிப்பதாலும் உள்ளுறை இறைச்சியை ஒப்பிட்டு எவ்விடத்திலும் அவர் கூறாததாலும் நச்சினார்க்கினியர் கருத்து ஏற்புடையது அல்ல என்பர் முத்துச்சாமி *(பக்.20)*.

தமிழண்ணல் உள்ளுறை என்ற நூலில் நகை உள்ளுறை யும் சிறப்புள்ளுறையும் பெரிதும் வஸ்து தொனியின் பாற் படுவன என்றும், சுட்டு உள்ளுறை, உருவகம் போல் ஒன்றைச் சுட்டி மற்றொன்றைக் குறிப்பது அது அணித் தொகையின் பாற்படும் என்றும், உடனுறை உள்ளுறை என்பதும் சுவைத்

தொனி போல்வதேயாகும் *(பக்.91)* என்றும் குறிப்பிட்டுள்ளார். நகை உள்ளுறை என்பதற்குத் தமிழண்ணல் எடுத்துக் காட்டும் அகம் பதினாறாம் பாடல் சுவைத் தொனி அமைந்தது என்று விளக்கி, எனவே வஸ்து தொனி என்று அவர் குறிப்பிடுவது பொருந்தாது என்கிறார் முத்துசாமி *(பக்.51)*. நகை உள்ளுறை என்பதைத் பாவத் தொனியின் பாற்படுத்துவர் கோ. சுந்தர மூர்த்தி*(பண்டைத் தமிழ், இலக்கியக் கொள்கைகள், பக்.143, 1979)*. எனவே, நகை என்பது சுவைத் தொனியின் பாற்படும் என்பதே பொருந்தும் என்றும், இவ்வாறே சிறப்பு என்பதும் சுவை தொடர்பானது என்றும் விளக்குவர் *(பக்.58)* முத்துச்சாமி.

சுட்டு உள்ளுறை என்பதற்கு யாதேனும் ஒன்றைச் சுட்டிக் கூறி, அதனால் பிறிதொரு பொருள் பயப்பது என்று தமிழண்ணல் கூறும் விளக்கம் ஏற்புடையதே தவிர, அது அணித் தொனியின் பாற்படும் என்று அவர் கூறுவது பொருந்தாது என்றும் சிறப்பு உள்ளுறை சுவைத் தொனி போல்வதாகும் எனக் குறிப்பிடுவது பொருந்தாது அதனைப் பொருட்தொனி என்பதே பொருத்த மானது என்றும் கூறுவர் முத்துச்சாமி *(பக்.58)*.

உள்ளுறை உவமம் என்று தொல்காப்பியர் குறிப்பிட் டிருப்பதால் உள்ளுறை உடனுறை, உள்ளுறை சுட்டு, உள்ளுறை நகை, உள்ளுறைச் சிறப்பு என்று பெயரிடுவதே பொருத்தம் என்பார் அவர்.

உள்ளுறை உவமை வினை, பயன், உறுப்பு, உரு, பிறப்பு என ஐந்தாகும். உள்ளுறைச் சிறப்பு, உள்ளுறைச் சினச் சிறப்பு, உள்ளுறைப் பேதைமைச் சிறப்பு, உள்ளுறை நிம்பிரிச் சிறப்பு, உள்ளுறை நல்குரவுச் சிறப்பு என நான்கு வகைப்படும் என தமிழண்ணலும் முத்துச்சாமியும் குறிப்பிடுவது மீள்சிந்தனைக் குரியது.

**உடனுறை உள்ளுறை**

"உடனுறைவ தொன்றைச் சொல்ல அதனானே பிறிதொரு பொருள் விளங்குவது" என்பது இளம்பூரணர் *(பக்.114)* விளக்கம். தமிழண்ணல் உட்பொருள் ஒன்று உடனுறைவது என்பர். நச்சினார்க்கினியர் உடனுறை என்பதை இறைச்சி என்று

கருதியுள்ளார். கோ. சுந்தரமூர்த்தி, நா. செயராமன், ந. சுப்பு ரெட்டியார் ஆகியோரும் இக்கருத்தினை ஏற்றுள்ளனர்.

பொருளியலிலேயே இறைச்சிக்குத் தனித்து இலக்கணம் கூறப்படுவதால் *(45)* உடனுறை வேறு, இறைச்சி வேறு என்பது திட்டமாகத் தெரிகிறது.

''விளையாடு ஆயமொடு' எனத் தொடங்கும் நற்றிணைப் பாடலை *(17)* எடுத்துக்காட்டுவர் இளம்பூரணர். இப்பாட்டை விளக்கும் தமிழண்ணல், ''இங்கு அன்னை அடிக்கடி வருவாள். அதனால் களவு வெளிப்பட்டு விடும்'' என அச்சுறுத்தி இடம் பெயர்த்து உரைப்பாள் போலத் திருமணத்திற்குத் தூண்டுவது மறைபொருள். இங்ஙனம் உட்கருத்தாக ஒன்று உடனுறைவதே குறிப்புப் பொருள் *(பக்.58)* என்கிறார். ஆனால், இளம்பூரணர் விளக்கமே ஏற்புடையதாகத் தெரிகிறது.

உள்ளுறுத்துக் கருதிய பொருள் இதனோடு ஒத்து முடிக என உள்ளுறுத்துக் கூறுவதை உள்ளுறை உவமம் என்பர் இளம்பூரணர். நச்சினார்க்கினியர் யாம் புலப்படக் கூறுகின்ற இவ்வுவமத்தோடே புலப்படக் கூறாத கருத்து ஒத்து முடிவதாக என்று புலவன் தன் உள்ளத்தே கருதி அங்ஙனம் கருதுவதற்கு ஏற்ற சொல்லெல்லாம் கொண்டு முடிவது உள்ளுறையுவமம் என்பர். உள்ளுறை என்பது கருப் பொருளை ஒட்டணியாகக் கூறுவது. குறிக்கப்படும் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு உவமேயப் பொருள் கூறுதல் வேண்டும் என்பது தெ.பொ.மீ. விளக்கம். ''வீங்குநீர் அவிழ் நீலம் பகர்பவர்'' என்ற கலித். 66 பாடலை எடுத்துக் காட்டி விளக்குவர் நச்சினார்க்கினியர்.

### உள்ளுறை உவமையின் உட்பிரிவுகள்

**1. வினை உவமப் போலி**

வினை நிகழ்ச்சி அடிப்படையில் உள்ளுறை கூறப் பட்டால் அது வினையுவமப் போலி எனப்படும். *(எ.டு)*

கரும்பு நடு பாத்தியில் கலித்த தாமரை
சுரும்பு பசிகளையும் பெரும்புனல் ஊர

புதல்வன் ஈன்ற எம் முயங்கல்
அதுவே தெய்யநின் மார்பு சிதைப்பதுவே *(ஐங். 65)*

''கரும்பு நடுவதற்காகக் கட்டப்பட்ட பாத்தியில் தானே முளைத்த தாமரை வண்டின் பசி தீர்க்கும் ஊரன்'' என்கிறாள் ஊடல் கொண்ட தலைவி. கரும்பு போன்ற பரத்தைக்காக அமைக்கப்பட்ட தலைவனின் இல்வாழ்வில் தானே முளைத்த தாமரை போன்ற தலைவி வண்டு போன்ற தலைவனின் பசியைத் தீர்க்கிறாள் என்பது பொருள். தமிழண்ணலும் தன் உள்ளுறை நூலில் ஓரிடத்தில் இவ்வாறு பொருள் தந்துள்ளார் *(பக்.42)*. ஆனால், பேராசிரியர் ச. பாலசுந்தரம், தமிழண்ணல், முத்துச்சாமி ஆகியோர் அனைவரும் பரத்தையர்க்காக அமைக்கப்பட்ட கோயிலில் யாமுமுளமாகி இல்லறம் பூண்டு விருந்தோம்புகிறேன் என்று விளக்கம் தந்துள்ளனர். சுரும்பு பசி களைதல் என்பது விருந்தோம்பலைக் குறிக்கிறது என்ற விளக்கம் பொருந்தாது.

தலைவியின் பொங்கி வந்த சினம் இங்கு கேலியாக வெளிப்பட்டுள்ளது. இல்லம் என்பது இல்லற மகளிர்க்குரியது. ஆனால், தலைவனின் இல்லமோ பரத்தையர்க்குரியது என்பது எள்ளல். ஒன்றுக்கு ஒன்று என்று பார்க்கும் போது வண்டு என்பதற்குத் தலைவன் என்று பொருள் கொள்வதே நேரிது.

**2. பயன் உவமப் போலி**

பயன் அடிப்படையில் உள்ளுறை கூறப்பட்டால் அது பயன் உவமப் போலி எனப்படும். *(எ-டு)*

நீருறை கோழி நீலச்சேவல்
கூருகிர்ப் பேடை வயாஅம் ஊர
புளிங்காய் வேட்கைத் தன்றுநின்
மலர்ந்த மார்பிவள் வயாஅ நோய்க்கே.

'சேவலை நினைத்து பெடை தன் வயாவைத் தீர்த்துக் கொள்ளும் ஊரன்'' என்பதில் தலைவனை நினைத்துத் தலைவி தன் வயாவைத் தீர்த்துக் கொள்வாள் என்ற குறிப்புப் பொதிந்துள்ளது. வயாவைத் தீர்த்துக் கொள்வது பயன் ஆகும்.

**3. உறுப்பு உவமப் போலி**

உறுப்பு அடிப்படையில் உவமை கூறப்பட்டால் அது உறுப்பு உவமப் போலி எனப்படும். *(எ-டு)*

ஒன்றேன் அல்லென் ஒன்றுவென் குன்றத்துப்
பொருகளிறு மிதித்த நெரிதாள்வேங்கை
குறவர்மகளிர் கூந்தற் பெய்ம்மார்
நின்று கொய மலரும் நாடனொடு
ஒன்றேன் தோழி ஒன்றி னானே *(குறுந். 208)*

''களிறு மிதித்த வேங்கை மரம் மகளிர் நின்று கொய்யுமாறு தளிர்க்கும் நாடன்'' என்பதில் தலைவனால் அலைப்புண்ட தலைவி குறை உடலோடு தளிர்த்தாள் என்ற குறிப்பு உள்ளது. குற்றுயிரின் தன்மை *(குறை உடல்)* என்பது உறுப்பு ஆகும்.

**4. உரு உவமப் போலி**

உரு*(நிறம்)* அடிப்படையில் உவமை கூறப்பட்டால் அது உரு உவமப் போலி எனப்படும். *(எ-டு)*

வண்ண ஒண்டழை நுடங்க வாலிழை
ஒண்ணுதல் அரிவை பண்ணை பாய்ந்தெனக்
கண்ணறுங் குவளை நாறித்
தண்ணென் றிசினே பெருந்துறைப் புனலே. *(ஐங்.73)*

தோழி தலைவனிடம், ''நீ புனலாடிய பொழுது பரத்தை பாய்ந்தாடி புனலெல்லாம் தண்ணென்றது'' என்கிறாள். தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தால் தலைவி உள்ளம் கலங்கினாள் என்பது உள்ளுறை. தண்மை *(பண்பு)* உடைய குளத்து நீர் கலங்கியது தலைவியின் உள்ளக் கலக்கத்திற்கு உள்ளுறையாக அமைந்துள்ளது. தலைவனின் பரத்தமை உறவால் தடம் போல மனம் கலங்கியிருந்த தலைவி உள்ளம் இப்போது தலைவன் திரும்பி வந்ததால் தண்ணென்றது என்பது பொருள்.

**5. பிறப்பு உவமப் போலி**

பிறப்பு அடிப்படையில் வரும் உள்ளுறை உவமம் பிறப்பு உவமப் போலியாகும். *(எ-டு)*

பொய்கைப் பள்ளி புலவுநாறு நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉம் ஊர
எம்நலம் தொலைவ தாயினும்
துன்னலம் பெரும பிறர்த் தோய்ந்த மார்பே. *(ஐங்.3)*

பொய்கையை வாழிடமாகக் கொண்டிருந்தாலும் வாளை மீனைத் தின்று புலவு நாறும் நீர்நாய் அப்பொய்கையில் தன்னைக் கழுவிக் கொள்ளாது. நாளும் வாளை மீனையே இரையாகப் பெறும் ஊரன் என்பது தலைவன் நல்ல குடியில் பிறந்திருந்தாலும் தூய இல்லற நெறியில் நில்லாது இழிந்த பரத்தையரைத் துய்த்து அவரையே நாளும் நாளும் துய்க்க விரும்புகிறான் என்பதை உள்ளுறுத்துகிறது.

சுட்டு உள்ளுறை

சுட்டு என்பது ஒரு பொருளைச் சுட்டிப் பிறிதோர் பொருட்படுதல் என்பர் இளம்பூரணர். ''தொடி நோக்கி'' எனத் தொடங்கும் குறட்பாவைச் சான்று காட்டுவர் அவர் *(பக்.353)*. 'உடனுறையுவமும் அன்றி நகையுஞ் சிறப்பும் பற்றாது வாளாது ஒன்று நினைத்து ஒன்று சொல்வனவும் அன்புறுதகுந இறைச்சியுட் சுட்டி வருவனவும் சுட்டு' என்று நச்சினார்க்கினியர் கூறியுள்ள விளக்கமும் இணைந்து எண்ணத் தக்கது. அவர் ''பெருங் கடல் முகத்த பல்கிளைக் கொண்மூ'' எனத் தொடங்கும் அக நானூற்றின் 188ஆம் பாடலை எடுத்துக்காட்டாகக் காட்டியுள்ளார். இப்பாடல், தோழி இரவில் சிறைப் புறமாகக் கூறியதாகும். கடல் முகந்த மேகமே, வானத்தை வலமாக வளைத்து, முரசு போல் ஒலித்து, போர் மறவர் வாள் போல் மின்னி, நாளும் வீணே ஆரவாரம் செய்வாயோ அல்லது மழை பொழிந்து குறமகள் காக்கும் ''தினைப் புனம் காப்பாயோ'' என்பது பாடலின் பொருள். தலைவனை மழை மீது வைத்துக் கூறலின் சுட்டாயிற்று என்பர் நச்சினார்க்கினியர். பயனின்றி அலரை உண்டாக்குவாயோ? வரைந்து கொள்வாயோ என்பன உள்ளுறுத்தப்பட்டன. இக் கருத்தை முழுமையாகத் தமிழண்ணலும் ஓரளவு சிவலிங்கனாரும் உடன்பட்டுள்ளனர்.

**நகை உள்ளுறை**

நகையாவது, ''நகையினாற் பிறிதொரு பொருளுணர நிற்றல்'' என்பர் இளம்பூரணர். இளம்பூரணரின் இக்கருத்து, பொருத்தமில்லை என்பர் அ. சிவலிங்கனார். நகையாடி ஒன்று நினைந்து ஒன்று கூறுதல் என்பர் நச்சினார்க்கினியர். இளம் பூரணர் உடனுறைக்குக் காட்டியுள்ள நற்றிணைப் பாடலைச் சான்றாக எடுத்துக்காட்டுவர் இவர் *(நற்.பா.172)*. பாடலில் நகைச்சுவை தோன்றக் கூறிய செய்தி பிறிதொரு குறிப்புப் பொருளைத் தர வேண்டும் என்று விளக்குவர் தமிழண்ணல் *(பக்.66, உள்ளுறை)*.

''அம்ம நாணுதும் நும்மொடு நகையே'' என்ற நற்றிணைப் பாடல் *(எண்.172)* நகை உள்ளுறை என்று நச்சினார்க்கினியர் கூறுவது பொருந்தாது என்பர் அண்ணல். இவர் ''நாயுடை முதுநீர்'' எனத் தொடங்கும் அகநானூற்றுப் பதினாறாம் பாடலைச் சான்று காட்டி 'பரத்தையிடம் நீயும் மகன் தாய் என்று தலைவி எள்ளலாக நகையாடியிருப்பதால் இது நகை உள்ளுறை ஆயிற்று'' என விளக்குவர். இப்பாடல் உரையாசிரியராகிய பேராசிரியரால் நகை என்னும் மெய்ப்பாட்டிற்குச் சான்றாக உவமவியலில் காட்டப்பட்டுள்ளது.

முத்துச்சாமி, ''நகை நீ கேளாய் தோழி'' எனத் தொடங்கும் அகநானூற்றின் 248ஆம் பாடலை எடுத்துக் காட்டியுள்ளார். ''வேட்டை நாயைத் தாக்கி, இளம் வேடர்களை விலக்கி, பெண் பன்றியையும் குட்டிகளையும் பாதுகாப்பாக மறைவிடத்தில் தங்க வைத்து, பின்னர் தன்னைத் தொடர்ந்து வரும் வேடர்களைத் தாக்கக் காத்திருக்கும் ஆண் பன்றியின் வீரத்தை எண்ணி அம் பெய்யாமல் மீண்ட கானவன் வாழும் நாட்டுக்குரியவன் நம் தலைவன். அவன் நேற்று இரவில் நம் இல்லத்தில் நிற்கக் கண்ட தாய் என் முகம் நோக்கி நீ நன்மையுடையாய் என்று நகைத்துக் கொண்டே அகன்ற செய்தியைக் கேட்பாயாக'' என்பது பாடற் பொருள். ஆண் பன்றியின் வீரத்தை மதித்துக் கானவன் அம் பெய்யாமல் மீண்டது போல அன்னையும் நம் காதலனுடைய பெருந்தகைமையை நினைந்து அவனைக் கடிதலின்றி வாளாது போயினாள் என உள்ளுறை கூறினாள் என்று விளக்கியுள்ளார்

பின்னத்தூரார். ஆனால், இதற்குத் தமிழண்ணல் கூறியுள்ள விளக்கமும் எடுத்துக்காட்டும் ஏற்புடையதாகத் தோன்றுகிறது.

சிறப்பு உள்ளுறை

''சிறப்பு என்பது இதற்குச் சிறந்தது இஃது எனக் கூறுவ தானனே பிறிதொரு பொருள் கொளக் கிடப்பது'' என்பர் இளம் பூரணர். இவர் இதற்கு எடுத்துக்காட்டுத் தரவில்லை *(பக்.353)*. ஏனையுவமம் நின்று உள்ளுறை உவமத்தைத் தரும் தத்தம் கருப் பொருட்குச் சிறப்புக் கொடுத்து நிற்றல் *(பக்.332)* என விளக்கும் நச்சினார்க்கினியர் ''விரிகதிர் மண்டிலம்'' எனத் தொடங்கும் கலித்தொகைப் பாடலைச் சான்று காட்டுவர். நச்சினார்க்கினியர் சிறப்பு உள்ளுறைக்குக் கொண்ட பொருள் பொருத்தம் இல்லை என்பதை உடனுறை முதலிய நான்கிற்கும் உள்ளே உறையும் பொருள் இருத்தல் போல, உள்ளுறை உவமத்திற்குச் சிறப்புக் கொடுக்கும் உவமைக்கும் உள்ளே உறையும் பொருள் இருத்தல் வேண்டும். அவ்வாறு இல்லாமையாலும் உள்ளுறைக்கு நிலைக் களனாக வரும் கருப் பொருளாற் பெறப்படும் பொருளே அவற்றின் உவமையாக வரும் சிறப்பாலும் பெறப்படும் என்றால் ஒரு பொருளே இரண்டிற்கும் உள்ளுறை என்றல் பொருந்தாமை யாலும் என விளக்குவர் சிவலிங்கனார் *(உள்ளுறையும் இறைச்சியும், பக்.27)*. இவர் விளையாட்டாயமொடு என்ற நற்றிணைப் பாடலை எடுத்துக் காட்டி நும்மினும் சிறந்தது நுவ்வையாகுமென்று அன்னை கூறினள் புன்னையது சிறப்பே என்ற அடிகளை எடுத்துக் காட்டுவர்.

ஒன்றைச் சிறப்பித்து மிகுவித்துச் சொல்வதனால் பிறிதொரு பொருள் பயப்பச் செய்வதே சிறப்பு உள்ளுறை யாகும் என்பர் தமிழண்ணல் *(உள்ளுறை, பக்.69)*.

சினனே பேதைமை நிம்பிரி நல்குரவு
அனைநால் வகையும் சிறப்பொடு வருமே

என்ற நூற்பாவை விளக்கும் இளம்பூரணர் மெய்ப்பாட்டியலில் தலை மக்கட்காகாதன எடுத்தோதுகின்றாராகலின் அவற்றுள் ஒரு சாரன ஓரோவிடத்து வருமென்பது உணர்த்திற்று என்றும்

இச்சூத்திரம் எதிரது நோக்கிற்று என்றும் குறிப்பிட்டு, இந் நான்கு வகையும் யாதானும் ஒரு பொருளைச் சிறப்பித்தல் காரணமாக வரும் என்கிறார் *(தொல்.பொருள் இளம், பக்.355)* நச்சினார்க்கினியரும் இச்சூத்திரம் வழுவமைக்கிறது என்று கூறி தலைவிக்கும் தோழிக்கும் கொள்க *(பக்.334)* என்கிறார். உரையாசிரியர் கருத்தை ஏற்று, நால்வகைக் குணங்களும் அகப் பொருள் ஒழுக்கத்தோடு கலந்து தோன்றும் *(தொல்.பொருள், தொகுதி 2, பக்.257)* என்று விளக்குவர் பாலசுந்தரம். ஆனால், இளம்பூரணர் கருத்தை ஏற்காமல் அவர் கூறும் *(எ.டு)* பாடல் களை மட்டும் ஏற்று அவற்றில் உள்ளுறை அமைந்திருப்பதாகக் கூறுவர் தமிழண்ணல் *(பக்.69-72)*. உள்ளுறைச் சிறப்பு சினம், பேதைமை, நிம்பிரி, நல்குரவு என நான்கு வகைப்படும். சினம், நிம்பிரியால் வெகுளிச் சுவையும், பேதைமையால் நகைச் சுவையும், வறுமையால் அவலச் சுவையும் தோன்றும். ஆதலால் இது வடமொழி சுவைத் தொனி போன்றது என்பர் முத்துச்சாமி *(பக்.73)*.

இவர் சினத்தை, பேதைமையை, பொறாமையை, வறுமையைச் சிறப்பிப்பதன் மூலம் வேறு ஒரு பொருளைப் புலப்படுத்துவது என்று விளக்கி முறையே குறுந்.49, குறுந்.236, ஐங்.70 ஆகிய பாடல்களை எடுத்துக் காட்டி விளக்குவர் *(பக்.73-74) (எ.டு)* ''அணிற்பல்லன்ன கொங்குமுதிர் முண்டகத்து'' என்று குறுந்.49ஆம் பாடல் எடுத்துக்காட்டாகும். ''அணிற்பல்லினைப் போன்ற முள்ளினை உடைய, தேன் விளையும் கழிமுள்ளிச் செடி வளர்ந்துள்ள கடற்கரைத் தலைவன்'' என்ற விவரணையில் முள்ளினைப் போலத் துன்புறுத்தும் பரத்தமை ஒழுக்கமும், தேன் போன்ற இனிய குணமும் வாய்ந்த வன் தலைவன் என்பது உள்ஞுறுத்தப்பட்டது. தலைவியின் சினம், மறுமையிலாவது யான் நின் நெஞ்சு நேர்பவள் ஆக மாட்டேனா என்ற ஏக்கத்தின் மூலம் வெளிப்பட்டுள்ளது.

பேதைமைச் சிறப்பு

பேதைமையைச் சிறப்பிப்பதன் மூலம் வேறு ஒரு பொருளைப் புலப்படுத்துவது. தமிழண்ணல் கலி.19ஆம் பாடலை எடுத்துக் காட்டியுள்ளார். முத்துச்சாமி

விட்டென விடுக்குநாள் வருக அதுநீ

என்ற குறுந்.236ஆம் பாடலை எடுத்துக் காட்டியுள்ளார்.

புன்னை மரத்தின் தாழ்ந்த கிளையில் புதிய நாரை வந்து தங்கும் கடற்கரைத் தலைவன் என்ற விவரணையில் தலைவன் தலைவி இயல்பறியாது பிரிய எண்ணினான் என்ற பொருள் உள்ளுறுத்தப்பட்டுள்ளது.

நீ உண்ட நலனைத் தந்து செல்க என்று கேட்பது பேதைமையைச் சிறப்பிப்பதாயினும் தலைவன் பிரியக் கூடாது என்ற வேறு ஒரு பொருளை விளக்குகிறது.

*நிம்பிரிச் சிறப்பு*

பொறாமையைச் சிறப்பிப்பதன் மூலம் வேறு பொருளைப் புலப்படுத்துவது. தமிழண்ணல் கலி.30ஆம் பாடலைச் சான்றாகக் காட்டியுள்ளார். முத்துச்சாமி,

பழனப் பல்மீன் அருந்தநாரை

என்ற ஐங்.70 பாடலை எடுத்துக் காட்டியுள்ளார்.

''மருத மரத்துக் கிளையில் பல மீன்களை அருந்த நாரை தங்கியிருக்கும் ஊரனே'' என்ற விவரணையில் பரத்தையர் களோடு இன்பம் துய்க்கும் தலைவனின் தீயொழுக்கம் உள்ளுறுத்தப்பட்டுள்ளது. சேய் பயந்த நான் பேய் போன்றவள். நின் பெண்டியர் தூயர், நறியர் என்பது பரத்தையர் மீது தலைவி கொண்ட பொறாமையின் வெளிப்பாடு என்று விளக்குவர் அவர்.

*நல்குரவுச் சிறப்பு*

வறுமையைச் சிறப்பிப்பதன் மூலம் வேறு ஒரு பொருளைப் புலப்படுத்துவது. தமிழண்ணல் குறுந்.295ஆம் பாடலைச் சான்று காட்டியுள்ளார். முத்துச்சாமி இதற்கு எடுத்துக்காட்டுத் தரவில்லை.

*சங்கப் பாடல்களில் உள்ளுறை*

உள்ளுறைக்கும் இறைச்சிக்கும் வேறுபாடு உண்டென் றாலும் குறிப்புப் பொருள் தருவன என்ற தன்மையில்

இரண்டும் ஒன்றுபடுவதால், ஒரு ஆய்வாளர் உள்ளுறை என்று கூறுவதை மற்றொருவர் இறைச்சி என்று கருதியுள்ளனர். பொ.வெ. சோமசுந்தரம், ரா. சீனிவாசன், இரா. தமிழரசி, வெங்கட்ராமன், கு.வெ.பா. முதலியோர் எழுதியுள்ள நூல்களிலும் உரைகளிலும் குறிப்பிடப்படும் உள்ளுறைகள் குறித்த எண்ணிக்கைகள் வேறுபடக் காண்கிறோம். முத்துச்சாமி தம் நூலில் எட்டுத் தொகை நூல்களில் காணப்படும் உள்ளுறை உவமைகளைப் பின்வருமாறு அட்டவணைப்படுத்தியுள்ளார்.

| திணை | ஐங் | குறுந் | நற் | அகம் | கலி | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|
| குறிஞ்சி | 47 | 53 | 75 | 23 | 21 | 219 |
| முல்லை | 6 | 6 | 9 | - | - | 21 |
| மருதம் | 62 | 17 | 14 | 14 | 11 | 118 |
| நெய்தல் | 50 | 24 | 57 | 10 | 11 | 152 |
| பாலை | 15 | 10 | 37 | 12 | 8 | 82 |
| மொத்தம் | **180** | **110** | **192** | **59** | **51** | **592** |

நற்றிணையில் ஐந்திணைப் பாடல்களிலும் உள்ளுறைகள் உள்ளன. குறிஞ்சி, நெய்தல், பாலை ஆகிய திணை அமைந்த பாடல்களில் உள்ளுறை மிகுந்து காணப்படுகிறது. தோழி, தலைவி கூற்றே மிகுதி. மருதம், முல்லைப் பாடல்களில் குறைவாக உள்ளது. முல்லையில் தலைவி கூற்றமைந்த பாடல்களிலும் மருதத்தில் தலைவன் கூற்றமைந்த பாடல் களிலும் உள்ளுறைகள் இல்லை. பொது நிலையில், தோழி, தலைவி, தலைவன் ஆகிய மூவரின் கூற்றுகளிலேயே உள்ளுறைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

பொ.வெ. சோமசுந்தரனார், கு.வெ.பா உரைகளை ஒப்பு நோக்கி ஏற்புடையன என்று கருதித் தொகுத்தவரையில் நற்றிணையில் 118 பாடல்களில் உள்ளுறை உவமங்கள் உள்ளன. அவற்றைப் பின்வருமாறு பகுத்துரைக்கலாம்.

| | தோழி | தலைவி | தலைவன் | நற்றாய் | பரத்தை | காமக் கிழத்தி |
|---|---|---|---|---|---|---|
| குறிஞ்சி | 40 | 7 | 3 | - | 1 | - |
| நெய்தல் | 31 | 9 | - | - | 1 | - |
| மருதம் | 4 | 4 | - | - | 2 | 1 |
| முல்லை | 3 | - | 3 | - | - | - |
| பாலை | 2 | 2 | 3 | 2 | - | - |
| மொத்தம் | **80** | **22** | **9** | **2** | **4** | **1** |

***நற்றிணையில் தோழி கூற்றில்***
***உள்ளுறை உவமம் அமைந்த பாடல்கள்***

4, 15, 19, 22, 27, 35, 36, 47, 49, 57, 63, 65, 85, 91, 98, 108, 119, 125, 127, 131, 138, 145, 158, 168, 171, 175, 178, 180, 181, 183, 191, 195, 203, 210, 211, 228, 230, 232, 233, 239, 247, 251, 257, 258, 263, 266, 268, 273, 276, 278, 283, 285, 288, 291, 294, 297, 317, 322, 326, 328, 330, 331, 334, 336, 344, 345, 353, 358, 359, 367, 372, 373, 375, 386, 391, 393, 395, 396, 399.

***தலைவன் கூற்றில் உள்ளுறை உவமம் அமைந்த பாடல்கள்***

21, 44, 59, 82, 103, 137, 142, 213, 312.

***தலைவி கூற்றில் உள்ளுறை உவமம் அமைந்த பாடல்கள்***

31, 51, 74, 94, 107, 116, 144, 199, 217, 240, 244, 249, 260, 272, 275,, 280, 303, 304, 309, 340, 350, 388.

***நற்றாய் கூற்றில் உள்ளுறை உவமம் அமைந்த பாடல்கள்***

66, 179.

***பரத்தை கூற்றில் உள்ளுன்றை உவமம் அமைந்த பாடல்கள்***

176, 290, 315, 400.

காமக் கிழத்தி கூற்றில் உள்ளுறை உவமம் அமைந்த பாடல்கள்

390

**உள்ளுறுத்தப்படும் கருப் பொருட்கள்**

பரதவர், கானவர், மள்ளர், குறவர் ஆகியோரும், களிறு, புலி, யானை, பிடியானை, பன்றி, குதிரை, கடுவன், மந்தி, மந்தியின் குட்டி, நீர்நாய், எருமை, ஆடு, காக்கை, கொக்கு, காட்டுச் சேவல், மயில், நாரை, கிளி, வாளை, கடல், மலை, தாழை மடல், காந்தள், மயில் ஆகியன நற்றிணையில் தலைவனைக் குறிக்கப் பயன்பட்டுள்ள கருப் பொருள்கள் ஆகும்.

யானை, பிடி, குதிரை, பன்றி, ஏற்றை, புனிற்றா, சேதா, கன்றையுடைய சேதா, பன்றி, பறழ், மந்தி, காக்கை, பெடை, புறா, மீன், புன்னை, மணல், கனி, குறிஞ்சிப் பூ, தினை, தினைக்கதிர், தாழை அரும்பு, வேங்கை ஆம்பல், தாமரை, நெய்தல், உழையினது பூ, தோணி ஆகியன தலைவியைக் குறிக்கப் பயன்பட்டுள்ள கருப் பொருள்கள் ஆகும்.

**நிறைவுரை**

இக்கட்டுரையில் உள்ளுறை குறித்த உரையாசிரியர், பிற்கால ஆய்வாளர் கருத்துகள் சுருக்கமாகத் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

தொல்காப்பியம் கூறும் உள்ளுறை குறித்த மரபுகள் சங்கப் பாடல்களில் பெரிதும் பின்பற்றப்பட்டுள்ளன என்பது எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

உள்ளுறுத்தப்படும் கருப் பொருள்களுள் தெய்வம் இடம் பெறாதது குறித்த அறிஞர் தம் விளக்கங்கள் சுட்டிக் காட்டப் பட்டுள்ளன.

தோழி வாயிலாகச் செயற்படாத இடங்களில் உள்ளுறை கூறுவாள் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது.

உடனுறை என்பது இறைச்சி அன்று என்பது குறிப் பிடப்பட்டுள்ளது.

உவமப் போலி என்பதும் உள்ளுறை என்பதும் ஒன்றுதான் என்பது விளக்கப்பட்டுள்ளது.

சினம், பேதைமை, நிம்பிரி, நல்குரவு என்பது சிறப்பு உள்ளுறையின் வகைகள் என்பர் இன்றைய ஆய்வாளர். ஆனால், மெய்ப்பாட்டியலில் தலைமக்கட்காகாதன என்று விலக்கப்பட்ட இவை நான்கும் யாதானும் ஒரு பொருளைச் சிறப்பித்தல் காரணமாக அவர்மாட்டு வரும் என்று பண்டை உரையாசிரியர் கூறியுள்ளனர். இக்கருத்துக்கள் மேலாய்விற் குரியன.

தலைவி தோழியிடமும் தலைவனிடமும் தலைவன் அனைவரிடமும் உள்ளுறை உவமம் கூறலாம் என்ற பேராசிரியர் பாலசுந்தரனார் கருத்து ஏற்பதற்குரியது.

வினை உவமப் போலிக்கு எடுத்துக்காட்டாகத் தரப்படும் பாடலுக்கு வழிவழியாக அனைவராலும் கூறப்பட்டு வரும் விளக்கம் மறு சிந்தனைக்குரியது என்பது சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

தலைவன் நெஞ்சுக்குக் கூறுவதாக அமைந்த பாடல்களில் *(நற்.137,312)* உள்ளுறை உவமம் இடம் பெற்றிருப்பதாக உரை யாசிரியர்களால் விளக்கம் தரப்பட்டுள்ளது. அது ஏற்புடையதுதானா என்பது ஆய்விற்குரியது.

# வெள்ளிவீதியாரின் தனித்திறன்

*சங்ககாலப் பெண்பாற் புலவர்கள் முப்பதின்மர் என்பர் சஞ்சீவி. நாற்பத்தொருவர் என்பர் பெண்பாற் புலவர்களின் பாடல்களை முனைவர் பட்டத்திற்காக ஆய்வு செய்த ஔவை நடராசன். 473 சங்கப் புலவர்களில் ஏறத்தாழ பத்து விழுக் காட்டினர் பெண் புலவர்கள் எனலாம். பெண்பாற் புலவர்களின் 181 பாடல்களில் 131 பாடல்கள் அகப் பாடல்கள் ஆகும். பெண் புலவர்களுள் ஔவையாருக்கு அடுத்த நிலையில் அதிக மான பாடல்களைப் பாடியவர் வெள்ளிவீதியார் ஆவார். குறுந் தொகையில் எட்டும், நற்றிணையில் மூன்றும், அகநானூற்றில் இரண்டுமாக இவர் பாடிய பதின்மூன்று பாடல்கள் எட்டுத் தொகையில் உள்ளன.*

திணை அடிப்படையில் பாலைத் திணையில் ஐந்து பாடல்களையும் *(குறுந்.27,44,139,149; அகம்.45)* குறிஞ்சித் திணையில் மூன்று பாடல்களையும் *(குறுந்.58,146; அகம்.362)*, மருதத் திணையில் இரண்டு பாடல்களையும் *(குறுந்.169, நற்.70)*, நெய்தல் திணையில் மூன்று பாடல்களையும் *(குறுந். 386, நற்.335,348)* பாடியுள்ளார். முல்லைத் திணையில் பாடல் எதுவும் பாடவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

கூற்று அடிப்படையில் எட்டுப் பாடல்கள் தலைவி கூற்றாக வும் *(குறுந்.27,149,169,386; நற்.70,335,348; அகம்.45)* மூன்று பாடல்கள் தோழி கூற்றாகவும் *(குறுந்.130,146; அகம்.362)* ஒரு பாடல் செவிலித் தாய் கூற்றாகவும் *(குறுந்.44)* ஒரு பாடல்

தலைவன் கூற்றாகவும் *(குறுந்.58)* அமைந்துள்ளன. 130ஆம் பாடல் தலைவி கூற்றாகவும் துறை வகுக்கப்பட்டுள்ளது. சங்கப் புலவர் சிலரை ஒரு திணை பாடுவதில் வல்லவர் என்றும் ஒரு துறை பாடுவதில் வல்லவர் என்றும் குறிப்பிடுவது போல ஒரு பொருள் பாடுவதில் *(காமம்)* வல்லவர் என்று வெள்ளிவீதியாரைக் குறிப்பிடலாம். இவரது பாடல்கள் பெரிதும் மிக்க காமத்தை வெளிப்படுத்துபவை; காதல் அவலம் பேசுபவை. தலைவனைக் கூடப் பெறாத தலைவியின் காம உணர்வு அவல நெருப்பாக இவர் பாடல்களில் வெளிப்பட்டுள்ளது. தோழி, செவிலித்தாய், தலைவன் கூற்றாக அமைந்த ஏனைய பாடல்களும் தலைவியின் அழுத்தமான காம உணர்ச்சியை உள்ளீடாகக் கொண்டவையே.

வெள்ளிவீதியாரின் பாடல்களில் வெளிப்படும் தலைவி யின் காம உணர்வு வெள்ளிவீதியாரின் சொந்த உணர்வாகவே மரபு வழியாகக் கருதப்பட்டு வருகிறது. 'மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும் சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்' என்ற அகத் திணையியல் சூ.54 உரையில் 'கன்றும் உண்ணாது, கலத்தினும் படாது, நல்லான் தீம்பால்.....கவினே.' இது வெள்ளிவீதியார் பாட்டு. 'மள்ளர் குழிஇய விழவினானும் ......... மகனே.' இத காதலற் கெடுத்த ஆதிமந்தி பாட்டு. இவை தத்தம் பெயர் கூறிற் புறமாம் என்று அஞ்சி வாளாது கூறினார். ஆதிமந்தி தன் பெயராலும் காதலன் ஆகிய ஆட்டனத்தி பெயரா லும் கூறிற் காஞ்சிப் பாற்படும் என்னும் நச்சினார்க்கினியர் உரைக் குறிப்பு ஆய்வாளர் பலருக்கும் அவலாயிற்று. நச்சினார்க் கினியர் உரைக் குறிப்பிற்குப் பரணர், ஔவையார், வெள்ளி வீதியார் பாடல்களே வித்தாக அமைந்தன.

சமுதாயம் பரவலாக அறிந்த காதலர் இயற் பெயர்களை உவமையாய் எடுத்தாள்வது சங்க மரபு. காவிரி நீர் விளை யாட்டில் கணவனை இழந்து வருந்தி, மருதி என்பவளால் அவனைப் பெற்ற அரச குலப் பெண் ஆதிமந்தியின் துயரம் அக நானூற்றில் 222ஆம் பாடலில் பரணரால் பாடப்பட்டுள்ளது. ஆதிமந்தி காதலனைத் தேடிச் சென்று வருந்திய செய்தி,

> காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்து
> ஆதிமந்தி போலப் பேதுற்று *(அகம் 45. 13-14)*

என்று வெள்ளிவீதியார் பாடலில் வெளியிடப்பட்டுள்ளது.

வெள்ளிவீதியார் காதலனைத் தேடித் திரிந்ததை,

நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளிவீதியைப் போல நன்றும்
செலவயர்ந்தி சினால் யானே *(அகம்.147. 8-10)*

என்று ஔவையார் உவமையாக வெளிப்படுத்தியுள்ளார்.

வெள்ளிவீதியார் பாடல்கள் தம் அனுபவங்களே ஆகும் என்கிறார் உ.வே.சா. இக்கருத்தை சோமசுந்தரனாரும் உடன்படு கிறார். ஆனால், இக்கருத்தை ஏற்க மறுக்கும் அகத்தியலிங்கம் 'நல்ல கவிதை என்பது உலகப் பொதுமையைக் கூறுவது' என்னும் அரிஸ்டாட்டில் கருத்தை வழிமொழிந்து *(பக்.17)* சங்க இலக்கியங்கள் உலகப் பொதுமைப் பண்பைக் கொண்டவை *(1997)* என்று குறிப்பிட்டு சிலர் கூறுவது போன்று தன்னுடைய வாழ்வைப் படமாக்கி, அதனைக் கவிதையாக்கி நிற்கிறார் என எண்ணவே முடியாதவாறு பெண்ணின் நாணத்தை ஒரு பொதுமைப் பண்பை, உலகப் பொது உண்மையைத்தான் கவிதையாக்கி நிற்கிறார் *(பக்.18)* என்றும் வெள்ளிவீதியார் காமம் மீதூர தன்னை மறந்து தன் கதையைப் பாடி நின்றார் எனக் கூறுவதும் அவர்தம் அழகிய பாடல்களைத் தற்சார்புப் பாடல்கள் (Subjectivity) ஆக்கி நிற்பதும் பொருந்தாதது *(பக்.53)* என்றும் உறுதியாக மொழிந்துள்ளார். ஆணின் உணர்வையும் பாடியிருப்பது, மொழிப் பயன்பாட்டில், பால், வயது, வேறுபாடு காட்டியது ஆகியவற்றால் வெள்ளிவீதி யாரின் கவிதை சொந்த வாழ்வனுபவத்தில் இருந்து பெறப்பட்ட தல்ல என்று வேறு காரணங்களைக் காட்டி அகத்தியலிங்கனார் கருத்தை உடன்பட்டுள்ளார் செ.வை. சண்முகம் *(பக்.95)*. ஒருக் கால் வெள்ளிவீதியாரின் தலைவி புலம்பல்கள் அவரின் சுய உணர்வுப் புலம்பல்களாய் அவரின் அக வாழ்வுச் செய்திகளாய் அவர் காலச் சமுதாயத்தில் பரவலாய்ப் பேசப்பட்டிருக்கலாம் *(பக்.114)* என்பர் மாதையன். ஆணியச் சமூகத்தில் இருந்து பெண்ணியம் பேசியவர் என்ற கருத்தை உடையவர்கள் துரை. சீனிச்சாமி, பூரணச்சந்திரன் முதலியோர். இக்கருத்துகளுள்

வெள்ளிவீதியாரின் பாடல்கள் அவர்தம் தன்னனுபவத்தைப் பொதுவனுபமாக்குபவை என்பது இக்கட்டுரையாளரின் கருத்தாகும்.

அகப் பாடல்களில் தலைவி கூற்றுப் பாடல்களை இருபாற் புலவர்களும் எழுதியுள்ளனர். அகம் பாடியுள்ள 29 பெண் புலவர்களுள் தலைவி கூற்றாக ஔவையார் 14 பாடல்களையும் *(26)*, வெள்ளிவீதியார் 8 பாடல்களையும் *(13)*, அள்ளூர் நன் முல்லையார் 7 பாடல்களையும்*(10)*, கழார்க்கீரன் எயிற்றியார் 8 பாடல்களையும் *(9)*, கச்சிப்பேட்டு நன்னாகையார் குன்றிய னார் 4 பாடல்களையும் *(6)*, ஏனையோர் ஓரிரு பாடல்களையும் பாடியுள்ளனர். பெண் புலவர்களின் பாடல்களில் தலைவி கூற்றுக்களே அதிகமாக ***(62 பாடல்கள்)*** அமைந்துள்ளன என்பது எண்ணத் தக்கது. படர்க்கை இடத்திலிருந்து ஒரு பெண்ணின் காதலை ஒரு பெண் சித்திரிப்பதைவிட தன்மை இடத்திலிருந்து ஒரு பெண்ணின் உணர்வுகளை ஒரு பெண் சித்திரிக்கும்போது அதில் அழுத்தமான வெளிப்பாடு அமைய அதிகம் வாய்ப் புள்ளது என்பதால் பெண் புலவர்கள் தலைவி கூற்று என்ற கவி மரபை அதிகம் கையாண்டிருக்க வேண்டும். ஆண் வழிச் சமூக அமைப்பில் பெண்களின் ஆழ் மனத்தில் புதைந்து கிடக்கும் துயர உணர்வுகளை வெளிப்படுத்துவதற்கும் தன்னனுபவ உணர்வுகளைப் பொதுமையாக்கிப் பாடுவதற்கும் தலைவி கூற்று அதிகம் வாய்ப்பளிப்பதாக இருப்பதும் இதற்குக் காரணம் எனலாம் *(பக்.159)* என்பர் வெற்றிச் செல்வி. இக் கருத்தை முழு அளவில் ஏற்பதற்குச் சான்றுகள் இன்று இல்லை. ஆனால், வெள்ளிவீதியாரும் ஔவையாரும் தம் தன்னனுபவ உணர்வுகளைப் பொதுமையாக்கிப் பாடியவர்கள் என்பதற்கு அவர்தம் பாடற் கருத்துகள் அழுத்தமான சான்றுகள் ஆகின்றன. பெண்பாற் புலவரின் தலைவி கூற்றுப் பாடல்களை ஒருங்கு நோக்கி ஆராய்ந்த வெற்றிச் செல்வி, ''சங்க பெண் புலவர்களின் தலைவி கூற்றுகளுள் ஆண்வழிச் சமூகக் கருத்தியல்களுக் கெதிராய் காமம் பேசியும் பரத்தமை மறுத்தும் பிரிவுத் துயரை ஆழமாகக் காட்டியும் தனித்து நிற்பவை வெள்ளிவீதியாரின் தலைவி கூற்றுகள் என்பதை மறுக்க முடியாது'' *(பக்.174)* என்று மதிப்பிட்டுள்ளார்.

பெண்பாற் புலவர்கள் அனைவருமே பிரிவாற்றாமையைப் பேசியுள்ளனர். ஆனால், காமத்தை வெளிப்படையாகப் பேசியவர் என ஔவையார், வெள்ளிவீதியார், அள்ளூர் நன் முல்லையார், கழார்க்கீரன் எயிற்றியார், மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார் என்ற ஐவரையும் குறிப்பிட லாம். தன்னை வருத்தும் காமத்தை,

கங்கைஅம் பேர்யாற்றுக் கரைஇறந்து இழிதரும்
சிறைஅடு கடும்புனல் அன்ன, என்
நிறைஅடு காமம் நீந்து மாறே *(நற்.369)*

என்பர் நல்வெள்ளையார்.

இணர்இறுபு உடையும் நெஞ்சமொடு புணர்வு வேட்டு
எயிறுதீப் பிறப்பத் திருகி
நடுங்குதும் பிரிவின்யாம் கடும்பனி உழந்தே *(அகம். 217)*

என்பர் கழார்க்கீரன் எயிற்றியார்.

காலையும் பகலும் கையறு மாலையும்
ஊர்துஞ்சி யாமமும் விடியலும் என்றிப்
பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்

என்று பொழுதறியாப் புணர்ச்சி ஆசையைப் புலப்படுத்துவர் நன்முல்லையார். ஔவையாரின் தலைவி ''வான்தோய்வற்றே காமம்'' *(குறு.102)* என வெளிப்படையாகப் பேசுகிறாள். ஆரத் தழுவும் அவாவை, ''மெய்புகுவன்ன கைகவர் முயக்கம்'' *(அகம்.11)* என்று வெளிப்படுத்துகிறாள். பிரிவாற்றாமையை மிகுதியாகப் பாடிய சங்கப் புலவர் பாலை பாடிய பெருங் கடுங்கோ, இவரது தலைவிகூட 'சேரிவரினும் ஆர முயங்கார்' *(குறுந்.231)* என்றுதான் பேசுகிறாள். 'கைகவர் முயக்கம் மெய்யுறத்திருகி' *(குறுந்.240)* என்கிறாள் நப்பாலத்தானாரின் தலைவி. ஔவையாரின் தலைவி தன் காமநோய் அறியாது உறங்கும் ஊர்க்குத் தன் துயரத்தை எப்படி வெளிப்படுத்துவேன் என்று தவிதவிக்கிறாள். 'முட்டுவேன் கொல் தாக்குவேன் கொல் ......... ஆஅ ஒல் எனக் கூவுவேன் கொல்' என்று துடிதுடிக் கிறாள். *(குறுந்.28)* முலையிடைத் தோன்றிய காமநோய் துயர்

மிகுதியால் மரமாக வளர்ந்து ஊரவர் அம்பலால் கிளை பரப்பி, நாண் இல்லாத பெருமரமாக வளர்ந்து நிற்பதாக விவரிக்கிறாள் *(அகம்.273)*. மெய், முலை என உடலும் உறுப்பும் ஆரத் தழுவும் வேட்கையும் ஔவையார் பாடலில் மட்டும் தாராள மாக வெளியாகியுள்ளன. இவ்வாறே, தன் உடல் எழிலை நல்லான் தீம்பாலோடு உவமை கூறி அல்குல் என்ற உறுப்பைப் பாட்டில் பதிவு செய்துள்ள ஒரே பெண் புலவர் வெள்ளிவீதியார் மட்டும்தான். குடவாயிற்கீரத்தனார் *(அகம். 119,345)* வேம்பற்றூர்க் குமரனார் *(அகம்.15)*, கருவூர்க் கலிங்கத்தார் *(அகம்.183)* நற்றமனார் *(நற்.133)* பெயர் தெரியாப் புலவர் *(நற்.84)* எனப் பெரிதும் ஆண்பாற் புலவர் பாடல்களில்தான் இச்சொல் கையாளப்பட்டுள்ளது. யான் அல்லது என் என்ற தன்மை ஒருமை வடிவத்தை *(அகம். 45,362; குறுந்.27,386; நற்.70,335,348)* அதிகமான பாடல்களில் கையாண்டுள்ளவரும் இவர்தான். கன்றும் உண்ணாது என்ற ஒரே பாடலில் என் என்ற சொல் மூன்று முறை வந்துள்ளது. அதை எடுத்துக் காட்டும் போது ''சொந்த வாழ்வின் உணர்வு என்பதை அழுத்தமாக உணர்த்தி விடுகிறது'' என்பர் செ.வை. சண்முகம் *(பக்.80)*. தலைவி அல்லது தோழி கூற்றாக அமைந்த பாடல்களில் காதல் தீவிரம் கொஞ்சம் தூக்கலாக இருப்பது ஒத்துக் கொள்ள வேண்டிய உண்மை *(பக்.96)* என்று மீண்டும் ஒருமுறை இக்கருத்தை அவர் வலியுறுத்தியுள்ளார்.

1. உள்ளடக்க அடிப்படையில்,

1.1 காமத்தை வெளிப்படையாகப் பேசுவது

1.2 பிரிவுத் துயரத்தை அழுத்தமாக வெளியிடுவது

1.3 தலைவனின் பரத்தமைப் பண்பை நேர்முகமாகக் கண்டிப்பது ஆகியனவும்

2. வெளியீட்டு அடிப்படையில்,

2.1 ஒருமுகப் போக்கு அமையத் திட்டமிட்டுப் பாடுவது

2.2 முடிவுரைக்குப் பின்னரும் ஒரு முடிவுரை அமைப்பது

2.3 முடிவுரையைப் பாட்டின் நடுவில் அமைப்பது

2.4 விளிகளில் குறிப்புப் பொருள் அமையப் பாடுவது

2.5 அளபெடைச் சொற்களைப் பயன்படுத்திக் காட்சிப் படுத்துவது

2.6 அடர்த்தியான படிமங்களைக் கொண்டு காட்சிப்படுத்துவது

2.7 ஆர்வமூட்டும் தொடக்கங்களைக் கொண்டிருப்பது

2.8 சிறப்பான முடிவுகளைப் பெற்றிருப்பது

2.9 சொல் அடுக்கியும் தொடர் அடக்கியும் பாடுவது

2.10 அணிநலம் அமையப் பாடுவது *(உவமை, மோனைத் தொடை, இயைபுத் தொடை)*

2.11 பாடலில் கூன் பயன்படுத்தி இருப்பது

2.12 புலவரின் பெயருக்கும் கவிதைச் சொற்களுக்கும் இயைபு காணப்படுவது ஆகியனவும் இவர் தனித் தன்மைகள் என்று வகைப்படுத்தலாம்.

இக்கருத்துகளுள் முதல் ஐந்து மட்டும் பாடல்களை விளக்கும் போதே உடன் விளக்கப்படுகின்றன. எஞ்சிய கூறுகள் தனித்து விளக்கப் பெறுகின்றன.

**1.1 காமத்தை வெளிப்படையாகப் பேசுவது**

தொல்காப்பியம் களவியல் நூற்பாக்களில் *(106,116)* தலைவி தன் காம வேட்கையைக் குறிப்பாகவே வெளிப்படுத்த வேண்டுமென்றும் புது மண் பானையில் வைத்த நீர் லேசாகக் கசிவது போல வேட்கை குறைவாகவே சொல் வெளிப்பட வேண்டுமென்றும் இலக்கணம் கூறியுள்ளது. இளந்திரையனார் என்னும் புலவர் 'நோய் அலைக் கலங்கிய மதன் அழி பொழுதில் காமம் செப்பல் ஆண் மகற்கு அமையும் யானே, பெண்மை தட்ப நுண்ணிதின் தாங்கிக் கைவல் கம்மியன் கவின் பெறாக் கழாஅ மண்ணாப் பசுமுத்து ஏய்ப்ப' என இதனை இலக்கியமாக்கி உள்ளார் *(குறுந்.94)*. ஆனால், இவ்விலக்கணத் திற்கு மாறாக தன் காம ஆசையை வெளிப்படையாகப் பேசி உள்ளார் வெள்ளிவீதியார். சான்றாகப் பின்வரும் பாடல்களை எடுத்துக்காட்டலாம்.

கன்று முண்ணாது கலத்தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்துக் காஅங்
கெனக்கு மாகாது என்னைக்கு முதவாது
பசலை யுணீஇயர் வேண்டும்
திதலை யல்குல் என்மாமமைக் கவினே

என்ற இப்பாடலை அம்மையாரின் பாடல்களில் மிகச் சிறந்த பாடல் என்பர் அகத்தியலிங்கம். 'தேமல் படர்ந்த அல்குலினை உடைய என்மாமை அழகு எனக்கும் அழகாகாமல் என் காதலனுக்கும் இன்பம் தராமல் நல்ல பசுவின் இனிய பாலானது கன்றாலும் உண்ணப்படாமல் பாத்திரத்திலும் கொள்ளப்படாமல் தரையில் சிந்திப் பரவி வீணாவது போல பசலையால் உண்ணப்படுகிறது' என்பது இப்பாட்டின் பொருள்.

காம மேலீட்டினால் தனது மாமைக் கவினை பசலை உண்டு அழிக்கக் கடவது என்று சினந்து கூறுவார் ஆயினார் என்கிறார் நாராயணசாமி ஐயர். இது காம நோயின் கொடுமை கூறிய வாறாம் என்கிறார் சோமசுந்தரனார்.

எனக்கும், என்னைக்கும், என்மாமைக்கவின் என தன்மை ஒருமை இப்பாடலில் மூன்று முறை கையாளப்பட்டிருக்கிறது. ஒரு சிறப்பான படிமம் உவமையாக வெளிப்பட்டிருக்கிறது. உவமைக்கு மூன்று அடைமொழிகள் *(நல், ஆன், தீம்)* தரப் பட்டுள்ளன. உண்ணுதல் உகுதல் என்ற சொற்கள் அளபெடைச் சொற்களாகக் கையாளப்பட்டு அதன் மூலம் கூற வந்த பொருள் அழுத்தமாக வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. பால் தரையில் சிந்திப் பரவுவது உக்காஅங்கு என்ற அளபெடைச் சொல்லால், சீர் அமைப்பால் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. உவமைக்கு மூன்று அடைமொழிகள் போல உவமேயத்துக்கு நான்கு அடை மொழிகள் *(திதலை, அல்குல், என், மாமைக்கவின்)* தரப் பட்டுள்ளன. திதலை அல்குல் என்பது வடிவ அழகையும், மாமைக்கவின் என்பது வண்ண அழகையும் குறித்து நிற்கிறது. இப்பாடலில், இடம் பெற்றுள்ள பசலை உணீஇயர் என்ற சொல்லை விளக்கும்போது அது புடைப் பெயர்ச்சியை விளக்கும் செயல் வினை ஆகும். அச் சொல் ஒரு கூட்டு வினை. இதனால் இலக்கிய நோக்கில் மூன்று நன்மைகள் ஏற்பட்டுள்ளன.

1. யாப்பு நோக்கில் பசலையைத் தனிச் சீராக அமைத்து அதை முக்கியப்படுத்தியது.
2. பொருள் நிலையில் இயல்பாக நடக்கும் காரியத்தை வேண்டுமென்றே செய்வதாக வருணித்தது. அதாவது அஃறிணையை உயர்திணை ஆக்கியது.
3. தொடரியல் நிலையில் பாட்டில் உள்ள ஒரே வாக்கியத்தின் எழுவாயாகவும் அது அமைந்து விட்டது.

என்று விளக்கம் தந்து பசலை பல நிலைகளில் இங்கு முக்கியத் துவப்படுத்தப்பட்டுள்ளது. அது பெண்களின் காதல் துன்பத்தின் குறியீடாகவும் கருதத் தக்கது. மெய்ப்பாட்டியலில் புணர்ச்சிக்கு நிமித்தமாகிய மெய்ப்பாடுகளில் ஒன்றான பசலை பாய்தல் என்பதற்கு பசலை பரத்தல் என்று விளக்கி இப்பாடலையே பேராசிரியர் மேற்கோள் காட்டியிருக்கிறார் என்றும், காரணம் இதில் பசலை உண்ணுதலை முக்கியப்படுத்தி இருப்பதே என்றும் செ.வை. சண்முகம் விளக்கியுள்ளார்.

பசலை படர்வது குறித்துப் பல சங்கப் பாடல்களில் குறிப்பிடப்பட்டிருந்தாலும், பசலை உண்ண விரும்புகிறது என்று கூறி இருப்பது இவர்தம் வேதனையின் அழுத்தமான வெளிப்பாடாகத் தெரிகிறது. கூடுதல் அழுத்தம் தருவதற்காக உணீஇயர் என்று அளபெடைச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். இப்பாடலில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு சொல்லும் எண்ணி எண்ணி இழைத்து இழைத்துச் செய்யப்பட்ட நகையாக மனம் கவர்கின்றன.

அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே யினியே
வான்பூங் கரும்பி னோங்குமணற் சிறுசிறை
தீம்புன னெரிதர வீய்ந்துக் காஅங்குத்
தாங்கு மளவைத் தாங்கிக்
காம நெரிதரக் கைந்நில் லாதே. (குறுந். 149)

இக் குறுந்தொகைப் பாடல் உடன் போக்கு உணர்த்திய தோழிக்குத் தலைவி சொல்லியதாக அமைந்தது.

'இரங்கத் தக்கது இந் நாணம். நம்மோடு மிக நீண்ட காலம் உடனிருந்து வருந்தியது. இனி, வெள்ளிய பூவை உடைய

கரும்பு வயலின் உயர்ந்த மணலை உடைய சிறிய கரை, பெருக்கெடுத்து ஓடி வரும் இனிய புதிய வெள்ளம் நெருங்கி அடித்தலால் அழிந்து வீழ்ந்தாற்போலத் தடுக்கும் வரையில் தடுத்து, காமம் மேன்மேலும் பெருகித் தாக்க என்பால் நில்லாது போய் விடும்' என்பது இப்பாடலின் பொருள்.

இப்பாடலில் நாணம் இரக்கத்திற்குரியது என்பது மூன்று வாக்கியங்களில் வெவ்வேறு விதமாக விளக்கப்பட்டுள்ளது என்பர் அகத்தியலிங்கம்.

1. அளிதோ தானே நாணே - ஒரு ஓகாரம் இரண்டு ஏகாரம்.
2. நம்மொடு நனி நீடுழந் தன்று - நம், நனி, நீடு, உழந்தன்று என நான்கு சொல்.
3. மன்னே இதை அசைநிலை என்பர் உ.வே.சா. ஆனால், அகத்தியலிங்கம் தலைவியின் கழிவிரக்கம் காட்டும் தனி வாக்கியம் என்பர். இக்கருத்து ஏற்பதற்குரியது.

தலைவி கரும்பை நிகர்ப்பவள். அவளிடம் உள்ள நாணம் ஒரு சிறிய சிறை. அது தோற்றத்தால் மட்டும் உயர்ந்து காணப்படுகிறது *(ஓங்கு மணல்)*. பாய்ந்து வரும் இனிய வெள்ளம் தலைவன். தலைவனைத் தீம்புனலாகக் காண்பதில் அம்மையாருக்கு ஒரு அலாதிப் பிரியம் என்று கூறி நற்றிணை 70ஆம் பாடலையும் எடுத்துக்காட்டுவார் அவர். இப்பாடலில் உவமானம், உவமேயம் இரண்டிலும் 'நெரிதர' என்ற ஒரே சொல்லைப் பயன்படுத்தி உள்ளார் கவிஞர். பாடலில் இடம் பெற்றுள்ள இரண்டு பயனிலைகளும் *(உக்காங்கு, கைந்நில்லாது)* அழிவைக் காட்டுவன. ஆனால், ஒன்று உடன்பாட்டில் உள்ளது *(உக்கு)*. மற்றொன்று எதிர்மறையில் உள்ளது *(கைந்நில்லாது)*. பாடலின் தொடக்கம் முதல் இறுதி வரை நாணம் காமத்தின் முன் நில்லாது என்ற ஒரே கருத்து அழுத்தமாகக் கூறப்பட்டுள்ளது. பாடலின் கருத்து, ஒருமுகப் போக்கால் படிப்பவர் உள்ளத்தில் சுவடு பதிக்கிறது. பாடுபொருளாலும் பாடல் அமைப்பாலும் சிறந்து விளங்கும் பாடல் இது.

திங்களும் திகழ்வான் ஏர்தரும்; இமிழ்நீர்ப்
பொங்குதிரைப் புணரியும் பாடு ஓவாதே;

ஒலிசிறந்துஓதமும் பெயரும், மலிபுனற்
பல்பூங் கானல் முள்இலைத் தாழை
சோறுசொரி குடையின் கூம்பு முகைஅவிழ,
வளிபரந்து ஊட்டும் விளிவுஇல் நாற்றமொடு
மைஇரும் பனைமிசைப் பைதல உயவும்
அன்றிலும் என்புற நரலும்; அன்றி
விரல்கவர்ந்து உழந்த கவர்வின் நல்யாழ்
யாமம் உய்யாமை நின்றன்று;
காமம் பெரிதே; களைஞரோ இலரே!

விளங்கிய வானில் திங்கள் எழுந்து ஒளி பாய்ச்சுகிறது. ஒலிக்கும் நீர்மையை உடைய பொங்கி வரும் அலையை உடைய கடலும் ஓயாது முழங்குகிறது. ஒலி மிகுந்து கடல் நீரும் கரையில் மோதிப் பெயர்கிறது. நீர் நிறைந்த பலவாகிய பூக்களை உடைய கடற்கரைச் சோலையில் முள்ளை உடைய இலைகளை உடைய தாழை, சோறு நிரம்பிய குடம் போல பருத்த உள் ளீட்டினை உடைய கூம்பிய அரும்புகளை மலரச் செய்கிறது. காற்றானது அப்பூ மடலின் உள்ளே பரவி எங்கும் நறுமணத்தை வீசுகிறது. கரிய பெரிய பனை மரத்தின் மீதிருந்து துன்பத்தைத் தருவதாய் வருத்துகின்ற அன்றில் பறவையும் அருகிருந்து ஒலிக் கிறது. விரலாலே தடவி வருந்தி இசை கூட்டிய விருப்பம் செய்யும் நல்ல யாழும் நான் உய்தி பெறாதவாறு இசை எழுப்புகிறது. இவற்றால் எல்லாம் நான் கொண்ட காமமோ பெரிது. இதனைப் போக்க வல்ல காதலரோ என் அருகில் இல்லை. இனி யான் எவ்வாறு உய்வேன் என்பது இப்பாடலின் பொருள். அடங்கிய குரலில் ஆனால், அழுத்தமாகப் படிப்படியாக சூழல் காரணமாக காமத் துன்பம் மிகுந்து வருவதை இப்பாடல் அருமையாக விவரிக்கிறது. இப்பாடலில் புலன்களுக்கு வருத்தம் தரும் இயற்கை நிகழ்வுகள் வரிசையாக விவரிக்கப்படு கின்றன. திங்கள், கடல், வெள்ளம், வளி ஆகியவை முறையே கண், செவி, மெய், மூக்கு ஆகிய புலன்களுக்குத் துன்பத்தை ஏற்படுத்துகின்றன. பாடலில் காட்டப்படும் எல்லாமே ஒன்றை ஒன்று தழுவி மகிழ்கின்றன. திங்கள் வானத்தை, கடல் பூமியை, வெள்ளம் சோலையை, காற்று மலர்களைத் தழுவி மகிழ்ச்சி

யுடன் திகழ்கின்றன. இணை பிரியாத அன்றில் பறவையோ பிரிந்திருந்து அவலத்தைக் குரலெழுப்பி வெளியிடுகிறது. தாகம் தீரத் தடவும் யாழும் சோகம் கூட்டுகிறது. போகம் தர வேண்டிய தலைவனோ அருகில் இல்லை. பாடல் விவரணை களை எல்லாம் கவனமாகப் பார்க்கும் போது, வெள்ளிவீதியார் தலைவனைக் கூடிப் பிரிந்த தலைவி தான் என்பது தெளிவா கிறது. குறுந்தொகையின் 305ஆம் பாடலிலும் குப்பைக் கோழி யார் என்ற புலவர் தலைவி கூற்றாக ''களைவோர் இலையான் உற்ற நோயே'' என்று கூறி உள்ளார். ஆனால், வெள்ளிவீதி யாரோ 'காமம் பெரிதே' என்று வெளிப்படையாகப் பேசி உள்ளார். இப்பாடலை எடுத்துக்காட்டி ''நெருப்பின் அடித் தளத்தில் கட்டப்பட்ட குளிர்ந்த சலவைக் கல் மண்டபம்'' என்று கவிதை நயம்பட துரை. சீனிச்சாமி விளக்குவது ஏற்றுப் பாராட்டத் தக்கதாகும்.

நெய்தல் திணையில் வேட்கை பெருகத் தாங்கலளாய் ஆற்றாமை மீதூர்கின்றாள் சொல்லியது என்னும் துறையில் அமைந்த நற்றிணைப் பாடல்,

நிலவே, நீல்நிற விசும்பில் பல்கதிர் பரப்பி,
பால்மலி கடலின், பரந்து பட்டன்றே;
ஊரே ஒலிவரும் சும்மையொடு மலிபுதொகுபு ஈண்டிக்
கலிகெழு மறுகின் விழவு அயருமமே;
கானே பூமலர் கஞலிய பொழில்அகம் தோறும்
தாம்அமர் துணையொடு வண்டு இமிருமமே;
யானே, புனைஇழை ஞெகிழ்த்த புலம்புகொள் அவலமொடு
கனைஇருங் கங்குலும் கண்படை இலெனே;
அதனால், என்னொடு பொரும்கொல், இவ்வுலகம்?
உலகமொடு பொரும்கொல், என் அவலம்உறு நெஞ்சே!

*(நற்.335)*

'நிலவு, நீல நிறமுடைய ஆகாயத்தில் பலவாய கதிர்களைப் பரப்பி பால் நிரம்பிய கடல் போல் பரந்து காட்சி அளிக்கிறது. இந்நிலா நாளில், இவ்வூரினர் பெருகும் ஆரவாரத்துடன் மிகுதி யாகக் கூடி ஓசை மிக்க தெருவினிடத்தே திருவிழா கொண்டாடு

கின்றனர். காட்டில் மலர்ந்த பூ விளங்கும் சோலைகள் தோறும் தாம் விரும்பும் பெண் வண்டுடன் ஆண் வண்டுகள் ஒலி செய் கின்றன. இத்தகைய பொழுதில் யான் ஒருத்தியே அணிகலன் களை நெகிழச் செய்த தனிமையால் விளைந்த வருத்தத்துடன் மிக நீடிய இருளை உடைய இரவுப் பொழுதிலும் கண்கள் தூங்காமல் தவிக்கிறேன். இவ்வுலகத்தார் இயல்பொடு பொருந் தாது மாறுபடுவதால் இவ்வுலகம் என்னோடு போர் புரியுமோ? எனது துன்புறும் நெஞ்சம் தன் செயலுக்கு மாறுபாடாய் இரா நின்றது இவ்வுலகம் என்று உலகத்தோடு போர் செய்ய எழுமோ? ஒன்றும் தோன்றவில்லையே'' என்பது இப்பாடலின் பொருள்.

ஏற்கெனவே, காட்டிய குறுந்தொகைப் பாடல்கள் போல இப்பாடல் செறிவான பாடல் அன்று. அவல உணர்வை நீட்டி முழக்குவது. நிலவே, ஊரே, கானே,யானே என்று திட்டமிட்ட அமைப்பொழுங்குடையது. பாடலை இப்படித்தான் பாட வேண்டும் என்று மனத்திற்குள் முன்பே எண்ணிப் பார்த்து எதை முதலில் சொல்வது, எதை அடுத்துச் சொல்வது என்பதை எல்லாம் வரிசைப்படுத்தி பொருங்கொல் என்ற சொல்லைத் திரும்பத் திரும்பப் பயன்படுத்தி தன் ஆற்றாமையை மிக அருமையாகப் புலப்படுத்தியுள்ளார் புலவர். இப்பாடலில் வரும் தலைவி, பிரிவால் கண்ணுறக்கம் போனவள். வட்டமிடும் நிலவு அவள் வருத்தத்தைக் கூட்டுகிறது. நிலவு வெளிச்சத்தில் உற்சாகமாக விழாவைக் கொண்டாடும் ஊர், அவள் வருத்தத்தை யும் மிகுதிப்படுத்துகிறது. இந்நிலையில் தன்னைப் பிரிந்து காட்டு வழிச் சென்றிருக்கும் காதலனை நினைக்கிறாள். அவன் செல்லும் கானகத்தில் சோலைகளிலெல்லாம் ஆண் வண்டுகள் பெண் வண்டுகளோடு அகமகிழ்ந்திருப்பதை எண்ணுகிறாள். எனவே, இப்பாடலில் வரும் தலைவி உடன்போக்குச் சென்ற வளாகத்தான் இருக்க வேண்டும். ''கனையிருங் கங்குலும் கண்படை இலனே'' என்பதே தலைவியின் பிரிவுத் துயரை காட்டும் உச்சமாகும். இருப்பினும் முடிவுரைக்கு மேலும் ஒரு முடிவுரையாக, என்னொடு உலகம் போர் புரியுமா? அல்லது உலகத்தோடு என் அவல நெஞ்சம் போர் புரியுமா? என்று ஆற்றாமையை மிகவும் வெளிப்படையாகப் பேசுகிறாள்

இத்தலைவி. குறுந்தொகையில் அமைந்த பதுமனாரின் நெய்தற் பாடல் இப்பாடலுடன் எண்ணிப் பார்க்கத் தக்கது. அப்பாடலின் இறுதி அடி, 'ஓர்யான் மன்ற துஞ்சா தேனே' என்று நிறை வடைகிறது. இப்பாடல் சங்க இலக்கியத்தில் இடம் பெற் றுள்ள, இரண்டு நிலைமண்டில ஆசிரியப்பாக்களில் ஒன்று என்பதும், நிலவே, ஊரே, கானே,யானே என சீர்கூனாக இப்பாடலில் இடம் பெற்றுள்ளது என்பதும் குறிப்பிடத் தக்கது.

**1.2 பிரிவுத் துயரத்தை அழுத்தமாக வெளியிடுவது**

அகநானூற்றின் 45ஆம் பாடல் வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் கூறியதாக அமைந்த பாலைப் பாடல். இப்பாடலும் தலைவியின் பிரிவாற்றாமைத் துயரத்தை அருமையாக வெளிப் படுத்துகிறது.

வாடல் உழுஞ்சில் விளைநெற்று அம்துணர்
ஆடுகளப் பறையின், அரிப்பன ஒலிப்பக்
கோடை நீடிய அகன்பெருங் குன்றத்து
நீர்இல்ஆர் ஆற்று நிவப்பன களிறுஅட்டு
ஆள்இல் அத்தத்து உழுவை உகளும்
காடு இறந்தனரே, காதலர், மாமை,
அரிநுண் பசலை பாஅய், பீரத்து
எழில்மலர் புரைதல் வேண்டும், அலரே.
அன்னி குறுக்கைப் பறந்தலை, திதியன்
தொல்நிலை முழுமுதல், துமியப் பண்ணி,
புன்னை குறைத்த ஞான்றை, வயிரியர்
இன்இசை ஆர்ப்பினும் பெரிதே,யானே
காதலற் கெடுத்த சிறுமையொடு, நோய்கூர்ந்து,
ஆதிமந்தி போலப் பேதுற்று,
அலந்தனென் உழல்வென் கொல்லோ! பொலந்தார்
கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல்,
வான வரம்பன் அடல்முனைக் கலங்கிய
உடைமதில் ஓர்அரண் போல,
அஞ்சுவரு நோயொடு துஞ்சாதேனே!

''தோழி! மழை வறந்தமையால் வற்றிய வாகையின் கண் விளைந்து முதிர்ந்த நெற்றுக்களைக் கொண்ட கொத்து, ஆரியக் கூத்தர் கயிற்றில் ஏறி ஆடும் காலத்தில் கொட்டும் பறை ஒலிபோல இடையே விட்டு விட்டு ஒலியா நிற்கும். முது வேனிற் பருவம் நீடித்து நிற்கும் காலத்தில் அகன்ற பெரிய மலைக் குகையில் உறையும் புலிகள் நீரின்றி வறிதே கிடக்கும் கடத்தற்கரிய காட்டு யாற்றினூடே அவற்றின் கரைகளுக்கு மேலே உயர்ந்து தோன்றும் நீர் நாடிச் செல்லும் ஆண் யானைகளைக் கொன்று தின்று ஆள் வழக்கற்ற பாலை நிலத்தே மேலும் இரை தேடித் திரியும். அத்தகைய காட்டைக் கடந்து நம் காதலர் போயினார்.

என் மாமை நிறமானது அழுகிய நுண்ணிய பசலை பரத்த லால் பீர்க்கின் அழகிய மலரினை ஒப்பதாய் விளங்கும் என் நிலை கண்டு ஊரார் தூற்றும் அலரானது, அன்னி என்பான் குறுக்கை என்ற ஊரில் நடந்த போரில் தன்னை எதிர்த்த பகைவன் திதியன் என்பானது தொன்று தொட்டு நிலைபெற்று வரும் புன்னை மரத்தின் பெரிய அடியை வெட்டி வீழ்த்தி துண்டுகளாகத் துணித்த போது அவனது வென்றிப் புகழைப் பாடிப் பரவிய பாணர்களின் இனிய இசையால் உண்டான ஆரவாரத்தைக் காட்டிலும் பெரிதாகும்.

வானவரம்பன், பொன்னால் இயன்ற மாலையை அணிந்தவன், கடலின்கண் வந்த மாற்றார் படை அஞ்சி புடை பெயர்ந்து ஓடுவதற்குக் காரணமான வேற்படையை உடை யவன், போரில் அவன் மறவரால் கலக்கமுற்று ஓடி மதிலாகிய ஒரே ஒரு அரணை உடைய அரண்மனைக்குள் புகுந்து ஒளிந்து கொண்டவர் போன்று அச்சம் பொருந்திய பிரிவுத் துயரத்தால் கண் துயிலாதவளாகிய யான், காதலனைக் கடல் கொண்டு போனால், துயிலாது துன்புற்ற ஆதிமந்தி போல வருந்தி நெஞ்சுழந்து இவ்வுலகில் திரிவேனோ?'' என்பது இப்பாடலின் பொருளாகும். வெள்ளிவீதியார், தான் கூற விரும்பும் கருத்தைப் படிப்பவர் நெஞ்சில் பதிப்பதற்காகத் திட்டமிட்டுச் செய்திகளை விவரிப்பவர் என்பதற்கு இப்பாடல் மற்றுமொரு சான்றாகும். பாடலின் முதல் ஆறு அடிகள் காதலர் சென்ற காட்டு வழியின்

கொடுமையை விவரிப்பன. இச்செய்திக்குரிய எழுவாய் இறுதியில் இடம் பெற்றுள்ளது. ஆற்றாமை உணர்வைப் புலப்படுத்தும் வகையில் பாடல் 'வாடல் உழுஞ்சில்..' என்று தொடங்குகின்றது. பாடலின் அடுத்த இரண்டு அடிகள் (7-8) பிரிவால் பசலை படர்ந்த தலைவியின் அழகிழந்த தோற்றத்தை வருணிக்கின்றன. அடுத்த நான்கு அடிகள் ஒரு வரலாற்றுச் செய்தியை உவமையாகப் பயன்படுத்தி ஊரில் எழுந்த அலரின் மிகுதியை வெளிப்படுத்துகின்றன. அடுத்த 7 அடிகள் ஆற்றாமையால் துன்புறும் தலைவியின் நிலைக்கு ஒரு புறச் செய்தியையும் அகச் செய்தியையும் உவமையாக்குகின்றன. 19 அடிகளில் 7 அடிகள் தலைவியின் ஆற்றாமை குறித்தவை. ஏனையவை அது தொடர்பானவை. இப்பாடலின் 6ஆம் அடியில் மாமை என்றும், 8ஆம் அடியில் அலரே என்றும், 12ஆம் அடியில் யானே என்றும் எழுவாய்ச் சொற்கள் தொடங்குகின்றன. 19ஆம் அடியான 'அஞ்சுவரு நோயொடு துஞ்சாதேனே' என்ற இறுதி அடியோடு பாடல் முடியாமல் 15ஆம் அடியான 'அலந்தனென் உழல்வென் கொல்லோ!' என்பதுடன் பாடல் நிறையும் படியாக ஒரு வித்தியாசமான அமைப்புடன் பாடல் இயற்றப்பட்டுள்ளது. காதலனைத் தேடிய ஆதிமந்தியின் துயரம் அக்காலச் சமுதாயத்தில் மிகப் பரவலாகப் பேசப்பட்டிருக்க வேண்டும். குறுக்கைப் பறந்தலையில் நடந்த போரில் அன்னி பெற்ற வெற்றியும் வானவரம்பன் படையால் வளைத்துக் கொள்ளப் பட்ட அரண்மனைக்குள் இருந்தவர்கள் வருந்திய வருத்தமும் எவ்வாறு ஊரறிந்த வரலாற்றுச் செய்திகளாக இருந்தனவோ அதே அளவு ஆதிமந்தியின் அகவாழ்வுத் துயரமும் நாடறிந்த செய்தியாக இருந்திருக்க வேண்டும்.

இப்பாடலில், கவிஞர் பயன்படுத்தியிருக்கும் உள்ளுறைகள், தலைவியின் ஆற்றாமையை வெளிப்படுத்துவதாக இருப்பதும் கருதத் தக்கன. காதலன் கடந்து போன காட்டில் நெற்றுகள் ஒலிப்பது காதலன் பிரிந்து போன ஊரில் அலர் ஒலிப்பது போன்றது. கோடை நீடிய குன்றம் போல வருந்துபவள் தலைவி என்று உள்ளுறுத்தப்பட்டுள்ளது. களிற்றைத் தின்று மேலும் இரை தேடித் திரியும் புலி என்பது தலைவியின் எழிலைத் தின்று அவள் உயிரைப் பருக முயலும் பசலையைக் குறிக்கிறது.

இவற்றையெல்லாம் உள்ளுறைப் படிமங்கள் என்று குறிப்பிடுவர் உதயசூரியன்.

இப்பாடலில் தலைவியின் துயரத்திற்கு இரண்டு உவமைகள் கூறப்பட்டுள்ளன. 'காதலன் பிரிந்து போன காட்டை நினைத்து தலைவனுக்குத் துன்பம் ஏற்பட்டு விடுமோ? உயிர் ஆபத்து ஏற்பட்டு விடுமோ?' என்று கண் தூங்காதிருக்கும் தலைவியின் நிலைக்கு சேரன் மறவரால் வளைக்கப்பட்ட அரண்மனையில் உள்ளார் உவமையாகின்றனர். ஊரார் தூற்றும் அலரால் நெஞ்சுழலும் தலைவியின் நிலைக்குத் தலைவனைத் தேடி நெஞ்சுழன்று திரிந்த ஆதிமந்தி உவமையாகிறாள்.

காமமிக்க கழிபடர் கிளவி என்னும் துறையில் மருதத் திணையில் தோழி கேட்ப நாரைக்குக் கூறுவது போல அமைந்தது நற்றிணையின் 70ஆம் பாடல். தலைவியின் பிரிவாற்றாமைத் துயரை மிக அருமையாக வெளிப்படுத்துவது.

சிறுவெள்ளாங் குருகே சிறுவெள்ளாங் குருகே!
துறைபோகு அறுவைத் தூமடி அன்ன
நிறம்கிளர் தூவிச் சிறுவெள்ளாங் குருகே!
எம்மூர் வந்துஎம் ஒண்துறைத் துழைஇ
சினைக்கெளிற்று ஆர்கையை அவர்ஊர்ப்பெயர்தி
அனையஅன் பினையோ பெருமற வியையோ
ஆங்கண் தீம்புனல் ஈங்கண் பரக்கும்
கழனி நல்ஊர் மகிழ்நர்க்குஎன்
இழைநெகிழ் பருவரல் செப்பா தோயே?

'சிறிய வெண்மையான குருகே! சிறிய வெண்மையான குருகே! நீர்த் துறையிலே துவைத்த வெளுத்த தூய ஆடை போன்ற நல்ல நிறம் பொருந்திய சிறிய வெண்மையான குருகே! நீ எம்மூர் வந்து இங்குள்ள நீர் உண்ணும் துறைகளிலே துழாவி சினை கொண்ட கெளிற்று மீனைத் தின்கின்றாய். பின்பு அவர் ஊர்க்குப் பெயர்ந்து செல்கின்றாய். அவ்விடத்துள்ள இனிய புனல் இவ்வூரின்கண் வந்து பரக்கும் கழனியையுடைய நல்ல ஊரினை உடைய காதலனிடம் சென்று என்னுடைய அணிகலன்கள் கழலும் துன்பத்தை இதுவரை சொல்லாதோய்!

எம்மூர் வந்துண்ட நன்றி மறவாமல் இனி அவரிடம் கூறுதற்குத் தக்க அன்பினை உடையையோ? அன்றிப் பெரிய மறதி உடையையோ?' என்பது இப்பாடலின் பொருள்.

காம உணர்வு மிகுதியாகும் போது அஃறிணைப் பொருள் களிடம், உயிரற்ற பொருள்களிடம் ஆற்றாமயைக் கூறிப் புலம்பு வது சங்கக் கவிதை மரபாகும். செய்யுளியலில் சொல்லுந போலவும், கேட்குந போலவும் என வரும் நூற்பா அடியாலும் களவியலில் இடம் பெற்றுள்ள முன்னிலையாக்கல் என்பதாலும் இம்மரபை உணரலாம்.

இப்பாடலும் தேர்ந்தெண்ணிச் செய்யப்பட்டதாகும். 'அகவன் மகனே, அகவன் மகளே, மனவுக் கோப்பன்ன நன்னெடுங் கூந்தல் அகவன் மகளே' என்று ஔவையாரும் இதே போல விளிச் சொற்களை மூன்று முறை பயன்படுத்தி யுள்ளார். எனவே, இவ்வாறு பயன்படுத்துவது சங்கப் பொது மரபு எனத் தெளியலாம். ஆனால், இப்பாடலின் இறுதியில் வினாவாக வரும் விளித் தொடர் வெள்ளிவீதியாரின் தனித் தன்மையைப் புலப்படுத்துவதாக உள்ளது. முதல் மூன்று அடிகள் குருகை விளிப்பன; அதன் புற அமைப்பைப் படம் பிடிப்பன. அடுத்த இரண்டு அடிகள் குருகின் செயல் பற்றியது. அடுத்த அடி வினா வாக்கியமாக அமைவது. இறுதி மூன்று அடிகள் தலைவன், தலைவி நிலை, தலைவியின் வேண்டு கோள் ஆகியவற்றை உள்ளடக்கியது. குருகு நிறத்தால் மட்டு மல்ல; குணத்தாலும் வெண்மையானது. சின்னஞ்சிறியது. கபடு சூது தெரியாதது. அதனால், காதலர் வருத்தம் தெரியவில்லை போலும் என்பது இவ்விளிகளின் உட்குறிப்பு என்பர் அகத்திய லிங்கம்.

'வெண்மைக் குருகே, வெண்மைக் குருகே துறை போகு அறுவை தூமடிஅன்ன வெண்மைக் குருகே' என்று அதன் புறத் தோற்றத்தை மீண்டும் மீண்டும் குறிப்பிடுவதன் காரணம் தோற்றத்தில் தூய்மையாகவும் வெண்மையாகவும் இருப்பது போல அகத்திலும் நீ தூய்மை உடையையோ என்று தலைவி எண்ணு வதை உணர்த்துவதாக அமைந்துள்ளது. நாட்டுப்புறப் பாடல் ஒன்றில் தும்பைப் பூவேட்டி கட்டி தொடை குலுங்கப் போறவரே நின்

தும்பைப் பூ வேட்டியிலே துவண்டவளும் நான் அலவோ என்ற பாடலில் தலைவன் கட்டியிருக்கிற வேட்டி தும்பைப் பூ போல வெளுத்திருப்பது. ஆனால், அவன் உள்ளம் கருத்திருக்கிறது என்பது குறிப்பாக உணர்த்தப்பட்டிருக்கிறது. இப்பாடலும் அவ்வாறே விளியில் குறிப்புப் பொருள் உணர்த்துவதாக அமைந்துள்ளது. இப்பாடலில் வந்துள்ள 'ஆங்கண் தீம்புனல் ஈங்கண் பரக்கும் கழனி' என்பதும் குறிப்புப் பொருள் உடையதாகும். அங்குள்ள புனல் இங்கு வருவதால் அங்கு சென்றாலும் இரை பெறலாம்; ஊரும் அருகில்தான் உள்ளது என்ற கருத்து குறிப்பாகக் கூறப்பட்டுள்ளது. இவ்வாறே, குருகு கௌிற்று மீனை உண்டு ஊர் திரும்புகிறது என்பதும் குறிப்புப் பொருளுடையதாகும். தலைவியின் நலன் உண்டு ஊர் திரும்பும் தலைவனின் நிலைக்கு நாரை குறியீடாகிறது. ஒட்டு மொத்தமாகப் பார்க்கும் போது இப்பாடலில் மூன்று குறிப்புப் பொருள்கள் இடம் பெற்றுள்ளன. முன்பு பார்த்த அக நானூற்றுப் பாடல் போல 'இழைநெகிழ் பருவரல் செப்பா தோயே' என்ற இறுதி அடியில் பாடல் முடியாமல் 'அனைய அன்பினையோ பெருமறவியையோ' என்ற 6ஆம் அடியில் பொருள் நிறைகிறது. எனவே, பாட்டின் பொருளை இடையடி களில் முடித்துப் பாடலை அமைப்பது வெள்ளிவீதியாரின் தனித் தன்மைகளில் ஒன்று என்று தெரிகிறது. இப்பாடலில் ஆங்கண், ஈங்கண், சிறு, பெரு, மகிழ்நர், பருவரல் என வரும் முரண்கள் பாட்டிற்கு அழகு தருகின்றன. கழனி நல்லூர் மகிழ்நன் என்பது தலைவனின் பண்பைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது. 'மகிழ்நன் மாண் குணம் வண்டு கொண்டனகொல்? வண்டின் மாண் குணம் மகிழ்நன் கொண்டான்கொல்?' என வரும் ஐங்குறுநூற்றுப் பாட்டை இணைத்து எண்ணலாம். தலைவன் ஊர் நல்லூர். ஆனால், தலைவன் நல்லவனாக இல்லை. தலைவன் ஊரிலிருந்து வரும் புனல் தீம்புனல் *(இனிய புனல்)*. ஆனால், தலைவன் இனியவனாக இல்லை. தலைவன் மகிழ்நன். என் துயரத்தைக் கருதாமல் மகிழ்ச்சியாக இருக்கும் அவனிடம் என் துயரத்தைச் சொல்ல வேண்டாம் என்றெல்லாம் எண்ணிப் பார்க்கும்படியாக இப்பாடல் அமைந்துள்ளது.

குறுந்தொகை 386ஆம் பாடல் நெய்தல் திணையில் பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குக் கிழத்தி வன்புறை எதிரழிந்து கூறியது என்னும் துறையில் அமைந்தது.

**வெண்மணல் விரிந்த வீததை கானல்**
**தண்ணந் துறைவன் தணவா ஊங்கே**
**வால்இழை மகளிர் விழவுஅணிக் கூட்டும்**
**மாலையோ அறிவேன்மன்னே; மாலை**
**நிலம்பரந்தன்ன புன்கணொடு**
**புலம்புஉடைத்து ஆகுதல் அறியேன் யானே.**

'வெள்ளிய மணலில் மலர்கள் பரந்து கிடக்கின்ற சோலைகளை உடைய தண்ணிய கடல் துறையை உடைய தலைவன் என்னைப் பிரியாத முன்காலத்தில், தூய அணிகலன் களை அணிந்த மகளிர் விழாவுக்குரிய அலங்காரங்களைச் செய் கின்ற மாலைப் பொழுதையே அறிவேன். இனி அது கழிந்தது. அம்மாலைக் காலம் பூமி பரந்தது போன்ற துன்பத்தோடு தனிமையை உடையதாதலை அப்போது அறியேன்' என்பது இப்பாடலின் பொருள்.

தலைவனோடு கூடியிருந்த மாலைக் காலமும் பிரிந் திருக்கும் மாலைக் காலமும் இப்பாடலில் எடுத்துக் காட்டப் படுகிறது. அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில் எனத் தொடங்கும் பாரி மகளிரின் புறப் பாடலை அமைப்பு அடிப் படையில் இப்பாடலோடு இணைத்துக் கருதலாம். ஆனால், பாடலின் குறிப்புப் பொருள் அமைந்த அழகு வெள்ளி வீதியாரின் கவித்துவத்தை மெய்ப்பிப்பதாக உள்ளது. முதல் இரண்டு அடிகளில் தலைவனின் ஊர் வருணிக்கப்பட்டுள்ளது. தலைவனின் கடற்கரை மணல் வெண்மையானது. ஆனால், தலை வனின் உள்ளம் வெள்ளையாக இல்லை. மலர்கள் நிரம்பிய சோலை குளிர்ச்சியானது. ஆனால், தலைவன் உள்ளத்தில் இரக்கம் இல்லை என்று எண்ணிப் பார்க்க வைக்கிறது. பாடலில் 3ஆம் அடி தூய்மையான அணிகலன்களை அணிந்த பெண்கள் என்று ஊர் மகளிரைக் குறிப்பிடுகிறது. ஆனால், அவர்கள் அலர் தூற்றும் பண்பினால் தூய்மையானவர்களாக இல்லை என்பது

குறிப்பாக உணர்த்தப்படுகிறது. மூன்றாம் அடி இன்ப மாலையையும் இறுதி இரண்டு அடிகள் துன்ப மாலையையும் காட்டி நான்காம் அடியின் மூன்றாம் சொல் மன்னே என்ற ஒற்றைச் சொல்லில் தலைவியின் அளப்பரிய ஆற்றாமையை வெளிப் படுத்தி நிற்கிறது.

**1.3 தலைவனின் பரத்தமைப் பண்பை நேர்முகமாகக் கண்டிப்பது**

குறுந்தொகையின் 169ஆவது பாடல் மருதத் திணையில் கற்புக் காலத்து தெளிவிடை விலங்கியது என்னும் துறையில் அமைந்தது. தன்பால் பரத்தமை ஒழுக்கம் இல்லை என்று தலைவன் தெளிவிக்கும்போது தலைவி எம் உயிர் நீங்குவதாக என்பது. இப்பாடல் தலைவனின் பரத்தமைப் பண்பை நேரடியாகக் கண்டிக்கிறது.

சுரம்செல் யானைக் கல்உறு கோட்டின்
தெற்றென இறீஇயரோ ஐய மற்றுயாம்
நும்மொடு நக்க வால்வெள் எயிறே;
பாணர்,
பசுமீன் சொரிந்த மண்டை போல,
எமக்கும் பெரும்புலவுஆகி,
நும்மும் பெறேஎம், இறீஇயர்எம் உயிரே.

'யாம் நும்மோடு மகிழ்ந்து சிரித்த தூய வெள்ளிய பற்கள் பாலை நிலத்தில் செல்லும் யானையினது மலையைக் குத்திய கொம்பைப் போல விரைவாக முறிவனவாக. எமது உயிர் பாணர் தாம் பிடித்த பச்சை மீனைப் பெய்த மண்டையைப் போல எமக்கும் பெரிய வெறுப்பைத் தருவதாகி உம்மையும் யாம் பெறேஎமாகி அழிக' என்பது இப்பாடலின் பொருள்.

பச்சை மீன் பெய்த மண்டை என்பது தலைவியின் உயிரோடு கூடிய உடம்பைக் குறிக்கிறது. தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தால் தலைவி தன் உடம்பைவெறுப்புக்குரிய பொருளாகக் கருதுகிறாள். இப்படிப்பட்ட அவனை, கூடவும் பெறாமல் அழிய வேண்டும் என்பதையே நும்மையும் பெறாமல் உயிர் அழியட்டும் என்று நொந்து பேசுகிறாள். இப்பாடலும் சிறப்

பான அமைப்பினை உடையதாகும். முதல் 3 அடிகள் உடன் போக்கு வாழ்க்கையில் நிகழ்ந்த இன்பச் செயலை நினைவு கூர்வதாகவும் பின் 3 அடிகள் ஊரார் அலரால் தன்னைத் தானே அருவருத்து உயிரழிவை விரும்பும் தலைவியின் ஆற்றா மையைப் புலப்படுத்துவதாகவும் அமைந்துள்ளன. இறீஇயர் என்ற சொல் அளபெடையாக இரண்டு முறை இடம் பெற்று தலைவியின் பிரிவுத் துயரைப் புலப்படுத்துவதாக அமைக்கப் பட்டிருக்கிறது. நும்மோடு கூடிச் சிரித்த தூய வெள்ளிய பற்கள் என்பது தலைவனோடு கூடி மகிழ்ந்த தலைவியின் நிலையைக் குறிப்பாக உணர்த்துவதாக உள்ளது.

யாம், எமக்கு, பெரும்புலவு முதலிய சொற்களைக் கொண்டு உயிரழிவைப் புலப்படுத்தும் இப்பாடலை, தோழி கூற்றாக ஒரு சிலர் பொருள் கொண்டுள்ளார்கள். ஆனால், அக்கருத்து ஆய்விற்குரியது. கூற்றை நிகழ்த்துபவள் உடன் போக்குச் சென்ற தலைவி என்பது பாலை நில வருணனையால் தெரிகிறது. மகிழ்ச்சியாக இருந்த பொழுதுகளை நினைவு படுத்தி மனவருத்தம் தீர்க்க முற்படுகிறான் தலைவன். அதையே கருவியாகக் கொண்டு தன் வெறுப்பைக் கொட்டுகிறாள் தலைவி.

தோழி கூற்றாக அமைந்த மூன்று பாடல்களும் *(குறுந். 130,146; அக.362)* தலைவியின் காம வேட்கையைப் புலப் படுத்துவனவாய் அமைந்தனவே. தலைவன் பிரிவிடை அழிந்த தலைமகளை வற்புறுத்தும் தோழி, 'நீ ஆற்றாயாகின்றது என்னை? யான் அவர் உள்வழி அறிந்து தூது விட்டுக் கொணர் வேன் நின் ஆற்றாமை நீங்குக' எனத் தலைமகளை ஆற்று விப்பது 130ஆம் பாடல். இப்பாடலைத் தலைவி கூற்றாகவும் கருதலாம் என்ற கருத்தும் உள்ளது. ஆனால், தோழி கூற்று என்பதே பொருத்தமானது.

நிலந்தொட்டுப் புகார் வானம் ஏறார்
விலங்கிரு முந்நீர் காலின் செல்லார்
நாட்டின் நாட்டின், ஊரின் ஊரின்
குடிமுறை குடிமுறை தேரின்
கெடுநரும் உளரோ நம் காத லோரே.

'தோழி நம் காதலர் பூமியைத் தோண்டி உள்ளே புகார். ஆகாயத்தின்கண் ஏறார். குறுக்கிடுகின்ற பெரிய கடலின் மேல் காலினால் நடந்து செல்லார். நாடு நாடாக ஊர் ஊராக குடும்பம் குடும்பமாக ஆராய்ந்தால் அகப்படாமல் தப்பி விடுவாரா? கிடைத்து விடுவார்' என்பது இப்பாடலின் பொருள்.

தலைவனைக் காண முடியவில்லையே என்று தவிதவித்து அலை மோதும் உள்ளத்திற்கு ஆறுதல் கூறும் பாடல் இது. எப்படியும் கண்டுபிடித்து விடலாம் என்று நம்பிக்கை ஊட்டுவது. நிலத்தைத் தோண்டி உள்ளே செல்லுவதும் வானத்தில் ஏறுவதும் கடலில் நடந்து செல்லுவதும் சாதாரண மனிதர்களுக்கு இயலாத செயல் என்பதால் உ.வே.சா. தன் உரையில், ''சித்தி பெற்ற சாரணரைப் போல'' என்று உரை விளக்கம் அளித்துள்ளார். இம்மூன்று சித்திகளும் இருத்தி என்றும் இவற்றைப் பெற்ற சாரணர் எண்மர் என்று சைனர் கூறுவர் என்றும் புத்தர் தன் தந்தைக்கு ஞானம் உண்டாக்குதற் பொருட்டு இவ்வற்புதங்களை நிகழ்த்திக் காட்டினார் என்றும் விளக்க உரையில் அவர் கூறியுள்ளார்.

இப்பாடலில் காதலர் என்ற ஒரே எழுவாய் உள்ளது. நிலத்தின்கண், வானத்தின்கண், கடலின்கண் என ஏழாம் வேற்றுமை எல்லா வாக்கியங்களிலும் உள்ளது. புகாஅர், ஏறார், செல்லார் என எதிர்மறைப் பயனிலைகள் ஆளப்பட்டுள்ளன. இவ்வமைப்பு பாடலுக்கு அழகு தந்து நிற்பதுடன் தேடும் வேகத்தையும் புலப்படுத்துவதாக உள்ளது. தொடர்ந்து நாட்டின் நாட்டின், ஊரின் ஊரின் என்றெல்லாம் வரும் அடுக்குத் தொடர்கள் விரைவை மிகுதிப்படுத்திக் காட்டுவதாக உள்ளன. பாடலில் ஒருமுகப் போக்குடைய சிறிய வாக்கியங்கள் தலைவியின் காதல் தவிப்பையும் தேடுதல் வேட்கையையும் உணர்ந்து ஆறுதல் கூறும் தோழியின் உளவியல் நுட்பத்தை வெளிப்படுத்துகிறது. பாட்டின் இறுதி கெடுநரும் உளரோ? என வினாவாக அமைந்து கிடைப்பார் என்ற நம்பிக்கையை விடையாகத் தந்து நிறைகிறது.

இப்பாடலைத் தலைவி கூற்றாகக் கொண்டு விளக்கம் அளித்துள்ளார் செ.வை. சண்முகம். அவருடைய மிகையான

ஆய்வுக் கற்பனைக்குச் சான்றாக அப்பகுதிகள் உள்ளன. உ.வே.சா., இராகவையங்கார், சோமசுந்தரனார், சண்முகம் பிள்ளை நால்வருமே கால் என்பதற்கு உடல் உறுப்பு என்று பொருள் கொண்டுள்ளனர். செ.வை.ச. கால் என்பதற்கு காற்று என்று பொருள் கொண்டு, 'பாய்மரக் கப்பலில் செல்லுவதைக் குறிப்பதாகக் கொள்ளலாம்' என்கிறார். புதிதாகச் சொல்ல வேண்டுமென்ற விளைவே இவ்விளக்கத்திற்குக் காரணம் எனலாம். நிலத்தைவிட நீர்ப் பகுதி பெரியது என்பது உண்மைதான். ஆனால் நிலம், நீர் இரண்டையும் விட ஆகாயம் பெரியதல்லவா? அப்படியிருக்க நிலம், வானம், கடல் என்பன ஒன்றை விட ஒன்று பெரியன. எனவேதான், விலங்கிரு முந்நீர் எனக் கடலுக்கு மட்டும் இரண்டு அடைமொழிகள் தரப்பட்டுள்ன என்று செ.வை.ச. ஊகித்துக் கூறுவது எவ்வாறு பொருத்தமாகும்? தேவ குலத்தார் என்ற சங்கப் புலவரின் பாடலிலும், நிலத்திலும், வானிலும், நீரிலும் என்று வரிசைப்படுத்தப்பட்டிருப்பதால் இப்படிச் சொல்வது சங்க மரபு என்று புரிந்து கொள்ளலாம். இப்பாட்டை எடுத்துக்காட்டி, கால் என்பதற்கு அடிப் பகுதி *(ஆழமான பகுதி)* என்ற பொருள் கொண்டு நிலத்தில் புகுதலும், வானில் ஏறலும் கண்ணிற்குப் புலப்படாததைப் போல கடலின் அடிப்பகுதிக்குச் செல்லுதலும் கண்ணுக்குப் புலனாகாதது என்று மாதையன் விளக்கியிருப்பது *(பக்.111)* சிந்திக்கத்தக்கது. 'நம் காதலோரே' என்பது உளப்பாட்டுத் தன்மையாக அமைந்த சொல். பாடலின் வேகமும் விறுவிறுப்பும் நம்பிக்கையும் இள வயதுத் தோழியின் கூற்றே இது என்பதற்கு ஆதாரம். முதல் இரண்டு அடிகளில் நிலம், வானம், முந்நீர் என்று குறிப்பிடப்பட்டு பின்னிரண்டு அடிகளில் நாடு, ஊர், குடி என்று குறிப்பிடப்பட்டிருப்பது கவிஞர் அமைப்பழகோடு கவிதை புனைபவர் என்பதற்கு ஆதாரம்.

இப்பாடலை செவிலி கூற்றாகக் கொண்டு மகட்போக்கிய செவிலித் தாய் கூற்றில் அமைந்த பாடல்களில் எல்லாம் இல்லாத ஒரு பண்பு இச் செவிலி கூற்றில் இடம் பெற்றுள்ளது. ஏனைய மகட் போக்கிய செவிலிக் கூற்றுப் பாடல்கள் குறிப்பிட்ட ஒரு தலைவன் தலைவியை மட்டுமே அவர்தம் உடன் போக்கை, உள்ள உணர்வை மட்டுமே உணர்த்த இப்பாடலோ

உடன்போக்குக் காதலர்களைப் பொதுநிலையில் குறிப்பிட்டுள்ளது என்றும் ........ நம் காதலோரே என்பதை நம் சமூகத்தில் உள்ள காதலர் எனக் கொண்டு இப்பாட்டிலும் உடன்போக்குக் காதலர் அனைவரின் செயல்பாடு அடக்கிக் கூறப்பட்டுள்ளது எனக் கருதலாம் என்றும் விளக்கம் அளித்துள்ளார் பெ. மாதையன் *(பக்.110)*. ஆனால், இவ்விளக்கம் பொருத்தமற்றது. முன்னரே குறிப்பிட்டது போல இப்பாடலின் வேகமும் விறுவிறுப்பும் கூற்றிற்குரியவர் இள வயதினர் என்பதைப் புலப்படுத்துகின்றன. 'நம் காதலோரே' என்பதும் செவிலி கூற்றன்று என்பதற்குச் சான்று. இது உளப்பாட்டுத் தன்மையாக அமைந்து தோழியின் உளவியல் பூர்வமான ஆற்றுப்படுத்தும் ஆற்றலைப் புலப்படுத்துவதாக இருப்பதால் இப்பாடலைத் தோழி கூற்று என்று கொள்வதே பொருத்தமாகும்.

குறுந்தொகை 145ஆம் பாடல் தோழி கூற்றாக அமைந்தது. தலைமகன் தமர் வரைவொடு வந்து சொல்லாடுகின்றுழி வரைவு மறுப்பவோ எனக் கவன்ற தலைமகட்குத் தோழி சொல்லியதாக அமைந்தது.

அம்ம வாழி தோழி! நம் ஊர்ப்
பிரிந்தோர்ப் புணர்ப்போர் இருந்தனர் கொல்லோ
தண்டுடைக் கையர், வெண்தலைச் சிதவலர்,
நன்று நன்று என்னும் மாக்களோடு
இன்று பெரிது என்னும் ஆங்கணது அவையே

தோழி! கேட்பாயாக! அவ்விடத்திலுள்ள நம்மைச் சார்ந்த அவையில் உள்ளார் தண்டைப் பிடித்த கையினரும் நரையை உடைய தலையின்கண் துகில் அணியப் பெற்றவரும் நன்று நன்று என்று கூறும் தலைவன் தமரோடு இந்நாள் நீங்கள் வரப் பெற்றதால் பெருமை உடையதாயிற்று என்று முகமன் கூறுவர். எனவே, நமது ஊரின்கண் பிரிந்தவர்களைச் சேர்த்து வைப்போர் இருந்தனர் போலும் என்பது இப்பாடலின் பொருள். காதலுக்கு எதிர்ப்புத் தெரிவிப்பவர்களையே பார்த்துப் பழகிய நிலையில் காதலுக்கு ஆதரவாளர்கள் இருப்பதை எடுத்துக் காட்டி ஆற்றாமையால் வருந்தும் தலைவிக்கு ஆறுதல் கூறுகிறாள் தோழி.

அகநானூற்றின் 362ஆம் பாடல் குறிஞ்சித் திணையில் தலைவன் இரவுக்குறி சிறைப் புறமாகத் தோழி சொல்லியது என்ற துறையில் அமைந்தது.

பாம்புடை விடர பனிநீர் இட்டுத்துறைத்
தேங்கலந் தொழுக யாறு நிறைந் தனவே
வெண்கோட் டியானை பொருத புண்கூர்ந்து
பைங்கண் வல்லியம் கல்லளைச் செறிய
முருக்கரும் பன்ன வள்ளுகிர் வயப்பிணவு
கடிகொள வழங்கார் ஆறே; ஆயிடை
எல்லிற் றென்னான் வென்வேல் ஏந்தி
நசைதர வந்த நன்ன ராளன்
நெஞ்சு பழு தாக வறுவியன் பெயரின்
இன்றிப் பொழுதும் யான் வா ழலனே
எவன் கொல் வாழி தோழிநம் இடைமுலைச்
சுணங்கணி முற்றத் தாரம் போலவும்
சிலம்பு நீடு சோலைச் சிதர்தூங்கு நளிர்ப்பின்
இலங்குவெள் ளருவி போலவும்
நிலங்கொண் டனவால் திங்களங் கதிரே

'பாம்புகளை உடைய மலைப் பிளவுகளிலிருந்து வரும் குளிர்ந்த நீர், ஒடுங்கிய துறைகளின் வழியாக தேனுடன் கலந்து பாய்வதால் ஆறுகள் நிறைந்தன. வெள்ளிய கொம்பினை உடைய யானை பாய்ந்து குத்திய புண் மிகுந்து, பசிய கண்ணை உடைய ஆண் புலி கற்குகையின் உள்ளே ஒடுங்கி இருக்க, செம்முருக்கின் அரும்பினை ஒத்த கூரிய நகத்தை உடைய வலிய பெண் புலி அதனைக் காவல் செய்திருத்தலால் அவ்வழியில் ஒருவரும் செல்லார்.

அந்நிலையில் இருள் வந்து விட்டது என்று எண்ணாத வனாகி வெற்றி தரும் வேலைக் கையிற் கொண்டு, நம்மிடம் உள்ள காதல் கொண்டு வருவதால் வந்த நன்மையாளனாகிய நம் தலைவன் தன் எண்ணம் பயனின்றிப் போக நம்மைச் சேராது வறிதே மீண்டால், இன்று இவ்விரவுப் பொழுதும் யான் உயிர் தரித்திரேன். நமது முலையிடமாய் சுணங்கணந்த பரப்பில் கிடக்கும் முத்துமாலை போலவும், மலையினிடத்து நீண்ட

சோலையில் துளிகள் சிதறும் குளிர்ந்த வெள்ளி அருவி போலவும் திங்களின் அழகிய கதிர்கள் நிலத்தே பரவின' என்பது இப்பாடலின் பொருள்.

தலைவன் வரும் வழிக் கொடுமையையும் வராது போனால் தலைவி அடையும் துயரத்தையும் விவரிக்கும் பாடல் இது. பாம்புடை விடர பனிநீர் என்றது நீரின் தீமையை, இட்டுத் துறை என்றது துறையின் தீமையை, யாறு நிறைந்தன என்பது யாற்றின் தீமையை உணர்த்தியது. இப்பாடலை, 'இன்று இப் பொழுதும் யான் வாழலனே' என்ற அடியை வைத்து தலைவி கூற்றாகவும் கருதலாம். அவ்வடியில் தலைவியின் ஆற்றாமை உணர்வு முழு வீச்சில் வெளிப்படுகிறது. பொதுவாக, சங்கப் பாடல்களில் பெண் புலிக்கு இரை தேர்வதற்காக யானையை, பன்றியை, மானை இரையாகத் தேடும் ஆண்புலி குறித்த வருணனை *(பாலைநிலம் குறித்த வருணனைகளில்)* இடம் பெறுவது பெரு வழக்காகும். ஆனால், மரபுக்கு மாற்றமாக யானையோடு போரிட்டு புண்பட்ட ஆண் புலியைக் காவல் காத்து நிற்கும் பெண் புலி குறித்த வருணனை வெள்ளிவீதியார் பாடலில் மட்டும்தான் இடம் பெற்றுள்ளதாகத் தெரிகிறது.

குறுந்தொகை 44ஆம் பாடல் பாலைத் திணையில் இடைச் சுரத்துச் செவிலித்தாய் கையற்றுச் சொல்லியது என்னும் துறையில் அமைந்தது. உடன்போக்குச் சென்ற மகளையும் அவள் காதலனையும் தேடித் திரிந்து ஆற்றாமையுடன் செவிலி வருந்திக் கூறுவது. உ.வே.சா., சோமசுந்தரனார் ஆகியோர் இப் பாடலைச் செவிலி கூற்றாகக் கொள்கின்றனர். இராகவையங்கார் தலைவி கூற்றாகவும் கொள்ளலாம் என்று கருதி உள்ளார்.

காலே பரிதப் பினவே; கண்ணே
நோக்கி நோக்கி வாள்இழந் தனவே
அகல் இரு விசும்பின் மீனினும்
பலரே மன்ற இவ் வுலகத்துப் பிறரே

'என் கால்கள் நடந்து நடந்து நடை ஓய்ந்தன. எதிர் வருவோரைப் பார்த்துப் பார்த்து என் கண்கள் ஒளியை இழந்தன. நிச்சயமாக இவ்வுலகத்தில் நம் மகளும் அவள் தலைவனும்

அல்லாத பிறர் அகன்ற பெரிய வானத்தில் உள்ள மீன்களைக் காட்டிலும் பலராவர்'. தேடித் தேடி அலமந்த தவிப்பை பாட்டின் முதல் இரண்டடிகள் அருமையாகப் புலப்படுத்துகின்றன. காலே, பரிதப்பினவே, கண்ணே, வாள் இழந்தனவே, பலரே, பிறரே என ஆறு ஏகாரங்கள் சோக உணர்வை மிகுதிப்படுத்த வந்துள்ளன எனலாம். அவற்றில் நான்கு எண்ணல் அடுக்குகள், சிறந்த உவமை ஆட்சி, முதலடியில் மேற்கதுவாய் இயைபு *(1,3,4)* இறுதி அடியில் ஒரூஉ இயைபு, பாடலின் ஒருமுகப் போக்கு ஆகியவற்றால் இக்கவிதை வடிவம் சிறந்த கவிதையாக ஆக்கப்பட்டுள்ளது. இதே போன்ற எண்ணல் அடுக்கு உத்தியை நற்.348,355, அகம் 45 ஆகிய பாடல்களிலும் இவர் கையாண் டுள்ளார் என்பது குறிப்பிடத் தக்கது. காலே, கண்ணே, பிறரே என்ற மூன்று எழுவாய்களில் வந்துள்ள ஏகாரங்கள் பொருள் அழுத்தம் கொடுப்பதற்காக வந்துள்ளன என்று கருதலாம். இரண்டாம் அடியில் நோக்கி நோக்கி என்று கையாண்டிருப்ப தால் முதல் அடியில் நடந்து நடந்து என்று படிப்பவர் பொருள் கொள்ள முடிகிறது.

இப்பாடலைத் தலைவி கூற்றாகக் கொள்ளலாம் என்று கருதி உள்ளார் ஐயங்கார். ஆனால், அகப் பாடல்களில் தலைவி தலைவனைத் தேடிச் செல்லும் மரபு இல்லை. எனவே, இக் கருத்து ஏற்புடையதல்ல என்பார் ச.அ. *(பக்.25)*. பாடலில் பிறரே என்பதால் தேடப்படுவோர் ஒருவர் அல்லர் என்பது தெரிகிறது. வழியில் செல்பவரை உற்று உற்றுப் பார்ப்பது தலைவியின் செயலாகக் கொள்ள முடியாது. எனவே, ஐயங்கார் கருத்து பொருத்தமற்றது என்பார் செ.வை.ச. இப்பாட்டில் பேச்சுக் குறைவாக இருப்பதாலும் முதுமை காரணமாக மனம் பக்குவப்பட்டிருப்பதாலும் உடன்பாட்டு முறையில் வாக்கியங்கள் அமைந்துள்ளன என்பார் அவர். குறைவான செய்திகளைச் சொல்லி அதிகமான பொருளை உணர்த்துகிற பாடல் இது என்ற அவர் மதிப்பீடு ஏற்கத் தக்கதாகும்.

குறுந்தொகை 58ஆம் பாடல் தலைவன் கூற்றாக அமைந்தது. கழறிற்றெதிர்மறை என்னும் துறை அமைந்தது. பாங்கன் தலைவன் காதலை இடித்துரைக்கும்போது தலைவன் தன்

காதல் பொறுத்தற்கரியதாயிற்று என்று தெரிவிப்பது. இப் பாடலை தலைவி கூற்றாகவும் கொள்ளலாம் என்பர் ச.அ.

இடிக்கும் கேளிர் நுங்குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்றுமன் தில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்
கையில் ஊமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்று கொளற் கரிதே

'இடித்துரைக்கும் நண்பரே! நுமது காரியமாக காம நோயை நிறுத்தலைச் செய்தால் அது மிகவும் நல்லது. எனது விருப்பம் அது. கதிரவன் சுட்டெரிக்கும் வெம்மையான பாறை யில் கையில்லாத ஊமையன் தன் கண்ணினால் பாதுகாக்கும் வெண்ணெய் உருகுவது போல என்னிடம் உண்டான இக்காம நோய் பரவியது. பொறுத்துக் கொள்ளுதற்கு அரிதாக உள்ளது' என்பது இப்பாட்டின் பொருள்.

வெண்ணெய் ஞாயிற்றின் வெப்பத்தால் உருகிப் பரந்தது போல காம நோய் பரந்தது. அவ்வெண்ணெயைப் பாதுகாப்பவன் கை இல்லதவன்; ஊமையன். எனவே, அதனை எடுத்துப் பிறிதோர் இடத்தில் வைத்துப் பாதுகாக்கவோ, பிறரைக் கூவி அழைத்துப் பாதுகாக்கச் செய்யவோ அவனால் இயலாது. அது போல இக்காம நோயை அடக்கிப் பாதுகாத்தற்குரிய ஆற்றலும் பிறரிடம் வெளியிடற்குரிய நிலையும் பெற்றிலேன். எனவே காக்க இயலாதேன் ஆகினேன் என்று உவமையை விரித்து விளக்கியுள்ளார் உ.வே.சா. இக்கருத்தை மறுத்து வெண்ணெய் உருகுவது ஆகம் காம நோயால் உருகுவதற்கு உதாரணம். அதாவது காமக் காய்ச்சல் பரந்த உடம்பிற்கு உவமை என்கிறார் ஐயங்கார். வெண்ணெய்ப் பாவை போல மெலிகின்றாரே என்ற சிந்தாமணிப் பாடலை எடுத்துக்காட்டித் தன் கருத்தை நிறுவ முற்படுகிறார் அவர்.

இப்பாடலில் முதல் அடியின் மூன்று நான்கு சீர்களிலும் இரண்டாம் அடியின் தொடக்கத்திலும் உள்ள சொற்களை

நுங்குறை, ஆகநிறுக்கல் என்று பிரித்துப் பொருள் கொள்வர் உ.வே.சா. அவர் கருத்துப்படி ஆக என்பது வினையடை விகுதி. இராகவையங்காரும் சோமசுந்தரனாரும் ஆகம் + நிறுக்கல் என்று பிரித்துப் பொருள் கொள்வர். இவ்வாறே, இரண்டாம் அடியின் இறுதியில் உள்ள மற்றில்ல என்பதை மன் + தில்ல என்று பிரித்துப் பொருள் கொள்வர் உ.வே.சா. மற்று + இல்ல என்று கொள்வர் ஏனைய இருவரும்.

பாடலில் பயின்றுள்ள உவமை, வினை உவமை ஆகும். எனவே, உ.வே.சா. கொண்டுள்ளவாறே பொருள் கொள்வது சிறப்பானதாகத் தெரிகிறது. ஆகம் என்று பொருள் கொண்டால் உடலைப் பற்றிய கவலையே புலப்படும். உள்ள வயப்பட்ட காதல் உணர்வின் ஆழம் புலனாகாது. கேளிர் என்பது அண்மை விளி ஆகும். தலைவன் தன் காதலைப் பலரறியக் கூறாமல் மெதுவாகக் கூறியிருக்கிறான் என்பது தெரிகிறது. இடிக்கும் கேளிர் என்றும் நும் என்றும் தலைவன் குறிப்பிடுவதால் பாங்கன் பண்பில் சிறந்தவன் என்பது புலனாகிறது.

தலைவன் இடித்துரையை ஏற்பவன் தோழன் என்பது தெரிகிறது. கண்ணிற் காக்கும் என்பது தலைவனின் ஆசையைப் புலப்படுத்துகிறது. இப்பாட்டின் இறுதி அடியில் பரந்தன்று, கொளற்கு என்ற சொற்களை வகையுளியாக்கி ஈற்றெழுத்தை அடுத்த சீரில் கொண்டு போய்ச் சேர்த்திருப்பது காம நோய் பரவுதலையும் தாங்கிக் கொள்ள முடியாததையும் புலப்படுத்து கின்றன.

எதை நிறுக்கல் வேண்டும் என்பது பாட்டில் இல்லை. எது நோன்று கொளற்கு அரிது என்பதும் பாட்டில் இல்லை. இரண்டிற்கும் காம நோய் என்பது தான் எழுவாய். தலைவன் தன்னை நொந்து கொள்வதே பாட்டின் திரள் பொருள் ஆகும். அரிதே என்ற இறுதி ஏகாரம் அசைநிலை என்பர் உ.வே.சா. தலைவன் இயலாமையை வற்புறுத்துவதால் தேற்றமாகக் கொள்ளலாம். பாடலில் மன், தில்ல என்ற இரண்டு இடைச் சொற்க்ளைக் கையாண்டிருப்பதும் தலைவனின் ஊடாட்டத்தை வலியுறுத்துவதாக அமைக்கப்பட்டுள்ளது என்று கருதலாம்.

வெளியீட்டு அடிப்படையில்,

**6. அடர்த்தியான படிமங்கள்**

படிமம் என்பது காட்சிப்படுத்துவது. உவமை மூலமோ உருவகம் மூலமோ வருணனைகள் மூலமோ ஒரு நிகழ்வை - உணர்வை - காட்சிப்படுத்துவது படிமம் ஆகும். அறிவும் உணர்வும் இரண்டறக் கலந்த மனநிலையின் வெளிப்பாடு அது. அருவத் தன்மையை உருவத் தன்மையாய் மாற்றுகிற முயற்சி. வெள்ளி வீதியாரின் பாடல்களில் பரவலாகப் படிம ஆட்சி மிக்கிருப் பதைக் காண முடிகிறது. தலைவியின் இளமை வீணாவதை நல்ல பசுவின் இனிய பால் நிலத்தில் வழிந்து வீணாவது போல என்ற உவமை மூலம் காட்சிப்படுத்துகிறார். தலைவனின் காம நோய் அவன் உடம்பெங்கும் பரவிச் சுட்டெரிப்பதை வெண் ணெய் உருகுவது போல என்ற உவமை மூலம் புலப்படுத்து கிறார். தலைவியின் நாணமாகிய பண்பு காமமாகிய வெள்ளத் தால் மிக எளிதாக அழிந்துபடுவதை மண் அணை புது வெள்ளம் தாக்குவதால் கரைந்து விடுவதைப் போல என்ற உவமையால் வெளிப்படுத்துகிறார். இவ்வாறே, காம ஆசை நிரம்பிய தலைவியின் உடம்பிற்குப் பாணரின் பசு மீன் சொரிந்த பாத்திரத்தை உவமைப்படுத்துகிறார். ஒரு பாடலில் வாகைக் கொத்து, யானையைக் கொன்று மேலும் இரை தேடும் புலி ஆகிய உவமைகளைப் பயன்படுத்தி முறையே அலர் ஒலி, உடல் தின்று உயிரைக் குடிக்க முயலும் பசலை ஆகியவற்றை உள்ளுறையாக உணர்த்துகிறார்.

இவருடைய அகநானூறு, நற்றிணைப் பாடல்களில் இருக்கும் வருணனைகள், உவமைகள், விளிகள் ஆகியன பிராய்டிசப் படிமங்கள் என்று திறனாய்வாளர் பூரண சந்திரன் விளக்க முற்பட்டுள்ளார். ஆனால், அவை மேலாய்விற்குரியன.

**7. ஆர்வமூட்டும் தொடக்கங்கள்**

இடிக்கும் கேளிர் என ஒரு பாடல் தொடங்குகிறது. 'தோழன் இடித்துரைப்பது ஏன்? எதற்காக?' என்ற ஆர்வத்தைப் படிப்பவர் மனதில் தோற்றுவிக்கிறது. இவ்வாறே, 'காலே பரிதப்பினவே' என மற்றொரு பாடல் தொடங்குகிறது. 'கால் ஏன் நடை

தள்ளாடுகிறது?' என்ற கேள்வியை எழுப்புகிறது. ''அளிதோ தானே நாணே'' என்று தொடங்கும் பாடல் இரக்க உணர்வை எழுப்புகிறது. கொண்டாடப்பட வேண்டிய நாணம் ஏன் ஏக்கத்திற்குரியதாகிறது? என்ற வினாவை படிப்போர் நெஞ்சில் ஏற்படுத்துகிறது. இவ்வாறே, வெள்ளாங்குருகை மூன்று முறை விளிக்கும் ஒருபாடல் ஒருவரை மூன்று முறை விளிப்பது ஏன்? என்ற எண்ணத்தை ஏற்படுத்துவதாக அமைந்துள்ளது. இவ்வாறு வெள்ளிவீதியாரின் பாடல்கள் கூறுவோரின் மன நிலைக்கும் கருத்திற்கும் ஏற்ப பொருத்தமான தொடக்கங்களைக் கொண் டுள்ளன.

**8. சிறப்பான முடிவுகள்**

நற்றிணை 335ஆம் பாடல் 'காமம் பெரிதே களைஞரோ இலரே'' என வருத்தத்தை வெளிப்படுத்தி நிறைகிறது. 'காமம் நெரிதரக் கைந்நில்லாதே' என்று புலம்புகிறது மற்றொரு பாடல். 'இறீஇயர் எம் உயிரே' என்று வருந்தித் தேய்கிறது ஒரு பாடல். 'அஞ்சுவரு நோயொடு துஞ்சாதேனே' என்று அவல முறுகிறது மற்றொரு பாடல். 'உலகமொடு பொருங்கொல் என் நெஞ்சே' என்று துடிக்கிறது இன்னொரு பாடல். 'கெடுநரும் உளரோநம் காதலோரே' என்று வினா தொடுக்கிறது ஒரு பாடல். 'ப்ரந்தன்று இந்நோய் நோன்று கொளற்கு அரிதே' என்று பரிதவிக்கிறது வேறு ஒரு பாடல். 'இழைநெகிழ் பருவரல் செப்பாதோயே' என ஒரு பாடல் விளியில் நிறைகிறது. இவ்வாறு பெரும்பாலான பாடல்கள் மையக் கருத்திற்கேற்ப சிறப்பான முடிவுகளைப் பெற்றுள்ளன. தொடக்கம் என்னும் கூறை விட முடிவு என்னும் கூறு வெள்ளிவீதியார் பாடல்களில் சிறந்திருப்பதாகத் தெரிகிறது

**9.சொற்களை, தொடர்களை அடுக்கிப் பாடுவது**

குறுந்தொகை 44ஆம் பாடலில் நோக்கி நோக்கி என்றும், 130ஆம் பாடலில் நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின் குடிமுறை குடிமுறை என்றும், 146ஆம் பாடலில் நன்று நன்று என்றும் வருவன வெள்ளிவீதியார் சொற்களை அடுக்கிப் பாடுபவர் என்ப தற்குச் சான்றாகும். நற்றிணை 70ஆம் பாடலில் சிறுவெள்ளாங்

குருகே சிறுவெள்ளாங்குருகே துறைபோகு அறுவைத் தூமடி அன்ன நிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளாங்குருகே என வருவது தொடர் அடுக்கிப் பாடுவதற்கு எடுத்துக்காட்டாகும். பாத்திரக் கூற்றிற்கேற்பவே இது போன்ற அடுக்குகள் கையாளப்பட்டன.

**10. அணிநலம் அமையப் பாடுவது**

இவருடைய 13 பாடல்களில் ஒன்பது பாடல்களில் உவமைகள் மிகச் சிறப்பாக இடம் பெற்றுள்ளன. பெரும் பாலும், பொழிப்பு மோனையும் *(1,3)* ஒரூஉ மோனையும் *(1,4)* கையாளப்பட்டுள்ளன. இயைபுத் தொடைகள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. குறுந்தொகை 27ஆம் பாடலில் உண்ணாது, படாஅது, ஆகாது, உதவாது என்றும், 130ஆம் பாடலில் புகார், ஏறார் என்றும், 149ஆம் பாடலில் தானே, நாணே, மன்னே, இனியே என்றும், 386ஆம் பாடலில் மாலை, மாலை என்றும், நற்றிணை 348ஆம் பாடலில் பரந்து பட்டன்றே, விழவ யரும்மே, வண்டு இமிரும்மே என்று பரவலாக இயைபுச் சொற்கள் ஆளப்பட்டுள்ளன.

**11. கூன் பயன்படுத்தியிருப்பது**

அகநானூற்றின் 348ஆம் பாடலில் நிலவே, ஊரே, கானே, யானே என ஓரடி இடைவிட்டு அடிதோறும் கூன் பயன்படுத்தி உள்ளார். சங்க இலக்கியத்தில் அமைந்த இரண்டு நிலைமண்டிலப் பாடல்களில் இப்பாடலும் ஒன்று என்பது கருதத் தக்கது.

**12. புலவர் பெயருக்கும் கவிதைச் சொற்களுக்கும் இயைபு**

வெண்மை என்பது தூய்மையின் குறியீடாகும். வீதி என்பது நடத்தல், அடிக்கடி புழங்குதல் ஆகியவற்றோடு தொடர்புடையது. இவரது கவிதைகளில் வழங்குதல், உழத்தல், நடத்தல், பெயர்தல், தேர்தல் *(தேடுதல்)* போன்ற நேரடியான வீதி தொடர்புடைய சொற்களும் அதனோடு மறைமுகமாகத் தொடர்பு கொண்ட அலத்தல், உழலுதல், புலம்புதல் போன்ற சொற்களும் மிகுதி. எனவே, இவ்விரு தன்மைகளும் கொண்ட கவிதைகளின் ஆசிரியருக்கு வெள்ளிவீதி என்பது மிகவும் பொருத்தமாகவே தோன்றுகிறது *(பக்.123)*. ........ ஒரு

வகையில் வெள்ளி என்பது கிட்டாத காதலனையும் *(வானம்)* வீதி என்பது ஆற்றாது அலமந்து உழலுகின்ற தலைவியையும் *(பூமி)* குறிப்பதாக மாறி என்றைக்கும் நிறைவு பெறாத, ஆனால், மாறாத காவியக் காதலாக இதனை உருவகமாக்கு கின்றன. வெள்ளி, வீதி என்னும் முரண்பட்ட இரு படிமங்கள் நிறைவேறாத காதலாக (unrequited or Unreciprocated love) இதனை வடிவமைக்கின்றன *(பக்.123)* என்பர். இவ்விளக் கங்கள் வெள்ளிவீதியின் பாடலில் அமைந்துள்ள காம ஆற்றாமையைக் கருத்திற் கொண்டு கூறப் பெற்றவை ஆகும். இருப்பினும், இவரது பெரும்பாலான பாடல்களில் வெண்மை குறித்த செய்தி அல்லது அடைமொழிச் சொற்கள் வருகின்றன என்பது குறிப்பிடத் தக்கது ஆகும். எடுத்துக்காட்டாக, தீம்பால் *(பா.277 விசும்பின் மீன் பா.44)* வெண்ணெய் உணங்கல் *(பா.58)*, வெண்தலைச் சிதவலர் *(பா.146)* ஓங்குமணல், தீம்புனல் *(பா.149)* வால்வெள் எயிறு *(பா.169)*, வெண்மணல் *(பா.386)*, வெள்ளாங்குருகு *(நற்.70)*, திங்கள், மலிபுனல் *(நற்.335)*, நிலவே, பால்மலி கடல் *(ந்.348)* வெண்கோட்டி யானை, ஆரம், இலங்கு வெள்ளருவி, திங்களங்கதிர் *(அகம் 362)* ஆகியவற்றைக் கருதலாம்.

தொகுப்புரை

சங்கப் பெண்பாற் புலவர்களில் தலைவியின் காம உணர்வை மிக வெளிப்படையாகப் பேசியவர் என்பது உள்ளடக்க அடிப்படையில் வெள்ளிவீதியாரின் குறிப்பிடத்தக்க தனித்தன்மை ஆகும். வெளிப்பாட்டு நோக்கில் இவரது தனித் தன்மைகளாகப் பன்னிரண்டு செய்திகள் இக்கட்டுரையில் விவரிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒருமுகப் போக்கிற்கு முதன்மை அளித்துக் கருத்துகளை விவரிப்பது, அடர்த்தியான படிமங்களைக் கையாளுவது, சிறப்பான முடிவுகளை மையப் பொருளுக் கேற்ப அமைப்பது, முடிவுரையைப் பாட்டின் இடையில் அமைப்பது, அளபெடைச் சொற்களைக் கையாண்டு உணர்வு களைக் காட்சிப்படுத்துவது, இயைபுத் தொடையைப் பொருள் நலத்தோடு ஆண்டிருப்பது ஆகியவற்றைச் சிறப்பான தனித் திறன்கள் என்று குறிப்பிடலாம்.

## உ.வே.சா.வின் குறுந்தொகைப் பதிப்பு விசேடவுரையின் விசேடங்கள்

**உ.வே.சா.** பதிப்பித்த நூல்களுள் மிகு சிறப்புடைய நூல் குறுந்தொகையாகும். இந்நூலை 1937ஆம் ஆண்டு தம் 82ஆம் வயதில் பதிப்பித்தார். இந்நூல் 1947, 1955, 1962ஆம் ஆண்டுகளில் மறு பதிப்புகளைப் பெற்றுள்ளது. இப்பதிப்பை கூற்று, கூற்று விளக்கம், மூலம், பிரதி பேதம், பழைய கருத்து, ஆசிரியர் பெயர்கள், பதவுரை, முடிபு, கருத்து, விசேடவுரை மேற்கோளாட்சி, ஒப்புமைப் பகுதி என்னும் முறையில் தான் பதிப்பித்திருப்பதாக முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். இக் கூறுகளுள் விசேடவுரை என்பது உ.வே.சா.வின் புலமைத் திறனைப் பெரிதும் வெளிப்படுத்துவதாகும். பத சாரங்களும் இலக்கணச் செய்திகளும் பொருள் விளக்கங்களும் வரலாறு களும் இப்பகுதியில் எழுதப்பட்டுள்ளன என்பர். உ.வே.சா. இவ்விசேடவுரையை சொற்பொருள் நிலை *(இதில் ஆறுவகை)* சொற்களின் வடிவம் பற்றிய சிந்தனை, அடைகளின் தகுதி அல்லது பொருத்தத்தை ஆராய்தல், உவமைகளை விளக்குதல் வருணனைகளை விளக்குதல், பிற அணிகள் பற்றிய குறிப் புரைத்தல், குறிப்புப் பொருளை விளக்குதல், ஒன்றிற்கு அதிக மான கூற்றுப் பெறும் பாடல்களுக்கு உரை தருதல், பிரதி பேதங்களுக்கு உரை கூறுதல் *(பக்.45-76)* என்றெல்லாம் பகுத்துக் காட்டியுள்ளார் குளோரியா சுந்தரமதி *(1984)*.

1. இவற்றுள் ஒன்றிற்கு அதிகமான கூற்றுப் பெறும் பாடல் களுக்கு உரை தந்திருக்கும் சிறப்பினையும்.

2. விசேடவுரையில் அமைந்துள்ள பிற சிறப்புகளையும்,

(2.1 பாடலின் ஒரு செய்தியை/தொடரை விளக்கப் பின்னர் வரும் பாடலைச் சான்று காட்டுதல்.

2.2 ஒப்புமையுடைய பிற நூற்பகுதியை இணைத்துக் காட்டுதல்.

2.3 வடமொழிக் கருத்துகளை இணைத்துக் காட்டுதல்.

2.4 பாட பேதங்களுக்குக் காரணம் காட்டுதல்.

2.5 சொற்களுக்கு இன்னொரு பொருள் தருதல்.

2.6 வைப்பு முறைக்குக் காரணம் காட்டுதல்.

2.7. இலக்கணப் புலமையும் உரைப் பயிற்சியும்.

2.8 நய உரை தருதல் ஆகியன).

எடுத்துக்காட்டி உ.வே.சா.வின் உரைப் புலமையைச் சான்றுகளோடு விவரிப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**1. ஒன்றிற்கு அதிகமான கூற்றுப் பெறும் பாடல்களும் அதற்கு உ.வே.சா. வரைந்துள்ள உரையும்**

குறுந்தொகையில் 16 பாடல்களில் இரண்டு கூற்றுகள் தரப்பட்டுள்ளன. இத்தகைய பாடல்களில் 11 பாடல்களுக்கு *(எண்கள் 110, 120, 128, 130, 138, 142, 159, 169, 240, 258, 286)* முதல் கூற்றுக்கு ஏற்ப பதவுரையில் பொருள் விளக்கம் தந்து விசேடவுரையில் இரண்டாம் கூற்றுக்கு ஏற்ப விளக்கம் கூறியுள்ளார். ஐந்து பாடல்களுக்கு மட்டும் *(89, 100, 101, 104,367)* எந்தக் கூற்று சரி என்று சுட்டியுள்ளார். ஆனால், அதற்குரிய காரணத்தை விளக்கவில்லை. வேறு ஒரு பாடலில் விளக்கத்தில் *(90)* உரையாசிரியர் கூறும் கூற்றைச் சிறப்பானது என்று குறிப்பிட்டுள்ளார். அவ்விளக்கங்களை இங்குக் காணலாம்.

1.1 மருதத் திணையில் தோழி கூற்றாக அமைந்த 89ஆம் பாடலுக்குத் தலைமகன் சிறைப் புறத்தானாகத் தோழி தன்னுளே சொல்லுவாளாய்ச் சொல்லியது என்றும் ''தலைமகற்குப் பாங்காயினாற் கேட்பச் சொல்லி வாயின் மறுத்ததுமாம்'' என்று இரண்டு கூற்றுகள் உள்ளன. விசேடவுரையில்

இரண்டாம் கூற்றை விளக்கிய பின்னர், இக்கருத்து முன்னையதினும் சிறப்புடையதன்று என்பர் உ.வே.சா.

1.2 குறிஞ்சித் திணையில் அமைந்த 90ஆம் பாடலுக்கு வரைவு நீட்டித்த வழி ஆற்றாளாகிய தலைமகட்கு தலைமகன் சிறைப்புறமாகத் தோழி கூறியது என்று ஒரு துறை மட்டுமே கூறப்பட்டுள்ளது. ஆனால், நச்சினார்க்கினியர் தலைவி கூற்றாகக் கொண்டு *(தொல்பொருள் 9.13)* கேண்மை தோளை மெலிவித்தாயினும் எனக்கு அமைதியைத் தந்தது? யான் ஆற்றவும் தான் மெலிதல் பொருந்தாதது எத்தன்மைத் தெனத் தலைவி தோழிக்குக் கூறியவாறு காண்க'' என்பார். அவர் இச்செய்யுளைத் தலைவி கூற்றாகக் கொண்டாரென்று தெரிகின்றது. அது சிறப்புடையது என்பது உ.வே.சா.வின் குறிப்பு. உச்சிமேற்புலவர் கொள்ளும் நச்சினார்க்கினியர் உரையைப் பல இடங் களில் போற்றியுள்ளார் உ.வே.சா. என்பது இங்குக் குறிப் பிடத் தக்கது.

1.3 100ஆம் பாடலில் பாங்கற்கு உரைத்தது, அல்ல குறிப் பட்டு மீள்கின்றான் தன் நெஞ்சிற்குச் சொல்லியது என்று இரண்டு துறைகள் உள்ளன. இரண்டாவது கூற்றை விளக்கி எழுதிய பிறகு 'இக்கருத்து முன்னையதினும் சிறப்புடையதன்று' என்கிறார்.

1.4 101ஆம் பாடலுக்கு தலைமகட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது என்றும், ''வலித்த நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியதூஉமாம்'' என்று இரண்டு கூற்றுக்கள் உள்ளன. இரண்டாம் கருத்தை விளக்கிய பிறகு இக்கருத்து முன்னையதினும் சிறப்புடையதாகத் தோன்றுகின்றது என்கிறார் உ.வே.சா.

1.5 104ஆம் பாடலுக்குப் பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குக் கூறியது என்றும், சிறிய உள்ளிப் பெரிய மறக்க வேண்டாவோ வென்றதோழிக்குக் கிழத்தி கூறியதுமாம் என்று இரண்டு கூற்றுகள் உள்ளன. இரண்டாம் கருத்தை விளக்கிய பின்னர், இது முன்னையதினும் சிறப்புடையதன்று என்கிறார்.

1.6 367ஆம் பாடலுக்கு வரைவுணர்த்திய தோழி தலைமகட்குக் கழியுவகை மீதுராமை உணர்த்தியது என்றும் வரைவு நீடித்தவிடத்து ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி ஆற்றும் வகையால் ஆற்றுவித்ததூஉமாம் என்று இரண்டு கூற்றுகள் உள்ளன. இரண்டாம் கூற்றை விளக்கிய பிறகு இக்கருத்து முன்னையதினும் சிறப்புடையதாகத் தோன்றுகின்றது என்கிறார். எடுத்துக் காட்டப்பட்டுள்ள பாடல்களின் கருத்துகளை அவ்வக் கூற்றுகளுடன் இணைத்துப் பார்க்கும்போது பொருத்தமென்று பட்டதை இவ்வாறு வெளிப்படுத்தி உள்ளார். காரணத்தை அவர் விளக்கவில்லை என்றாலும் இவை ஏற்கத் தக்கனவாகஉள்ளன.

**2 பாடலின் ஒரு செய்தியை/தொடரை விளக்க முன்/பின் வரும் பாடலை எடுத்துக் காட்டுதல்**

2.1 ''யாயாகியளே விழவு முதலாட்டி'' என்பது 10ஆம் பாடலின் முதல் வரி. தலைவியே தலைவன் செல்வம் பெற்று மகிழ்ந்திருப்பதற்குக் காரணமாக உள்ளாள் என்பது இதன் பொருள். யாய் என்றும் விழவு முதலாட்டி என்றும் குறிப்பிடுவதற்குரிய காரணத்தை ஆராய்கிறார். 'யாயாகியளே மாஅயோளே' எனத் தொடங்கும் 9ஆம் பாடலையும் 'பெருநலக் குறுமகள் வந்தென இனி விழவாயிற்றென்னு மிவ்வூரே' என முடியும் 295ஆம் பாடலையும் விசேடவுரையில் எடுத்துக்காட்டுகிறார். தலைவியை யாயென்றது, புலத்தற்குக் காரணமான பரத்தமை தலைவன்பால் உளதாகவும் அதை மனங்கொள்ளாத கற்பின் சிறப்பை நோக்கி *(ஐங்.உரை)* என்ற விளக்கத்தை 9ஆம் பாடலின் விசேடவுரையில் தந்துள்ளார். விழவு முதலாட்டியென்றது தலைவி இல்லறம் நிகழ்த்தி வந்த பின்பே தலைவனுக்குச் செல்வம் உண்டாயிற்றென்பதைத் தெரிவிக்கின்றது'' என்று எழுதுகிறார். இக்கருத்து இன்றும் உலகியலில் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள செய்தியாகும். இவ்வாறே 13, 34, 45ஆம் பாடல்களிலும் முன்பின் வரும் பாடற் கருத்துகளை காட்டியுள்ளார்.

## 2.2 ஒப்புமையுடைய பிற நூற்பகுதிகளை இணைத்துக் காட்டுதல்

2.2.1 ''சாரல்நாட செவ்வியை யாகுமதி''என்ற தொடர் இடம் பெறும் 18ஆம் பாடல் விசேடவுரையில் பின்வருமாறு எழுதியுள்ளார். செவ்வி - தலைவியை வரைந்து கொள்ளும் நிலை. இதுவே பொருத்தமான விளக்கமாகும். பின்னர் கூடுதல் விளக்கம் தர முற்பட்டு தலைமகனுக்கு உவப்பில்லாத வரைவைப் பற்றிக் கூறப் புகுகின்றாளாத லின் அதற்குப் பாதுகாப்பாக முதலில், ''நீ செவ்விய நலத்தை உடையையாகுக'' என்று வாழ்த்தியதுமாம் என் கிறார். தொடர்ந்து தன்னினும் மிக்கார்க்கு இன்னாதவற்றைக் கூறுதற்கு முன் வாழ்த்துதல் மரபு. இதனைக் கண்ணகி வழக்குரைக்க வந்து நின்ற நிலையை வாயிற்காவலன் பாண்டியனுக்கு அறிவிப்பதற்கு முன், ''வாழியெங் கொற்கை வேந்தே வாழி'' *(சிலம்பு 20:30)* என்பது முதலியவற்றால் வாழ்த்திப் பின்கூறும் பகுதியும், சச்சந்தனுக்குக் கட்டியங்காரனது வஞ்சகச் செயலைக் கூறப் புக்க வாயில் காவலன் ''நீணில மன்ன போற்றி, நெடுமுடிக் குரிசில் போற்றி, பூணணி மார்ப போற்றி, புண்ணிய வேந்தே போற்றி'' *(சீவக. 264)* என்று கூறிய பகுதியும், அப்பகுதிக்கு வெய்ய சொல்லைக் கூறுத லுடைய வாயிலோன் போற்றியென்று கூறி, இறைஞ்சிக் கூறினானென்க *(ந)* என்றுள்ள உரையும் புலப்படுத்தும் என்று பிறநூற் கருத்துகளை இணைத்து விளக்கியுள்ளார். சிலம்பிலும் மணியிலும் வாழ்த்தும் சூழல் வேறுபட்டது. எனவே இவ்விளக்கம் ஒட்டா மண்ணாக உதிர்கிறது.

2.2.2 ''நன்னெடுங் கூந்தல் அகவன் மகள்'' என்ற தொடர் குறித்து 24ஆம் பாடல் விசேடவுரையில் நன்னெடுங் கூந்தலென்றது இகழ்ச்சிக் குறிப்பு. பயனிற் மூப்பிற் பல்சான்றீரே *(புறநானூறு 195:3)*, என்புழிப் பல்சான்றீர் என்பதையும், எழில்செய் கூகை *(சீவக.102)* என்பதையும் போல என்று எடுத்துக் காட்டியுள்ளார். இவ்விளக்கம் முற்றிலும் பொருத்தமானதாகும்.

2.2.3 122ஆம் பாடலில் ''பொழுது கண்டழிந்த தலைவி'', ''வாழியோ மாலை'' என்கிறாள். விசேடவுரையில் மாலையை வாழ்த்தியது குறிப்பு மொழி. தனக்குத் துன் பத்தைத் தரும் அது வாழ்வதற்குரியதன்றென்பது தலைவி யின் உள்ளக் கிடக்கை. செல்வலத்தைச் சிறக்க நின்னாளே *(புறநா. 196:15)* என்னும் ஆவூர் மூலங்கிழார் செய்யுட் பகுதியிற் ''சிறக்க நின்னாளே'' என்று வாழ்த்தியதைக் குறிப்பு மொழியென்று அதன் உரையாசிரியர் கூறியது காண்க. இங்ஙனம் வரும் குறிப்பு மொழிகளை, விடுத் தனன் வெலீயர் நின்வேலே *(புறநா. 201:17)* வாளோர் பெருமிதம் வாழியே *(தக்க. 562)* என்பவற்றிற் காணலாம் என்று பல ஒப்புமைப் பகுதிகளை இணைத்துக் காட்டி யுள்ளார். இவ்வாறே 19, 136, 173, 218, 276 ஆகிய பாடல்களிலும் ஒத்த கருத்துடைய பிறநூற் பாடல்களை எடுத்துக் காட்டியிருக்கிறார்.

**2.3 வடமொழிக் கருத்துகளை இணைத்துக் காட்டுதல்**

2.3.1 13ஆம் பாடலில் உள்ள பிணர்த்துறுகல் என்பதை விளக்கும் போது, பிணர் நால்வகை ஊறுகளுள் ஒன்று. இதனை ஜர்ஜாரா வென்பர் வடமொழியாளர் என்கிறார். 24ஆம் பாடலில் ஏழு குளிறு என்பதை விளக்கும் போது, இங்கே ஏழென்பது பலவென்பதைக் குறிக்க நின்றதொரு வாய்பாடு. ஏழென்பது அதற்கு மேலாய மிக்க பன்மை குறித்து நின்றது. ஒருவர் கூறை யெழுவ ருடுத்தென்றாற் போல *(குறள். 1266, பரிமேல்)* இவ்வாய்பாடுகளை அநந்த வாசியென்று கூறுவர் தக்கயாகப் பரணி உரை யாசிரியர் என்று எடுத்துக் காட்டியுள்ளார்.

34, 130, 260 ஆகிய பாடல்களில் விசேடவுரையிலும் வடமொழிக் கருத்துகளைக் குறிப்பிட்டுள்ளார்.

**2.4 பாடபேதங்களுக்குக் காரணம் காட்டுதல்**

2.4.1 குறுந்தொகை 25ஆம் பாடலில் ''குருகு முண்டுதான் மணந்த ஞான்றே'' என்று பாடங் கொண்டுள்ளார். விசேடவுரை

யில் தாம் மணந்த ஞான்றே என்ற பாடம் இருப்பது குறித்து விளக்க முற்பட்டு, ''அவன் மணந்த நிகழ்ச்சியை எண்ணிப் பெருமிதம் கொண்ட தலைவி தாமென்று பன்மையாற் கூறிக் கள்வனாதலைக் கூறுகையில் உண்டான செறல் பற்றித் தானென்று ஒருமையாற் கூறியதாகக் கொள்க'' என்று விளக்கம் தந்துள்ளார்.

2.4.2 316ஆம் பாடலில் ''துன்புறு துனைபுரி என்று பாடங் கொண்டு வருத்தம் மிக்க விரைந்த செலவு'' என்று பொருள் தந்துள்ளார். பின்னர் விசேடவுரையில் பரி வென்னும் பாடத்திற்குத் துன்புறுதலென்று ''பொருள் கொள்க'' என்கிறார்.

**2.5 இன்னொரு பொருள் தருதல்**

2.5.1 28ஆம் பாடலில், முட்டுவேன் கொல் தாக்குவேன் கொல் என்ற வரிக்கு, பதவுரையில், முட்டுவேனோ, தாக்கு வேனோ என்று கிடந்த வண்ணம் உரை எழுதி, பின்னர் விசேடவுரையில் முட்டுதல் உடம்பாற் தாண்டுத லென்றும், தாக்குதல் கோல் முதலிய கருவிகளால் தீண்டு தலென்றும் கொள்க. முட்டுதல் எரித்தலுமாம் *(தொல். களவு 21)* என்று விளக்கம் தந்துள்ளார். நிறைவில், ஊரினர் பொருட்டு சுவர் முதலியவற்றில் முட்டிக் கொள்வேனோ, தாக்கிக் கொள்வேனோ என்று பொருள் கூறலும் ஆம் என்கிறார்.

2.5.2 48ஆம் பாடலில் நன்னுதல் பசலை நீங்க அன்ன நசை யாகு பண்பினொரு சொல் இசையாது கொல்லோ காதலர் தமக்கே என்ற தொடருக்கு அன்ன என்று விளக்கம் எழுதியுள்ளார். பின்னர் அன்னம் என்று பிரித்து, அன்ன மானது காதலருக்கு ஒரு சொல்லை இசையாது கொல் லென்பதும் ஒருவாறு பொருந்தும் ஆயினும் சிறப் புடையதன்று என்று ஆய்வு நோக்கோடு எழுதியுள்ளார்.

155ஆம் பாடலில் அயர்மார் என்பதற்கு அயர்பவர் என்று பொருள் எழுதி பின்னர் அயர்மார் நாம் அயரும் பொருட்டு எனலுமொன்று என்று குறிப்பிட்டு, ''தலைவன் மீண்டு

வரின் தலைவியர் விருந்தயாதல் மரபு'' என்று விளக்கி குறுந்தொகை 398ஆம் பாடலை எடுத்துக்காட்டியுள்ளார்.

**2.6 வைப்பு முறைக்குக் காரணம் கூறுதல்**

63ஆம் பாடலில் ஈதலும் துய்த்தலும் என்ற தொடர் வந்துள்ளது. பதவுரையில் இரவலர்க்குக் கொடுத்தலும் இன்பங்களை அனுபவித்தலும் என்று பொருள் எழுதி யுள்ளார். பின்னர் விசேடவுரையில் ஈந்து எஞ்சியவற் றையே துய்த்தல் இல்வாழ்வான் கடப்பாடாதலின் ஈதலை முன்னர்க் கூறினான். விருந்தோம்பி மிச்சில் மிசைவான் *(குறள் 85)* என்பதை ஓர்க. பின்னர் ஈதலாகிய அறமும் துய்த்தலாகிய இன்பமும் பொருளால் ஆகுமாதலின் அம்முறை பற்றிக் கூறினான் எனலுமாம் என்று விளக்கி இக்கருத்தை விளக்கும் பிற இலக்கியப் பகுதிகளையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

**2.7 இலக்கணப் புலமையும் உரைப் பயிற்சியும்**

2.7.1 ''யாயும் ஞாயும்'' என்ற 40ஆம் பாடல் விசேடவுரையில் யாய் என்பது தன்மையோடு தொடர்புடையதென்பது. யாயென்பது தன்மையோடு ஒட்டுதலின் முறைப் பெயரெனினும் உயர்திணையாம் *(தொல்.பெயர்26)* என நச்சினார்க்கினியர் குறிப்பிட்டிருப்பதை எடுத்துரைத்து, தொடர்ந்து கல்லாடரும் தெய்வச் சிலையாரும் எழுதியுள்ள உரைப் பகுதிகளையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

2.7.2 குறுந்தொகை 155ஆம் பாடலில் மாலை நனி விருந்தயர்மார் என்று வரும் தொடரில் அயர்மார் என்பதற்கு அயர்பவர் என்று பொருள் எழுதி தந்தொழின் முடிமார் *(முருகு. 89)* என்றவிடத்து முடிமாரென்பதற்கு முடிப்பாரென்று நச்சினார்க் கினியர் உரையெழுதியிருத்தல் காண்க என்கிறார்.

2.7.3 குறுந்தொகை 161ஆம் பாடலில் ''பொழுதும் எல்லின்று'' என்பதற்கு ''சூரியனும் விளக்கம் இலனாயினான்'' என்று உரை எழுதியுள்ளார். விசேடவுரையில் ''எல்லினர் புகினே *(மலைபடு.346)* என்றவிடத்து நச்சினார்க்கினியர்

இராக் காலத்தை யுடையீராய்'' என எல்லின்றென்பதைக் குறிப்பு வினையாகக் கொண்டனர். அதை ஆராய்கையில் எல்லின்றென்பதே இருண்டதென்னும் பொருள் தரும் ஒரு சொல்லென்று கருதவும் இடமுண்டு என்று விளக்கி யுள்ளார்.

2.7.4 குறுந்தொகை 169ஆம் பாடலில் ''நும்மும் பெறேஎம்'' என்பதில் ''பெறேஎ மென்ற முற்றுவினை இங்கு வினையெச்சப் பொருளில் வந்தது'' என்கிறார்.

2.7.5 குறுந்தொகை 253ஆம் பாடலில் ''கெடப் பின் நீடலர்'' என்ற தொடரை விளக்கும்போது, கெட என்ற எச்சம் நீடலரென்றதன் கண்ணுள்ள அலரென்ற வினைக் குறிப்பைக் கொண்டு முடிந்தது என்று குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறே 43, 174, 186, 191, 233 ஆகிய பாடல்களின் விசேடவுரைகளிலும் தொல்காப்பிய உரையாசிரியர்களின் விளக்கங்களைப் புலப்படுத்தியுள்ளார். தொல்காப்பிய உரைகளிலும் குறிப்பாக நச்சினார்க்கினியர் உரையிலும் ஆழ்ந்த பயிற்சியும் ஈடுபாடும் கொண்டவர் உ.வே.சா. என்பது இவற்றால் புலனாகிறது.

## 2.8 நயவுரை தருதல்

புணர்ந்து நீங்கும் தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லுவதாக அமைந்த குறுந்தொகை 70ஆம் பாடலில் இடம் பெற்றுள்ள ஓதி, ஒண்ணுதற் குறுமகள், நறுந் தண்ணீரள், சில மெல்லியவே கிளவி, அணைமெல்லியள், யான் முயங்குங்கால் என்பதற்கு விசேடவுரையில் ஓதி, ஒண்ணுதற் குறுமகள் என்றமையின் காட்சி இன்பமும், சில மெல்லியள் கிளவி என்பதனாற் கேள்வியின்பமும், தண்ணீரள் அணை மெல்லியள் என்றமையால் ஊற்றின்பமும், நறுநீரள் என்றமையின் உயிர்ப்பின்பமும், யான் முயங் குங்கால் என்பதனாற் குறிப்பாகச் சுவை இன்பமும் ஒருங்கே பெறுதலை உணர்த்தினாள் என்றும் விளக்கி, நலம் பாராட்டும் திறனாய்வாளராகத் தன் புலமையை வெளிப்படுத்தியுள்ளார் உ.வே.சா.

ஆசிரியர் பெயருக்குரிய காரணத்தைச் சில பாடல்களில் விளக்கியுள்ளார் *(காண்க. பாடல் எண் 224)*.

## தொகுப்புரை

சங்கப் பாடல்களைப் புரிந்து கொள்ள உதவும் முக்கிய மான உறுப்புகளுள் கூற்றும் ஒன்றாகும். எனவே, இரண்டு கூற்று குறிப்பிட்டுள்ள பாடல்களில் எது சரியான கூற்று என் பதைச் சில பாடல்களில் சுட்டிக் காட்டியுள்ளார் உ.வே.சா. ஆனால், விரிவாக விவாதிக்கவில்லை. பன்னூற்களை உரை எழுதிப் பதிப்பித்துள்ளமையால் தொடர்புடைய பிற நூற் பகுதி களையும் உரைச் செய்திகளையும், நூலின் முன் பின் வரும் கருத்துத் தொடர்புடைய பாடல்களையும் எடுத்துக்காட்டியிருப்பது அவர்தம் நினைவுத் திறனைப் புலப்படுத்துகிறது. நச்சினார்க் கினியர் உரைகளையே பெரிதும் மேற்கோள் காட்டியுள்ளார். வடமொழிக் கருத்துகளை இணைத்துக் காட்டியிருப்பது பிற மொழிப் புலமையைக் காட்டுவதாக உள்ளது. பாட பேதங்களுக்குக் காரணம் காட்டுவதும், நயவுரை தந்திருப்பதும் அவர்தம் திறனாயும் உள்ளத்தை வெளிப்படுத்துகின்றன. சுருங்கச் சொன்னால் ஆயுந்தொறும் அறிவு பெருகும் வண்ணம் உ.வே.சா.வின் குறுந்தொகை விசேடவுரை அமைந்துள்ளது.

# திருமுருகாற்றுப் படை காட்டும் சமயநிலை

**ப**த்துப் பாட்டில் ஆற்றுப்படை நூல்கள் ஐந்து. அவற்றுள் ஏனையவற்றை விடத் தனிச் சிறப்பு வாய்ந்தது நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படை ஆகும். ''நக்கீரர் ஆற்றுப்படையின் நோக்கத்தையே முழுவதும் வேறு கொண்டு அவ்வகை நூல்களுக்குப் புதியதொரு கௌரவத்தைக் கொடுத்தனரென்று தான் நாம் கொள்ள வேண்டும்'' என்பர் பேராசிரியர் வையா புரிப் பிள்ளை *(இலக்கிய தீபம் 1952, பக்.14)*. இந்நூலின் சிறப்புக் குறித்து ''தமிழ் இலக்கிய உலகில் திரு'' என்ற சிறப் பினைப் பெற்ற முதல் நூல் - பாட்டுடைத் தலைவன் பெயரையே தன் பெயராகக் கொண்ட முதல் நூல் - இறைவன் பெயரால் இயன்ற முதல் நூல் திருமுருகாற்றுப்படை ஆகும். அருச்சனை பாட்டேயாகும் என்ற கொள்கையை - முருகனை முன்னிறுத்தித் தமிழாற்பெயர் கூறிப் போற்றலாம் என்ற எண்ணத்தை முதன்முதலில் தோற்றுவித்ததும் இந்நூலே ஆகும்'' என விரித்துரைப்பர் பேராசிரியர் மு.பெரி.மு. இராம சாமி *(நக்கீரர், பக்.63)*. பாட்டும் தொகையுமாகிய 18 மேற் கணக்கு நூல்களுள், பரிபாடல், கலித்தொகை, திருமுருகாற்றுப் படை ஆகியன காலத்தாற் பிற்பட்டவை என்பது பெரும்பாலான தமிழறிஞர்கள் ஏற்றுக் கொண்டுள்ள கருத்து. புராணக் கதைகள் கூறும் கருத்துகளை ஏற்றுப் போற்றும் நிலையை இந்நூல்களில் காணலாம். சங்க நூல்களுக்குக் காலத்தால் முற்பட்ட தொல் காப்பியத்தில் பாடாண் திணை குறித்த ''தாவில் நல்லிசை'' என்று நூற்பாவில் ஆற்றுப்படை குறித்த இலக்கணம் விரித்

துரைக்கப்பட்டுள்ளது *(தொல்.புறத்-நூற்பா. 36 -3 -6)*. ஆற்றுப் படை என்ற பெயரும் தொல்காப்பியத்தில் கையாளப்பட்டுள்ளது *(தொல்.எச்ச.66)*. ஆற்றுப்படுத்த என்ற தொடர் முருகாற்றுப் படை, முல்லைப்பாட்டு, குறுந்தொகை, பரிபாடல், கலித் தொகை, அகநானூறு ஆகிய சங்க நூல்களில் பத்து இடங்களில் பயின்று வருகிறது *(இராமசாமி ப. 118)*. முருகாற்றுப் படை தொல்காப்பியம் கூறாத ஒன்று என்பர் டாக்டர் மா. இராச மாணிக்கனார் *(பத்துப் பாட்டு ஆராய்ச்சி, பக்.38, பக்.47)*. அன்பரை ஆண்டவனிடம் ஆற்றுப்படுத்துதல் தொல்காப்பிய இலக்கணத்திற்கு வேறானது என்பர் டாக்டர் மு. கோவிந்தசாமி *(தமிழ் இலக்கியவரலாறு, இலக்கியத் தோற்றம், பக்61)*. புதிது புனையப்பட்ட இத் திருமுருகாற்றுப்படை முன்னை நூல் வழக் கொடும் மேற்கூறியாங்குச் சற்றே வேறுபாடுடையதாயினும் மற்று மாறுபாடுடையதன்று என்பர் புலவர் இறைக்குருவனார் *(செந்தமிழ்ச்செல்வி-ஆற்றுப்படையும் ஆறுபடை வீடும் - சிலம்பு 53, பரல் 12, ஆகஸ்ட் 1979, ப.579)*.

சமய அடிப்படையில் தனி இலக்கியம் படைக்கும் முதல் முயற்சி மேற்கொண்டவர் நக்கீரர். புரட்சிப் போக்கும் புதுமை நாட்டமும் கொண்ட நக்கீரர் சங்க இலக்கிய மரபை மீறினார் எனினும் சாலும் என்பர் இராமசாமி *(பக்.65 நக்கீரர்)* இம் மதிப்பீட்டுரை ஏற்கத் தக்கதாகும்.

**பெயர்க் காரணம்**

ஆற்றுப்படுத்துதல் என்பதற்கு வழிப்படுத்துதல் என்பது பொருளாகும். வள்ளல் ஒருவரைப் பாடிப் பரிசு பெற்ற கலைஞர் ஒருவர் தம்மைப் போன்ற மற்றொரு கலைஞரை அவரிடம் ஆற்றுப்படுத்துவது ஆற்றுப்படை ஆகும். கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகியோர் ஆற்றுப்படுத்தப்படுபவர் என்று கூறும் தொல்காப்பியம். பொருட்செல்வம் என்பது தருதற்கு எளியது. வீடு பேற்றுச் செல்வமோ பெறலரும் பரிசில் ஆகும். பெறலரும் பரிசிலைப் பெற ஆற்றுப்படுத்துவதால் இந்நூல் தனிச் சிறப்புடையதாகும். பெறலரும் பரிசில் என்பது வீடுபேறு என்று வழிவழியாக விளக்கம் தந்துள்ளனர். ஆனால் அண்மை யில் திருமுருகாற்றுப் படைக்கு பேராசிரியர் ம.பெ. சீனிவாசன்

எழுதியுள்ள உரை விளக்க நூலின் முன்னுரையில் பெறலரும் பரிசில் என்பது இவ்வுலகில் ஒருவனைப் பற்றற்றவனாக ஆக்குவதையும் குறிக்கும் என்று கூடுதல் விளக்கம் தந்துள்ளார் பேராசிரியர் தமிழண்ணல். இக்கருத்து புதுமையாக இருக்க லாமே தவிர, பொருத்தமாக இல்லை. பெறலரும் பரிசில் என்பதற்கு விழுமிய என்று அடைமொழி கொடுக்கப்பட்டிருக் கிறது. உலக வாழ்வில் பெறும் பேறுகள் விழுமிய செல்வங்கள் அல்ல.

''வீடு பெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடு பெற்றான் ஒருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்ததென்று பொருள் கூறுக'' என்று விளக்கம் அளிப்பர் நச்சினார்க்கினியர் *(பத்துப்பாட்டு, நச்சி உரை, உ.வே.சா. பதிப்பு, பக்.79).* இக்கருத்தை கவிப்பெருமாள் *(பரிப் பெருமாள்)* பெயர் புலப்படாத உரையாசிரியர், பரிமேலழகர், பரிதியார் ஆகிய உரையாசிரியர்களும் ஏற்றுள்ளனர். ஆனால், முன்னையோர் கூறும் இயல்பான விளக்கத்தை ஏற்காமல் டாக்டர் மொ.அ. துரை அரங்கனார், ''முருகன் அருள் பெற முருகன் ஆனவன், அன்பர்களைத் தேடித் திரியும் எல்லா ஆற்றலும் உடைய முருகனை அவ்வன்பர்களிடத்தில் ஆற்றுப்படுத்துவதே திரு முருகாற்றுப்படையாம்'' என்று விளக்குவர். ஆனால், அன்புடைய ஒருவனைத் தானே நாடி வந்து அருள் செய்யும் முருகனை—எல்லா ஆற்றலும் உடைய முருகனை மற் றொருவன் ஆற்றுப்படுத்துவானேன்? இது முன்னுக்குப் பின் முரண்பட்ட விளக்கமன்றோ *(பக்.66, நக்கீரர்)* என்று மறுப்பர் இராமசாமி. இக்கருத்து ஏற்கத் தக்கதாகும். ஆனால், ஏனைய ஆற்றுப் படைகளின் பெயர் இயல்பை நோக்குமிடத்து, முருகாற்றுப் படையும் அவை போன்றே இறைவன் பெயரால் பெயர் பெற்றது என்று கூறவும் இயல்புள்ளது என்றும் முருகு உள்ளம் கொண்டவனை முருகன் என்றும், அவனை ஆற்றுப் படுத்தும் பாட்டினை அவன் பெயரையே வைத்து ''முருகாற்றுப் படை'' என்றும் வழங்குதல் பொருத்தமேயாகும் என்றும் அவர் கூறும் விளக்கம் *(பக்.68-69)* ஏற்புடையதாக இல்லை. முருகனை ஆற்றுப்படுத்துவது என்பதற்கு முருகு உள்ளங் கொண்டவனை என்று பொருள் கொள்வது பொருத்தமாக

இல்லை. முருகன்கண் ஆற்றுப்படுத்துவது என ஏழாம் வேற்றுமை விரித்துப் பொருள் கூறுவதே ஏற்கத் தக்கதாம்.

**நூலமைப்பு**

முருகாற்றுப்படை 317 அடிகளைக் கொண்டது. ஆசிரியப் பாவான் இயன்றது. முருகன் தோற்றத்தையும் ஏற்றத்தையும் விவரிப்பது. அவன் எழுந்தருளியுள்ள இடங்களைக் குறிப்பிடுவது. வெவ்வேறு வழிபாட்டு முறைகளை விவரிப்பது.

**நூல் கூறும் இடங்கள் ஆறுபடை வீடுகளா?**

திருமுருகாற்றுப்படையில் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, ஏரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என ஆறு இடங்கள் சுட்டப்பட்டுள்ளன. முதல் நான்கும் தனித் தலங்கள் என்பதில் கருத்து மாறுபாடில்லை. நான்காவதாக உள்ள ஏரகம் எது என்பதில் கருத்து வேறுபாடு உள்ளது. அது சுவாமி மலையைக் குறிக்கிறது என்பர் சிலர். 15ஆம் நூற்றாண்டைச் சார்ந்த அருணகிரிநாதர் இக்கருத்தினரே. ''சீர்மிகு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும் ஏரகமும் நீங்கா இறைவன்'' என்ற சிலப்பதிகார அடிகட்கு *(24,47,48)* உரை எழுதும்போது வெண்குன்றம் என்பதற்கு சுவாமிமலை என்று பொருள் எழுதியுள்ளார் சிலம்பின் அரும்பத உரையாசிரியர். ஏரகம் என்பது மலை நாட்டகத்து ஒரு திருப்பதி என்பர் நச்சினார்க்கினியர். அங்கு பூசை செய்வோர் நீராடி ஈர ஆடையுடன் சென்று வழிபடுவர் என்ற பாடற் குறிப்பால் அது துளு நாட்டில் உள்ள குமார சேத்திரம் என்ற தலத்தைக் குறிக்கிறது என்பர் மா. இராசமாணிக்கனார் *(பத்துப்பாட்டு ஆராய்ச்சி பக்.228 -230)*. நச்சினார்க்கினியர் வழி, மலைநாடு என்பது சேர நாடே. திருவனந்தபுரத்தை அடுத்த பத்மநாபபுரத்தின் வடகிழக்கே உள்ள குமார கோயில் என்பதே திருவேரகம் என்பர் பேராசிரியர் வி.மு. சோமசுந்தரம் பிள்ளை என எடுத்துக் காட்டுவர் இராமசாமி *(நக்கீரர், பக்.103)*.

குன்றுதோறாடல் என்பது குன்றுகள் அனைத்தையும் குறிப்பது. பழமுதிர்சோலை என்பது மதுரை அருகில் உள்ள

அழகர் மலையைக் குறிக்கிறது என்பதும் ஏற்புடையதாகாது. பாடலில் இடம் பெற்றுள்ள பழமுதிர்சோலை குறித்த வருணனை இன்றைய பழமுதிர்சோலைக்குப் பொருத்தமாக இல்லை என்பர் இராசமாணிக்கனார் *(பத்துப்பாட்டு பக்.235- 236).* குன்றுதோறாடல் என்பது போல பழமுதிர்சோலை என்பதும் பல்வேறு இடங்களைக் குறிப்பிடுகிறது என்பதே பொருத்தம். நச்சினார்க்கினியர் குன்றுதோறாடல், பழமுதிர்சோலை ஆகிய வற்றைத் தலங்களாக எண்ணவில்லை. ந.மு. வேங்கடசாமி நாட்டார் நக்கீரர் என்ற நூலில் ஆறுபடை வீடு என்பது பொருந் தாது என்று விளக்கியுள்ளார். குன்றுதோறாடல் ஒரு தலமாகாது. பழமுதிர்சோலை என்பது அடைமொழி என்பர் வேங்கடராமச் செட்டியார். இவை ஆறும் ஆறுபடை வீடுகள் என்று வழிவழியாக வழங்கி வரும் கருத்தும் பொருத்தமில்லாதது. போரிடுவதற்காகப் படைகள் தங்கியிருக்கும் இடமே ''படை வீடு'' என்று குறிப்பிடுவதற்கு உரியது. அந்த அடிப்படையில் சூரனோடு போர் புரிய முருகன் படைகளோடு தங்கியிருந்த திருச்சீரலைவாய் ஒன்று மட்டுமே படை வீடாகும். முருகன் படையெடுத்து மீண்ட பிறகு தங்கியிருந்த திருப்பரங்குன்றமும் ஒரு வகையில் படை வீடாகும் என்ற கருத்தும் சமாதானமே ஆகும்.

''பாசறையைக் குறிக்கும் படை வீடு'' என்னும் சொல் முன்னரே வழக்காற்றில் இருந்தமையாலும் முருகன் படைத் தலைவன் எனப் பெற்றாமையாலும் ஆற்றுப்படை என்றதனை ஒட்டி ஆற்றுப்படை வீடு என்று நீட்ட வாய்ப்பேற்பட்டது. முருகன் ஆறுமுகன் எனப் பெற்றமையாலும் அவனுக்குரிய திருமந்திரம் ஆறெழுத்து எனப்பட்டமையாலும், முருகனை வளர்த்தோர் ஆரல் *(கார்த்திகை)* மகளிர் அறுவர் எனப் பெற்றமையாலும், ஆறு என்னும் எண்ணுப் பெயர் முருகனோடு பல்லாற்றானும் தொடர்புபடுத்தப்பட்டமையின் ஆற்றுப்படை என்பதிலுள்ள ஆறு என்னும் இடப் பெயர், ஆறு என்னும் எண்ணுப் பெயராகக் கொள்ளப்பட்டது. படவே முருகன் ஆறுபடை வீடுகளில் எழுந்தருளியிருக்கிறான் என்றும் அவ்வாறுமே அவனுக்கு உகந்த திருப்பதிகளாமென்றும் பொது மக்கள் கருதுவராயினர்'' என்று புலவர் இறைக்குருவனார் கூறும் கருத்து ஆறுபடை வீடு

என்னும் வழக்கு எப்படி ஏற்பட்டது என்பதற்கு உரிய விளக்கமாக அமைந்துள்ளது *(செந்தமிழ்ச் செல்வி மு.கு. பக்.581-582).*

முருகன் திருவுருவத்திற்குப் பதிலாக வேலை வைத்து வழிபடும் வழக்கத்தை சிலம்பு கனாத்திறம் உரைத்த காதை சுட்டுகிறது.

முருகக் கடவுளின் கோயிலில் பழங்காலத்தில் முருகன் உருவம் வைக்கப்படாமல் முருகனைக் குறிக்கும் அடையாள மாக வேலாயுதம் வைத்து வழிபடப்பட்டது என்கிறார் மயிலை சீனி. வேங்கடசாமி *(நுண்கலைகள் பக்.20).* உண்மையில் படை வீடு என்பது வேல் இருக்கும் இடம் என்பதைக் குறிக்க வந்த தாகவே தெரிகிறது என்பார் ப. அருணாசலம் *(முருக வழிபாடு, வேலும் மயிலும், தமிழ் ஒளி இதழ் 11, 1973-74, பக்.37).* வேங்கடராமச் செட்டியார் ஆற்றுப்படை அறு வகையாகப் பகுக்கப்பட்டதற்கு ''இறைவன் பரநிலையைத் திருப்பரங் குன்றத்திலும் பருநிலையைத் திருச்சீரலைவாயிலிலும் அவன் உடனிலையைத் திருவாவினன்குடியிலும் உணர்த்தி, அவனை அம்மூவகையில் வைத்து வழிபடும் அடியவர்கள் மூவகை யினரையும் முறையே திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர் சோலை என்ற மூன்று பகுதிகளிலும் வைத்து உணர்த்துகின்றனர்'' என்றும் முருகன் குறமகள் வழிபாட்டில் நேரில் வந்ததாகக் கூறியிருப்பது உயிரோடுடனாம் தன்மையை விளக்கும் பொருட்டேயாம் என்றும் விளக்கம் தந்துள்ளார் *(பெறலரும் பரிசில், பக். 74-75).*

அறிவாற்றல் விஞ்சித்தோன்றும் நிலையை திருப்பரங் குன்றத்திலும், செயலாற்றல் விஞ்சித்தோன்றும் நிலையை திருச்சீரலைவாயிலிலும், இச்சையாற்றல் விஞ்சித் தோன்றும் நிலையை திருவாவினன்குடியிலும் வைத்து விளக்கினார் எனவும், திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை ஆகிய மூன்று பகுதிகளில் அம்முருகனை அறிவால் வழிபடுவோர், செயலால் வழிபடுவோர், இச்சையால் வழிபடுவோர் ஆகிய மூவகை அடியார் நிலைகளை விளக்கியுள்ளார் எனவும் கொள்ள லாம் *(பக். 150)* என்றும் விளக்கியுள்ளார்.

சித்தாந்த நோக்கில் திருப்பரங்குன்றம் மூலாதாரம் என்றும், திருச்சீரலைவாய் சுவாதிட்டானம் என்றும், திரு வாவினன்குடி மணிபூரகம் என்றும், திருவேரகம் அநாகதம் என்றும், குன்றுதோறாடல் விசுத்தி என்றும், பழமுதிர்சோலை ஆக்ஞை என்றும் விளக்கம் தந்துள்ளார் மீ.ப. சோமு *(பக். சித்தர் இலக்கியம், தொகுதி 1)*

**முருகாற்றுப்படை கூறும் செய்திகள்**

முருகனின் தோற்றப் பொலிவு *(1-11)*, சூரர மகளிர் இயல்பு *(12-41,)*, பேய் மகளிரின் துணங்கைக் கூத்து *(47-56)*, சூரனை வென்ற வெற்றிச் சிறப்பும் பெருமையும் *(45-46 மற்றும் 57-61)*, திருப்பரங்குன்றத்தில் முருகன் வீற்றிருத்தல் *(66-77)*, திருச்செந்தூரில் ஆறுமுகமும் பன்னிரு கரமும் உடையவனாக யானை மீது ஏறி வரும் தோற்றம் *(78-125)*, ஆவினன்குடியில் முனிவரும் கந்தருவரும் சிவன், திருமால், இந்திரன் ஆகிய மூவரும் தேவரும் வந்து வழிபட மடந்தை யோடு வீற்றிருக்கும் காட்சி *(126-176)*, இரு பிறப்பினராகிய அந்தணர் இயல்பும் அவர்கள் ஏரகத்தில் உறையும் காட்சியும் *(177-189)*, வேலன் குரவையாடலும் குன்றுதோறும் ஆடல் புரியும் முருகனின் தோற்றமும் *(190-217)*, முருகன் உறையும் பல்வேறு இடங்கள் *(218-226)*, குறமகள் வெறியாட்டு மூலம் முருகனை ஆற்றுப்படுத்துதல் *(227-244)*, முருகனைத் துதிக்கும் முறைகள் *(245, 277-280)*, வேண்டும் பரிசில் *(278-280, 295)*, கூளியர் பரிந்துரை *(281-286)*, அருவிக் காட்சி *(296-317)*, முருகன் அருள்புரிதல் *(298-294)* என முருகாற்றுப்படை முருகனைக் குறித்துக் கூறும் இன்றியமையாச் செய்திகளைத் தொகுத்துக் கொண்டு இப்பகுப்புகளில் முற்சங்க நூல்கள் கூறும் கருத்துக் களையும் இணைத்துக் கருதினால் முருகாற்றுப்படை கூறும் சமயநிலை குறித்துத் தெளிவு பெறலாம்.

**முருகனின் தோற்றமும் ஏற்றமும்**

உலக உயிர்கள் மகிழும்படி கடலிடைத் தோன்றி, மேரு மலையைச் சுற்றி வருகின்ற கதிரவனைப்போல, தூரதூரங் கடந்து சுடர் வீசும் பேரொளி உடையவன் முருகப் பெருமான்.

அடியார்களைத் துன்பம் நீக்கிப் பாதுகாக்கும் திருவடியை உடையவன். பகைவர்களாகிய அசுரர்களை அழிக்கும் இடி போன்ற திருக்கையை உடையவன். குற்றமற்ற கற்பினை யுடைய வாணுதலின் கணவன் என முருகனின் தோற்றத்தையும் ஏற்றத்தையும் விவரிக்கிறது முருகாற்றுப்படை.

பரிபாடல் நீங்கலான பிற சங்க நூல்கள் முருகன் செம் மேனி வண்ணன், செந்நிற ஆடை அணிந்தவன், முன்னியது முடிப்பவன், தீய உயிர்களைச் சினம் கொண்டு செறுப்பவன் என்று மட்டுமே சுட்டுகின்றன.

ஒண்செஞ்சீறடி *(முருகா.13)*, செவ்வேற் சேஎய் *(முரு.60)*, செய்யன் சிவந்த ஆடையன் *(முருகா.206)* என முருகாற்றுப்படை குறிப்பிடுவது போல, ''உடையும் ஒலிய லும் செய்யை'' *(பரி.19.97)* என்றும், ''ஞாயிற்றேர் நிறத்தகை காஅய் கடவுள் சேஎய் செவ்வேள்'' *(பரி.5:12-13)* எனவும், ''உருவும் உருவத்தீ ஒத்தி முகனும் விரிகதிர் முற்றா விரிசுடர் ஒத்தி'' *(பரி.19.99-100)* என்றும் பரிபாடல் குறிப்பிடுகிறது. ஒண் செய்யோன் என்கிறது புறநானூறு *(56.8)*. ''வேல்வல்லான் நிறனே போல் வெருவந்த சேயும்'' என்கிற முல்லைக்கலி *(4:14)*. இந்நூல் வெண்மையான ஆடையும் அவனுக்கு உரியது என்கிறது *(முல்லைக்கலி பா 5:17)*. மேற்கூறிய கருத்துகளின் அடிப்படையில் முருகனின் பேரொளிப் பண்பும் தெய்வானை கணவன் என்பதும் முருகாற்றுப்படை தரும் கூடுதல் செய்தி களாகும்.

**சூரனை வென்ற வெற்றிச் சிறப்பு**

முருகன் சூரனை அழித்த செய்தி, பரிபாடலில்

பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச்
சேயுயர் பிணிமுகம் ஊர்ந்தமர் உழக்கித்
..............................
நோயுடை நுடங்குசூர் மாமுதல் தடிந்து
..............................
மாய அவுணர் மருங்கறத் தபுத்தவேள் *(5:1-7)*

என்று வருணிக்கப்பட்டுள்ளது.

திருமுருகாற்றுப்படையில்

இருபேருருவின் ஒருபேரி யாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வலம் அடங்கக் கவிழிணர்
மா முதல் தடிந்த மறுஇல் கொற்றத்து
எய்யா நல்லிசைச் செவ் வேற்சேஎய்

என்னும் அடிகளில் கடலிடை மாமரமாய் நின்ற இரு பேருருவம் உடைய சூரனை வேல் கொண்டு அழித்து அறுமுகனான முருகனின் வெற்றிச் செயல் விவரிக்கப்பட்டுள்ளது.

சூர் என்பது சங்க இலக்கியங்களில் அச்சம், தெய்வம், சூரர மகளிர் ஆகியவற்றைக் குறிக்கும் சொல்லாக ஆளப்பட்டுள்ளது.

சூருடை நனந்தலை *(நற்.7:1)*, சூரமை நுடக்கம் *(ஐங்.71:1)*, சூருடை முதலைய *(அகம். 72:8)* ஆகிய இடங்களில் அச்சப் பொருளிலும் சூர் உறு மஞ்ஞை *(குறிஞ்சி 169, நற். 359:9) 373:3, குறுந்.52:2, பதிற்.31:35, அகநா.72:8, 297:11)* ஆகிய இடங்களில் தெய்வம் என்ற பொருளிலும், சூரரமகளிர் *(அகம் 162:25)*, சூர் மகள் *(அகம். 198:15, நற் 34:4)* ஆகிய இடங்களில் சூரர மகளிர் என்ற பொருளிலும் வந்துள்ளது.

முருகன் சினம் மிக்கவன் என்பது திரும்பத் திரும்பப் பேசப் பெற்றுள்ளது *(எ.டு)* முருகற் சீற்றத்து உருகெழு குரிசில் *(புறம் 16:12)* பொருந. 131).

அணங்குடை முருகன் *(புறம்.299:6)*

முருகுறழ் முன்பொடு கடுஞ்சினம் செருக்கி *(நற் 225:1)*

கடுஞ்சின விறல்வேள் *(பதிற். 11:6)*

முருகு உடன்று கறுத்த கலியழி மூதூர் *(பதிற். 26:12)*

முருகுறழ் முன்பொடு பொருதுகளஞ்சிவப்ப
*(அகம் 181:6)*

வெல்போர்ச் சேஎய் பெருவிறல் *(மலைபடு. 493)*

இச்சொல் பெரும்பாலான இடங்களில் சூர்மலை *(ஐங். 294.4)*, சூருறை அடுக்கம் *(குறுந். 376:2)*, சூருறை வெற்பன் *(அகம் 98:5)*, சூருடைச் சிலம்பு *(நற்.373:5)* என மலையோடு தொடர்புபடுத்தியே பேசப்பட்டுள்ளது என்றும், அச்சம் என்னும் பொதுப் பொருள் தரும் இச்சொல் பெரும்பாலான சங்கப் பாடல்களில் மலையிலும் மலை சார்ந்த இடத்திலும் வரும் தெய்வமாகவே காட்டப்பட்டுள்ளது என்றும் குறிஞ்சி நில மக்கள் வாழ்வில் துயரம் தரும் தெய்வமாகக் கருதப்பட்ட சூர் முருகனோடு இணைத்துப் பேசப்பட்ட நிலையில் சூரன் என்னும் பொருளில் ஆளப்படுகிறது'' என்று கூறுவர் மாதையன் *(வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழ மரபுக் கதைகளும் தொன்மங்களும், பக்.78)* சூர் என்ற சொல் சூரர மகளிர் என்ற இடத்துப் பெண் தெய்வத்தைக் குறித்தாலும், பெரும்பாலான இடங்களில் ஆணாகவே குறிப்பிடப்பட்டுள்ளது.

நளியிரும் பரப்பின் மாக்கடன் முன்னி
அணங்குடை யவுண ரேமம் புணர்க்கும்
சூருபடை முழுமுத றடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு *(பதிற்று 11.3-6)*

பகைவர்க்குச் சூர் நிகழ்ந் தற்று நின் தானை
*(பதிற்.31:35-36)*

சூர்நவை முருகன் சுற்றத் தன்ன நின்
கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர் *(புறம் 23.4-5)*

சூர் மருங் கறுத்த சுடரிலை நெடுவேல் *(அகம் 59:10)*

வெண்டிரைப் பரப்பின் கடுஞ் சூர் கொன்ற
பைம்பூட் சேஎய் *(பெரும்பாண். 457-458)*

மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப் போர்
வேல்வல்லான் *(கலி. 104:13)*

பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு
மாய அவுணர் மருங்கறத் தபுத்த வேல் *(பரி.5:1,7)*

பாரிருட் பௌவத்தின் உள்புக்குப் பண்டொருநாள்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே *(சிலம்பு 24.9)*

எனச் சூர், சூரன் குறித்த செய்திகள் சங்கப் பாடல்களில் பதிவாகியுள்ளன. இவற்றுள் முருகன் கடலுட் புகுந்து சூரனை அழித்த செய்தி முதன்முதலாகப் பதிற்றுப் பத்திலும் பின்னர் பெரும்பாணாற்றுப்படையிலும் கூறப்பட்டுள்ளது. சூரன் மாமரமாய் நின்றான் என்ற செய்தி சங்க இலக்கியங்களுள் காலத்தால் பிற்பட்ட *(பரிபாடல் 21.28-29)*, கலித்தொகை *(104.13)* திருமுருகாற்றுப்படை *(60-61)* ஆகியவற்றில் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளது என்று விரிவாக எடுத்துக் காட்டியுள்ள மாதையன், ''முருகனின் பகைவனான சூர் வட மொழி மரபோடு இணைந்து சூரபன்மாவாகக் கருதப்பட்ட நிலை பின்பழந்தமிழ் இலக்கியங்களில் உருவானது'' என்கிறார். முருகன் பற்றி ஆய்ந்த பிரெட் டபிள்யு குளோதியும் (Fred W. Clothey), கமில் சுவெலபிலும் (Kamil V. Zevebil) சூர் பற்றிய எண்ணம் தமிழ்ச் சிந்தனையே என்பதை வலியுறுத்தியுள்ளனர். பதிற்றுப் பத்து இரண்டாம் பத்தின் தலைவனான இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் காலத்திலேயே *(கே.என். சிவராஜ பிள்ளை கருத்துப்படி 20-50* A.D., *கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி கருத்துப்படி* A.D. 1556) முருகன் சூரனைக் கொன்ற செய்தி குறிக்கப்பட்டுள்ளது. இதைத் தொடர்ந்து புறநானூறு, அக நானூறு, பெரும்பாணாற்றுப்படை ஆகியவற்றிலும் பின்னர் பரிபாடல், கலித்தொகை, திருமுருகாற்றுப்படை எனும் பின் பழந்தமிழ் இலக்கியங்களிலும் இக்கதைச் செய்தி இடம் பெற்றுள்ளது. இவை இதன் திராவிடப் பண்பையே வெளிப் படுத்துவனவாய் உள்ளன'' என்று விளக்கம் அளித்துள்ளார் *(பக்.80-82)* அவர்.

பால் பாகுபாடு இன்றி சூர் என்று குறிப்பிடப் பெற்ற முருகனின் பகையை சூரபதுமன் என ஆணாகவும் முருகன் வேல் கொண்டு வென்றான் என்றும் புராணக் கருத்துகளை இணைத்துப் பேசியுள்ளது முருகாற்றுப்படை.

சூரன் குதிரை முகமும் மனித உடலும் ஆகிய இரு வேறுபட்ட வடிவம் உடையவன். அவனை ஆறாகி வேறுபட்ட

வடிவுடைய அறுமுகன் மேற்சென்று வென்றான் என்ற வடமொழி மரபுஇங்கு இணைக்கப்பட்டுள்ளது.

**குன்றைப் பிளந்த செயல்**

முருகன் குன்றம் பிளந்தான் என்பதனை, குன்றங் கொன்ற, குன்றாக் கொற்றத்து விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ *(266-267)* என்று குறிப்பிடுகிறது திருமுருகாற்றுப்படை.

முருகன் வேலால் குன்றம் எறிந்தான் என்பதனைப் பரிபாடல்,

குருகொடு பெயர் பெற்ற மால்வரை யுடைத்து *(5:9)*

குன்ற முடைத்தவொளிர் வேலாய் *(8:29)*

குருகெறி வேலோய் *(19:36)*

புள்ளொடு பெயரிய பொருப்புப் படை திறந்த வேல் *(21:9)*

தெவ்வுக் குன்றத்துத் திருந்து வே லழுத்தி *(19:102)*

என ஐந்து பாடல்களில் குன்றைப் பிளந்த கதையைக் குறிப்பிட்டுள்ளது. பிற சங்க நூல்களில் இச்செய்தி இடம் பெறவில்லை. எனவே இது பிற்காலத்தில் ஏற்பட்ட தொன்ம வளர்ச்சி எனலாம். ஐந்தாம் பரிபாடல் விளக்கத்தில் குருகு - அன்றில் அதற்கு வடமொழியில் கிரௌஞ்சம் என்று பெயராதலின் அப்பறவையின் பெயர் பெற்ற வரை என்று விளக்கம் அளித்துள்ளார் உ.வே.சா.

''வியாசரின் மகாபாரதத்தில் கந்தனுடன் தொடர்புடையதாய் இக்கதை இடம் பெற்றுள்ளது. இங்குக் குருகு எனப்பட்ட மலை, அங்கு கிரவுஞ்சம் எனப்பட்டுள்ளது. வன பருவத்தின் 224ஆம் பகுதியில் கந்தனின் பிறப்புப் பற்றிக் கூறும் இடத்தில் கந்தன் தான் பிறந்த நான்காம் நாளில் இவ்வீரச் செயலைப் புரிந்ததாய்க் குறிப்பிடப்பட்டுள்ளது என்றும், மகாபாரதத்தின் ஒன்பதாம் காண்டமான சால்ய பருவத்தின் 46ஆம் பகுதியிலும் கூறப்பட்டுள்ளது என்றும், முதற் கதையில் அம்பால் மலையைப் பிளந்ததாகவும் கதாயுதத்தால் உச்சியைப் பிளந்ததாகவும்,

இரண்டாம் கதையில் எறிகோலால் மலையைப் பிளந்ததாகவும் கூறப்பட்டுள்ளது. தமிழிலோ வேலால் மலையைப் பிளந்த தாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. சங்ககாலப் போர் நிகழ்வில் வேல் பெற்றிருந்த முதன்மையைப் புலப்படுத்துவதாக இம் மாற்றம் அமைந்துள்ளது'' என்றும் குறிப்பிட்டுள்ளார் மாதையன் *(பக்.82-83).*

### ஆறுமுகமும் பன்னிரு கையும்

திருச்சீரலைவாய் முருகன் ஆறுமுகமும் பன்னிரு கையும் உடையவன் என்று வருணிக்கப்படுகிறான். முதல் முகம், தன் பல்கதிரால் உலக இருள் அகற்றுவது. இரண்டாம் முகம், தன் மேல் அன்பு செய்தவர் துதிக்கக் காதலுடன் அவர்களுக்கு உவந்து வரம் கொடுப்பது. மூன்றாம் முகம், மந்திர விதிகளின் முறைமை தவறாமல் அந்தணர் செய்யும் வேள்விக்கு இடையூறு நேராத வண்ணம் காப்பது. நான்காம் முகம், மெய்ந்நூல்களின் *(வேதம், ஆகமம்)* அரிய பொருள்களை முனிவர்களுக்கு உணர்த்தி, திங்கள் போன்று எத்திசையில் உள்ள வரையும் விளக்கம் செய்வது. ஐந்தாம் முகம், போரில் பகைவரை அழித்து வெகுண்ட நெஞ்சுடன் கள வேள்வியை விரும்பிச் செய்வது. ஆறாம் முகம், குறவர் மடமகளான வள்ளியுடன் மகிழ்ச்சியைப் பொருந்துவது.

ஆறுமுகங்களின் செயல்களுக்கு ஏற்ப அவனுடைய பன்னிரு கைகளும் இயங்குகின்றன. முதல் முகத்திற்குரிய ஒரு கை விண்ணில் செல்லும் தேவர்க்குப் பாதுகாவலைச் செய்ய, மற்றொரு கை மருங்கிலே அமைந்து விளங்கும். இரண்டாம் முகத்திற்குரிய ஒரு கை தொடை மீது விளங்க, இன்னொரு கை அங்குசத்தால் யானையைச் செலுத்தும். மூன்றாம் முகத்திற் குரிய இரு கைகளும் கேடயத்தையும் வேலையும் வலமாகச் சுற்றி நிற்கும். நான்காம் முகத்திற்குரிய ஒரு கை முனிவர்க்கு மெய்ப் பொருள் உணர்த்தி மார்பளவில் பொருந்தி நிற்கும். பிறிதொரு கை மார்பின் மாலையுடன் பொருந்தி நிற்கும். ஐந்தாம் முகத்திற்குரிய ஒரு கை தொடியுடன் கள வேள்விக்குரிய குறிப்பை இயற்றும். மறு கை இனிய ஓசையையுடைய மணியை மாறி மாறி ஒலிக்கச் செய்யும். ஆறாம் முகத்திற்குரிய

ஒரு கை மழையைப் பொழியச் செய்யும். மறு கை வானர தெய்வ மகளிர்க்கு மாலை சூட்டும்.

இவ்வாறு திருமுருகாற்றுப்படை ஆறுமுகம் பன்னிரு கையும் உடைய முருகனை வருணிக்கும். *(எ.கா)*

மூவிரு கயந்தலைமுந்நான்கு முழவுத்தோள் *(பரி 5:11)*

ஆறுமுகத்து ஆறிரு தோளால் *(பரி 14:21*

ஆறிரு தோளவை அறுமுகம் விரித்தவை *(பரி 21:67)*

அறுமுக ஒருவனோர் பெறுமுறை இன்றியும்
அறுமுகச் செவ்வேள் சிலம்பு *(5:170)*

அணிமுகங்கள் ஓராறும் *(24:9)*

அறுமுக ஒருவநின் அடியிணை தொழுதேம் *(24:18)*

அறுமுகம் இல்லை *(24:20)*

பிற சங்க நூல்களில் இத்திருவுருவம் குறித்த செய்திகள் காணப்படவில்லை.

மேற்கண்ட உருவ அமைதி ஆரியக் கடவுளான கார்த்தி கேயனுடையது. திராவிடரின் கடவுளான முருகனுக்கும் பார்ப்பனருக்கும் யாகங்களுக்கும் ஒரு வகையான தொடர்பும் இல்லை. ஆனால், மேற்கூறப்பட்ட திருமுருகாற்றுப்படைப் பகுதியில் அவன் பார்ப்பனர் பாதுகாவலனாகக் கூறப்படுகின் றான் என எடுத்துக்காட்டியுள்ளார் சு. வித்தியானந்தன் *(தமிழர் சால்பு பக்.137-138)*. எனவே பண்பாட்டுக் கலப்பில் வட மொழி புராணக் கூறுகளை திருமுருகாற்றுப்படை ஏற்றுள்ளது என்பது புலனாகிறது.

மூவிரு முகங்கள் போற்றி, ஈராறு தோள் போற்றி, ஆறிரு தடந்தோள் வாழ்க, அறுமுகம் வாழ்க எனப் பின் வந்த கச்சியப்பா இவ்வுருவத்தைப் போற்றியுள்ளார்.

**கொடியும் ஊர்தியும்**

கோழியும் மயிலும் முருகனுக்குக் கொடியாகத் திகழ்தலை முருகாற்றுப்படை சுட்டியுள்ளது. ''கோழி ஓங்கிய

வென்றடு விறற்கொடி'' *(முரு.38)*, ''வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ'' *(முரு.219)*, ''பல்பொறி மஞ்ஞை வெல் கொடி'' *(முரு.122)* எனக் குறுந்தொகை, புறநானூறு, அக நானூறு ஆகிய இலக்கியங்களிலும் சேவலும் மயிலும் முருக னுக்குரிய கொடி என்பதற்குரிய பதிவுகள் உள்ளன.

சேவலங் கொடியோன் *(குறுந். கடவுள் வாழ்த்து 5)*

மணிமயிலுயரிய ........ ஒண்செய்யோன் *(புறம் 56:7-8)*

பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய
ஓடியா வாழ்வின் நெடியோன் *(அகம் 149:15:16)*

திருமுருகாற்றுப்படை, களிறு முருகனுக்குரிய ஊர்தி என்று குறிப்பிட்டுள்ளது.

காலகிளர்ந்தன்ன வேழம் மேற்கொண்டு *(திருமுரு.82)* இதனைக் கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந்தாங்கு எனப் பதிற்றுப் பத்தும் *(11.6)* பிணிமுக ஊர்தி வொண் செய்யோன் எனப் புறநானூறும *(புறம் 56.8)* சுட்டுகின்றன. களிறு, மயில், யாடு மூன்றும் முருகனுக்குரிய ஊர்தி என்று பரிபாடல் மொழிகிறது.

ஊர்ந்ததை ........ புகழ்சால் வேழம் *(பரி 21:1-2)*

சேயுயர் பிணிமுகம் ஊர்ந்தமர் உழக்கி *(5:2)*

பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ *(17:49)*

வீறல் வெய்யோன் ஊர்மயில் *(8:67)*

விரைமயில் மேல்ஞாயிறு *(பரி 18:26)*

இருங்கண் வெள்யாட்டு எழில்மறி கொடுத்தோன் *(பரி5.62)*

**படைகள்**

முருகனுக்குரிய படைகளில் முதன்மையானது வேல். இதனைச் செவ்வேல் *(61)* எஃகு என்று திருமுருகாற்றுப்படை குறிப்பிடும் *(அடி 111)*. குறுந்தொகை, ''செஞ்சுடர் நெடுவேல்'' *(கடவுள் வாழ்த்து)* என்றும் கலித்தொகை, செவ்வேல் *(93:26)*,

வெள்வேல் (27:16) என்றும் பரிபாடல் சுடர்ப்படை (14:18) ஏந்திலை (17:12) எனவும் குறிப்பிடக் காண்கிறோம்.

சங்க நூல்களில் போரில் வெற்றி ஈட்டித் தரும் கருவியாகவே வேல் குறிப்பிடப்படுகிறது. ஆனால், பின் வந்த கச்சியப்பர் மாயையில் சிக்கிய உயிர்களை மீட்கும் ஞான வேலாகவும் படைத்துக் காட்டியுள்ளார். சக்தி ஆயுதமாகிய வேலை முருகன் சிவனிடமிருந்து பெற்றதாகக் குறிப்பிடுவர் அவர்.

**முருகன் தாய் தந்தையர்**

முருகன் சிவன், பார்வதியின் மகன் என்றும் கொற்றவை சிறுவன் என்றும் திருமுருகாற்றுப்படை மொழிகிறது. *(எ.கா)*

ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே *(256:257)*

வெல்போர்க் கொற்றவை சிறுவ *(258)*

இழையணி சிறப்பின் பழையோள் குழவி *(259)*

ஆனால், குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வமாகவே, தனித் தெய்வமாகவே கலி, பரிபாடல், முருகாற்றுப்படை அல்லாத பிற சங்க நூல்களில் முருகன் குறிப்பிடப்பட்டுள்ளான். போருக்கும் வெற்றிக்கும் உரியவன் என்ற அடிப்படைக் கூற்றிற்குரிய கொற்றவையின் சிறுவனாக,

வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற
பைம்பூட் சேஎய் பயந்தமா மோட்டுத்
துணங்கையஞ் செல்வி *(457-459)*

என்று குறிப்பிடுகிறது பெரும்பாணாற்றுப்படை. வடமொழி மரபு கலந்த நிலையில்தான் முருகன் சிவன், உமையின் மகனாகவும், கார்த்திகைப் பெண்டிர் மகனாகவும், உருத்திரன் மகனாகவும் குறிப்பிடப்படுகிறான். பரிபாடலில் தான் இச்செய்திகள் விரிவாகப் பேசப்படுகின்றன. கலி, சிலம்பு, மேகலையிலும் குறிப்புகள் உள்ளன.

.................. அமரர் வேள்விப்
பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான்

உமையொடு புணர்ந்த காம வதுவையுட்
அமையாப் புணர்ச்சி அமைய *(5:26-29)*

காஅய் கடவுட் சேஎய் *(பரி 5:13)*

கடம்பமர் செல்வன் கடிநகர் பேண
மறுமிடற் றண்ணற்கு மாசிலோன் தந்த
நெறி நீ ரருவி யசும்புறு செல்வ *(பரி. 8:126-128)*

மறுமிடற் றண்ணற்கு மதியாரல் பிறந்தோய் *(பரி 9:7*

ஆலமர் செல்வன் அணிசால் மகன் *(மருதக் கலி.8)*

ஆலமர் செல்வன் புதல்வன் வரும் *(24-13)*

கயிலைநன் மலையிறை மகன் *(மேகலை காதை 15)*

ஆலமர் செல்வன் மகன் விழா *(மேகலை 3-144-145)*

முருகனின் தோற்றம் குறித்த வரலாறு

நீலப் பொய்கையில் ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப அறுவரால் பெற்றெடுக்கப்பட்டவன் முருகன் என்று இரத்தினச் சுருக்கமாக முருகனின் தோற்றம் குறித்துப் பேசும் திருமுரு காற்றுப்படை. ஐவருள் ஒருவன் தீக்கடவுள் என்றும் அறுவர் கார்த்திகைப் பெண்டிர் என்றும் இந்நூல் வெளிப்படையாகச் சுட்ட வில்லை.

நெடும் பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறமர் செல்வ *(253-255)*

பின் சங்க நூலான பரிபாடல் மட்டுமே முருகனின் தோற்றம் குறித்து வடமொழி புராணச் சார்போடு விரிவாகப் பேசக் காண்கிறோம்.

சிவன் உமையோடு புணர்ந்து காமத்தை நுகர்ந்து அமையாத புணர்ச்சியை ஒரு காலத்து அமைந்தானாக இந்திரன் அவனிடம் சென்று இப்புணர்ச்சியால் தோன்றிய கருவை அழிப்பாயாக

என வேண்டினான். அவ்வேண்டுகோளின்படி சிவன் அக் கருவைப் பல கண்டமாகச் சிதைத்து இந்திரனிடமே அளித் தான். சிதைக்கப்பட்ட கரு அமரர் தலைவன் ஆகும் என்பதைத் தம் ஞானத்தான் உணர்ந்த முனிவர் எழுவர், இந்திரனிடமிருந்து அக்கருவைப் பெற்றுச் சென்றனர். அதனை அவ்வாறே தம் மனைவியர் கொண்டால் ஏற்புடையதல்ல என்று கருதி வேள்வி செய்து அந்நெருப்பில் அதனை இட்டனர். அதனைக் கடவுள் கற்பினள் ஆகிய அருந்ததி நீங்கிய கார்த்திகைப் பெண்டிர் அறுவரும் உண்டனர். கணவரின் விருப்பப்படி நடந்து கொண்ட அக்கற்புடை மகளிர் அறுவரும் கருவுற்று இமயச் சாரலில் உள்ள சரவணப் பொய்கையில் பதுமப் பயலில் குழந்தைகளை ஈன்றனர். இந்திரன் பகையுணர்வுடன் முனிவர்க்குக் கொடுத்த வரத்தையும் கடந்து, வச்சிராயுதத்தால் அக்குழந்தைகளை வெட்டினான். ஆறு துணிகளும் ஆறு வடிவமாகி, பின் ஒன்றா யிற்று என்று கடுவன் இளவெயினனார் விவரித்துள்ளார் *(பரி. 5.27-54)*.

''மணி மிடற்றண்ணற்கு மதியாரரற் பிறிந்தோய்' ' என்கிறார் குன்றம்பூதனார் *(பரி 9.7)*

முருகன் தனித் தெய்வமாகவும் வெற்றிக்குரிய கொற்றவை மகனுமாகவே முன் பழந்தமிழ் இலக்கியங்களில் குறிப்பிடப் பட்டுள்ளான். எனவே, ''முருகன் தாய்த் தெய்வத்தினின்று பிறந்த செய்தி தமிழ்நாட்டுக்கே உரியது'' என்பர் நா. வான மாமலை *(14) (தமிழர் பண்பாடும் தத்துவமும் பக்.34)*.

சிவன் மகன், உமை மகன், கார்த்திகைப் பெண்கள் மகன் என்பன எல்லாம் வடமொழி புராணச் சார்பாகக் கூறப்பட் டவை ஆகும்.

வடமொழி வால்மீகி இராமாயணத்தில் கூறப் பெற்ற கதையே சிற்சில மாற்றங்களுடன் பரிபாடலில் விவரிக்கப்பட் டுள்ளது எனலாம். மகாபாரதம், தீக்கடவுளுக்கு தக்கன் மகள் சுவாகா மூலம் பிறந்தவன் முருகன் என்று குறிப்பிட்டுள்ளது. கச்சியப்பர் சிவனின் நெற்றிக் கண்ணில் இருந்து தோன்றிய நெருப்புப் பொறிகள் காற்று, தீக்கடவுளால் எடுத்துச்

செல்லப்பட்டு கங்கையில் விடப்பட்டு, கங்கையால் சரவணப் பொய்கையில் சேர்க்கப்பட்டு, அங்கு ஆறு திருவுருவமாகத் தோன்றிய சிறுவனை, சிவன் காட்ட உமையம்மை தன்னோடு எடுத்தணைக்க ஆறுமுகமும் பன்னிரு கையும் உடைய முருகன் தோன்றினான் என்பர்.

**மனைவியர்**

முருகனின் இரு மனைவியர் பற்றிய குறிப்பை முருகாற்றுப் படையில் காண முடிகிறது.

''மறுஇல் கற்பின் வாணுதல் கணவன்'' என்ற அடிக்கு குற்றமற்ற கற்பினையுடைய ஒளி பொருந்திய நெற்றியையுடைய தெய்வானை கணவன் என்று உரையாசிரியர் எழுதியுள்ளார்.

முருகனின் ஆறுமுகம் பற்றி வருணிக்கும் நிலையில், ''ஒரு முகம் குறவர் மடமகள் கொடி போல் நுசுப்பின் மடவரல் வள்ளியோடு நகை அமர்ந்தன்றே'' *(அடி 100 -102)*என்று வெளிப்படையாக வள்ளி சுட்டப்பட்டுள்ளாள்.

திருவாவினன்குடி முருகன் பற்றி வருணிக்கும் நிலையில், ''தாவில் கொள்கை மடந்தையொடு'' *(அடி. 175)* என்கிறார் நக்கீரர். இங்கும் குற்றமற்ற அறக் கற்பினையுடைய தெய்வானை யாருடன் என்கிறார் உரையாசிரியர். ''மங்கையர் கணவ'' *(264)*என்றும் இந்நூல் சுட்டியுள்ளது.

முருகன் வள்ளியைக் களவில் காதலித்து மணம் புரிந்தான் என்பதால் ''மறுஇல் கற்பின், தாவில் கொள்கை'' என்ற விளக் கங்கள் வழி தெய்வயானை என்றே உரைப்பாளர் எழுதிச் செல் கின்றனர். முன் பழந்தமிழ் இலக்கியமான நற்றிணையில் தலைவன் கூற்றாக அமைந்த பாடல் ஒன்றில்,

என்னுயவு அறிதியோ நன்னடைக் கொடிச்சி
முருகு புணர்ந்தியன்ற வள்ளி போல, நின்
உருவு கண் எறிப்ப நோக்கல் ஆற்றலெனே *(82.3 -5)*

என்ற பகுதியில் முருகன் மனைவி வள்ளி என்ற செய்தி குறிப் பிடப்பட்டுள்ளது. இதில் முருகனும் வள்ளியும் களவுக்

காதலராய்ச் சுட்டப்பட்டுளளனர். பரிபாடலில் முருகன் ஆறுமுகனாய் வள்ளியை விரும்பிய செய்தியை,

ஆறுமுகத் தாறிரு தோளால் வென்றி
நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே *(14.21-22)*

என்றும்,

அவன் வள்ளியை மணந்த செய்தி
குறப்பிணாக் கொடியைக் கூடியோய் *(19-95)*

என்றும்

தெய்வானை கணவன் என்பதை
சாறுகொ டுறக்கத் தவளொடு *(பரி.19.5-6)*

என்றும்,

அவள் இந்திரன் மகள் என்பதை
வானவன் மகள் *(9.58)*

என்றும்,

ஐயிருநூற்று மெய்ந்நயனத்தவன் மகள் *(9.()*

என்றும் இப்பாடல் குறிப்பிட்டுள்ளது.

தெய்வானையின் பெயர் இப்பாடல்களில் நேரிடையாகக் குறிப்பிடவில்லை. முருகன் வள்ளியைக் களவுமணம் செய்து கொண்ட காலத்தே இந்திரன் மகள் மேகம் மழை பொழிந்தாற் போல கண்ணீரைச் சொரிந்தாள் என்ற செய்தி ஒன்பதாம் பரி பாடலில் சுட்டப்பட்டுள்ளது.

தெய்வானையை முருகன் வள்ளிக்கு முன்பே மணந்து கொண்டதாக இப்பாடல் குறிப்பிட்டுள்ளது. தெய்வானை, வள்ளி ஆகியோரிடையே பிணக்கம் ஏற்படுவதாகவும் பரிபாடல் *(9.29-40)* விவரித்துள்ளது.

இவ்வாறு முருகாற்றுப்படையிலும் பரிபாடலிலும் மட்டுமே முருகனின் மனைவியர் இருவர் என்ற செய்தி உள்ளது. ஆரிய நெறி ஏற்கப்பட்ட சூழலின் விளைவு இது என்பர் ஆய்வாளர், முருகன் முதலில் மணந்தது தெய்வ யானையை

என்று குறிப்பிடும் பரிபாடலைப் போல, முருகாற்றுப்படை பாடலின் தொடக்கத்திலேயே மறுவில் கற்பின் வாணுதல் எனத் தெய்வானை கணவன் என்றே சுட்டுகிறது.

முருகாற்றுப்படை, பரிபாடல் நீங்கிய சங்க நூல்களில் வள்ளியைப் பற்றிய குறிப்புகளே உள்ளன. இவ்விரு நூல்களில் மட்டும் தெய்வானை பற்றிய குறிப்புகள் உள்ளன. தெய்வானை என்ற பெயர் குறிப்பிடப்படவில்லை. அவள் இந்திரன் மகள், வானவன் மகள், துறக்கத்தவள் என்ற செய்திகளே உள்ளன.

### வழிபாட்டு முறைகள்

குறிஞ்சி நிலமக்கள் ஆட்டைப் பலியிட்டு வழிபடும் தினை வழிபாடும் *(190-197, 218-226)*, அந்தணர் வேள்வி இயற்றி மந்திரம் கூறி வழிபடும் முறையும் *(177-189)*, எவ்வாறு வழிபட வேண்டும் என்று நக்கீரர் கூறும் வழிபாட்டு முறையும் *(250-280)* திருமுருகாற்றுப்படையில் விவரிக்கப்பட்டுள்ளன.

### அந்தணர் வழிபாடு

48 ஆண்டுகள் பிரம்மசரிய விரதம் நோற்ற இரு பிறப்பாளர், முத்தீஓம்புநர், முப்புரி நூலணிந்தவர், நீராடிய ஈர உடையுடன் தலை மேல் குவித்த கையினராகி, ஆறெழுத்து மந்திரத்தை வாய்க்குள் கூறி மணமுள்ள நறிய மலரைத் தூவி வணங்குவர்.

### தினை வழிபாடு

வெறியாடும் வேலன் பச்சிலைக் கொடியுடன் மணமுள்ள சாதிக் காயையும் தக்கோலக் காயையும் கலந்து, காட்டு மல்லிகையுடன் வெண்டாளிப் பூவைச் சேர்த்துக் கட்டிய தலை மாலையை உடையவனாய் நிற்க, சந்தனம் பூசிய மார்பையுடைய குறவர்கள், கள்ளை உண்டு மகிழ்ந்து தம் குறிஞ்சி நிலத்திற்குரிய தொண்டகம் என்ற பெயருடைய சிறிய வாத்தியத்தை அடித்துக் குரவைக் கூத்தாடுவர். அக்கூத்தைக் கண்டுகளிக்க முருகன் எழுந்தருளுவான். பின்னர் தினை அரிசியைப் பூக்களோடு கலந்து பாண்டம் நிறைய வைத்து ஆட்டுக் குட்டியை

அறுத்து, கோழிக் கொடியை உயர்த்தி அவ்விடத்தே முருகன் எழுந்தருளி நிற்கும்படி வேண்டி ஊர்தோறும் விழா நடத்துவர்.

குறமகள் கோழிக் கொடியை உரிய இடத்தில் நாட்டி, அதன்மேல் நெய்யையும் வெண்சிறு கடுகையும் அப்புவாள். தான் வழிபடுதற்குரிய மந்திரத்தைப் பிறர் கேட்கா வண்ணம் வாய்க்குள் கூறித் துதிப்பாள். தலை குனிந்து மலர் தூவி வழிபடுவாள். வெவ்வேறு நிறமுடைய இரு ஆடைகளை உடுப்பாள். சிவப்பு நூலைக் காப்பாகக் கட்டிக் கொள்வாள். வெண் பொரியைத் தூவி, ஆட்டுக் கிடாயின் குருதி கலந்த அரிசியைப் பலியாகக் கொடுப்பாள். மஞ்சளையும் சந்தனத்தை யும் எங்கும் தெளிப்பாள். குளிர்ச்சி மிக்க செவ்வலரி மலர்களை இணையொக்க அறுத்துத் தொங்க விடுவாள். பின் மலையகத்து உள்ள ஊர்களில் பசியும், பிணியும், பகையும் நீங்குக என்று வாழ்த்துவாள். மணப் பொருளைப் புகைத்து, குறிஞ்சிப் பண் பாடி இசைக் கருவிகளை முழக்கி, குருதி கலந்த சிவந்த தினையரிசியைப் பரப்பி வைத்து, தெய்வம் இல்லை என்னும் புறச் சமயத்தவர் அச்சம் கொள்ளும்படி முருகக் கடவுளை ஆங்கு எழுந்தருளச் செய்வாள்.

அன்புநெறிப் பூசையைக் குறமகள் செய்வதாக வைத்துக் காட்டுகிறார் நக்கீரர் என்கிறார் தண்டபாணி தேசிகர் *(நக்கீரர் பக்.120 -121 ).* இவ்வாறு விழா நடத்தும் குறவர், வெறியாட்டுக் களத்தில் ஆரவாரிக்கும்படி ஊது கொம்புகள் பலவற்றையும் சேர ஊதி, மணிகளை ஒலித்தும், முருகப் பெருமானின் பிணிமுகம் வாழ்த்தியும் வழிபடுவர். அவர்தம் வழிபாட்டை ஏற்று அவர் விரும்பிய வரங்களை முருகன் வழங்கி அருள்வான் என்கிறார் நக்கீரர். இவ்விவரணைகளால் வேலனே அன்றிக் குறமகளும் வெறியாடும் நிகழ்ச்சி முன்னாளில் இருந்து வந்தது என்பது புலனாகிறது. இவர்கள் தங்கள் மேல் முருகனை வருவித்துக் கொண்டு தெய்வமாக ஆடுவர். மக்கள் குறை நீங்கி நலம் பெற ஆவன கூறுவர் மக்கள். இவர் மொழிகளைத் தெய்வ மொழியாகக் கொள்வர். முருகன் அங்கு அருள் புரிவதாக நம்புவர்.

வேலன் வெறியாடுதலை வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டயர்ந்த காந்தள் *(புறத்.5.1 -2 )* எனத்

தொல்காப்பியமும் குறமகள் வெறியாடுதலை ஆடுமகள் வெறியாடு வனப்பு *(குறுந்.105.3-4)* எனக் குறுந்தொகையும் குறிப்பிடுகின்றன. வேலன் வெறியாடு நிகழ்ச்சியே ஏனைய சங்க நூல்களில் குறிப்பிடப் பெற்றுள்ளது. பரிபாடலில் மட்டுமே முருகாற்றுப்படை போல வேலன் வழிபடும் முறை, அந்தணர் வழிபடும் முறை, கேட்கும் வரங்கள் குறித்துக் குறிப்பிடப்பட்டுள்ளது.

திருமுருகாற்றுப்படையில் விளக்கமாகக் கூறப்பட்ட வேலன் வழிபாட்டின் சில கூறுகள் இன்றும் வட மலையாள நாட்டில் வேலன் என்ற பழங்குடியினரின் தெய்வ வழிபாட்டில் காணப்படுவதும் கருதத் தக்கதாகும் என்கின்றார் பி.எல். சாமி *(சங்க நூல்களில் முருகன், பக்.25)*.

பரங்குன்ற முருகனை வேள்வி இயற்றி அவி அளித்து வழிபடுவதையும் *(பரி 8.80)*, மறை முழக்கியும் தெய்வப் பண்ணிசைத்தும் வழிபடுவதையும் *(பரி 8.52)* வழிபட வருவோர் தீவர்த்தி ஏந்தி, இசைக் கருவிகள் முழங்க சந்தனம் முதலிய நறுமணப் பொருள்கள், கொடி முதலியன ஏந்தி வர, வேலன், பூ, துகில், மணி, வேல் முதலியன சுமந்து வந்து கடப்ப மரத்தைத் துதித்து வழிபடுவதையும் அம்மரத்தில் வேலினால் சந்தனம் தெளிக்கப் பெற்ற கிடாய் பலிக்கென கட்டப்பட் டிருப்பதையும் *(பரி.17-1-8)* பூசனை செய்வோர் எழுப்பும் அகிற் புகையினால் தேவரும் கண்ணிமைத்து அகல்வதாகவும் *(பரி.17-29-32)* முருகனின் ஊர்தியாகிய களிற்றின் கவள மிச்சிலை உண்டால் கன்னிப் பெண்கள் நல்ல கணவரை எய்து பவர், மணந்த பெண்கள் கணவரின் தண்ணளியைக் குறைவறப் பெறுவர் என்றும் கருதி யானையை வழிபட்டுப் பூசை செய்வதையும் *(பரி. 19-90-94)* கனவிற் கண்ட காதலரை நனவிற் பெறவும் கருவயிறு வாய்க்கவும், மழை வளம் சுரக்க வும் வேண்டியதையும் *(பரி.8-13-108, 129-130)*, திருவடி உறைதலையே விழைந்து வேண்டியதையும் *(9:82-85, 18:54-56)*, இரப்பவர்பொருள், பொன், போகம் வேண்டாமல் அருள், அன்பு, அறன் வேண்டி வழிபடுவதையும் *(பரி.5-78-81)* பரிபாடல் பாக்கள் விரிவாகப் பேசியுள்ளன.

**நக்கீரர் கூறும் வழிபாட்டு முறை (250-295)**

யான் இதுகாறும் கூறிய இடங்களிலோ, பிற இடங் களிலோ சென்று முருகப் பெருமானை வழிபடும் போது, முகம் மலர்ந்து கையைத் தலைக்கு மேல் குவித்து, திருவடிகளில் தலை பொருந்த வீழ்ந்து வணங்க வேண்டும். ''அறுவர் பயந்த ஆறமர் செல்வனே, மலைமகள் மகனே, மாற்றோர் கூற்றே, கொற்றவை சிறுவ, பழையோள் குழவி, தேவர் வணங்கும் படைத் தலை வனே, கடப்ப மாலை அணிந்தவனே, நூலறி புலவனே, போர்த் தொழிலில் இணையற்றவனே, வெற்றியையுடைய இளைஞனே, அந்தணரின் செல்வமாய் இருப்பவனே, புகழ் மலையே, மங்கையர் மணாளனே, வலிய வீரர்க்குக் காளை போன்றவனே, வேலேந்திய கையினையுடைய பெருஞ் செல்வனே, குன்றம் பிளந்தவனே, குறையா வெற்றியுடன் வானளாவிய மலைகளை யுடைய குறிஞ்சி நிலத்திற்குரியவனே, அரிதிற் பெறும் பெரும் பொருள் உடையவனே, வீடு பெற விரும்பி வந்தவர்க்கு அதனை அளிக்கும் பெரும் புகழாளனே, துன்பற்றோர்க்கு அருள் புரிவோனே, போர் வென்ற வலிய மார்பால் இரவலரைத் தழுவி வேண்டுவன அளித்துப் பாதுகாப்பவனே, தேவரும் முனிவரும் துதிக்கும் திருப் பெயரை உடையவனே, சூரனின் குலத்தை வேலோடு அழித்த வலிமையால் மதவலி யென்னும் பெயர் பூண்டவனே, போராண்மை மிக்க வீரனே, தலைவனே என்று பலவாறாக நான் அறிந்து கூறிய அளவில் புகழ்ந்து அவ் வளவோடு அமையாமல் நின் தன்மைகளை எல்லாம் அளந்து அறிதல் உயிர்களுக்கு இயலாதது. ஒப்பார் இல்லாதவனே நின் திருவடி விரும்பி வந்தேன்'' என்று கூறி வழிபட வேண்டும் என்கிறார் நக்கீரர்.

இவ்வாறு நீ பரவுவதற்கு முன்பே, நின் நிலை அறிந்து பணியாளர் *(கூளியர்)* முருகப் பெருமானிடம் சென்று நீ அளிக்கத் தக்கவன் என்று எடுத்துரைப்பார். அவ்வளவில் முருகன் தன் அஞ்சத்தக்க உருவை ஒடுக்கி, தெய்வ மணங் கமழும் அழகிய இளைய வடிவைக் காட்டி, அன்பு கலந்த நன் மொழிகளைக் கூறி, பெறலரும் பரிசிலாகிய வீட்டின்பம் தந்தருள்வான் என்கிறார்.

இப்பகுதியில் தமிழர், ஆரியர் ஆகிய இரு சாராரின் முருகத் துதிகளும் நம்பிக்கைகளும் இணைக்கப்பட்டுள்ளன. தொடங்கும் போதே புராணச் சார்போடு ''ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப அறுவர் பயந்த ஆறமர் செல்வனே'' எனத் தொடங்கியிருப்பதும், பின்னர் தேவர் வணங்கும் படைத் தலைவன், அந்தணர் செல்வம், மங்கையர் மணாளன், குன்றம் பிளந்தவன், சூரர் குலத்தை அழித்தவன் என்றெல்லாம் புகழ்த் துதிகளை இடைமடுத்திருப்பதும் நக்கீரர் தம் கால மக்களின் ஆரியச் சார்பான நம்பிக்கைகளை ஏற்றுப் பாடலில் பதிவு செய்துள்ளார் என்பதற்குச் சான்றுகளாகும். இறைவன் வேண்டு கோளை கூளியர் முருகனிடம் எடுத்துரைப்பதாக அமைத்திருப் பதும் சிந்திப்பதற்குரியது.

சேயோனைச் சிவனோடு தொடர்புபடுத்தியதில் வெற்றி யடைந்த நிலையில்தான் ''ஆல்கெழு கடவுள் புதல்வர்'' என்ற தொடர் தோன்றுகிறது. தாய்க் கடவுளின் வழிபாடு பரவியிருந்த நிலையில், அந்தப் பல தெய்வங்களையும் ஒன்றுபடுத்தி, அந்தத் தாயின் மகனாக முருகனைக் காண்கின்ற காட்சியையே மலை மகள் மகனே, கொற்றவை சிறுவ, பழையோள் குழவி என வரும் தொடர்களில் காண்கிறோம் என்று தெ.பொ.மீ. கூறி யிருப்பது *(பத்துப்பாட்டு ஆய்வு புறம், பக்.37)* கருதத் தக்கது.

நிறைவுரை

தமிழரின் தொன்மைத் தெய்வம் முருகன் ஆவான். தொல்காப்பியம் சேயோன் மேய மைவரை உலகம் என்று நால்வகைத் திணைத் தெய்வங்களுள் ஒருவனாக முருகனைக் குறிப்பிடும். பரிபாடல், முருகாற்றுப்படை தவிர்த்த பிற சங்க நூல்களில் முருகன் மலை நிலமான குறிஞ்சிக்குரியவன் *(திணை தெய்வம்)*. வேலன் என்னும் பூசாரியால் வெறியாட்டு நிகழ்த்தி வழிபடப் பெறுபவன், அச்சத்தைக் குறிக்கும் சூரை அழிப் பவன், செந்நிறம் உடையவன் *(பெரும்பாண். 458-459 குறுந்.)* வலிமை உடையவன் *(நற். 225:1, புறம் 16:12)*, சினம் உடை யவன் *(அகம். 158:16, பொருந.13)*, முன்னியதை முடிக்கும் திறல் *(புறம் 56:14)* உடையவன், கோழிக் கொடியை உடை யவன் *(குறுந்.5)*, மயிற் கொடியுடையவன் *(புறம் 56:7) (அகம்*

*149:15-16)*, யானை வாகனம் உடையவன் பதிற்று *(11.6)*, வள்ளியை மணந்தவன், கொற்றவை மகன் *(பதிற்று 11.6)* என்றெல்லாம் சுட்டப் பெற்றுள்ளான்.

பரிபாடலும், திருமுருகாற்றுப்படையும் இந்திரன் மகள் தெய்வானையை மணந்தவன், யானை, மயில், வாகனம் உடையவன், சூரபதுமன், குன்றம் இருந்த தாரகனை அழித்தவன், சிவன் மகன், உமை மகன், கார்த்திகை மாதர் அறுவர் மகன், உருத்திரன் மகன் என்றெல்லாம் வடமொழி மரபைப் போற்றி முருகனை விவரித்துள்ளன.

முருகனைக் குறித்த வடமொழி புராணச் செய்திகளைப் பரிபாடல் போல முழுமையாக ஏற்காமல், அளவோடு ஏற்று, வெறியாட்டு நிகழ்த்தி முருகனை வழிபடும் பழந்தமிழர் நெறியையும் பதிவு செய்து, தான் கூறும் வழிபாட்டு முறையில் இருவகை நெறிகளையும் இணைப்பது போல துதி மொழி களை மாலையாக்கி இருப்பது நக்கீரரின் சமய சமரச உணர்வைப் புலப்படுத்துவதாக உள்ளது.

**பயன்பட்ட நூல்கள்**


1. டாக்டர் மொ.அ. துரை. அரங்கசாமி - அன்பு நெறியே தமிழர் நெறி, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, முதற் பதிப்பு, 1960.
2. டாக்டர் மா. இராசமாணிக்கனார் - பத்துப் பாட்டு ஆராய்ச்சி, சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1970.
3. வித்துவான் செ. வேங்கடராமச் செட்டியார் - பெறலரும் பரிசில், பாரி நிலையம், சென்னை, முதற் பதிப்பு, 1966.
4. ந. இராமலிங்கம், கந்தபுராண ஆராய்ச்சி, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, முதற்பதிப்பு, 1988.
5. முனைவர் கு. சுந்தரமூர்த்தி - சங்க இலக்கியங்களில் சமய நோக்கு, அனைத்துலக சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம், தருமபுரம், மயிலாடுதுறை, முதற்பதிப்பு 1991.

6. முனைவர் மு. பெரி.மு. இராமசாமி - நக்கீரர் ஓர் ஆய்வு, செட்டியார் பதிப்பகம், சேலம், முதற்பதிப்பு, 2000.

7. முனைவர் பெ. மாதையன் - வரலாற்று நோக்கில் சங்க இலக்கியப் பழமரபுக் கதைகளும் தொன்மங்களும், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு, 2001.

8. டாக்டர் நாகப்பா. நாச்சியப்பன் - திருப்பரங்குன்றம், வேற்கோட்டம், தமயந்தி பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, 1989.

9. சு. வித்தியானந்தன் - தமிழர்சால்பு *(சங்க காலம்)*, பாரி புத்தகப் பண்ணை, சென்னை, முதற்பதிப்பு, 1954.

10. தண்டபாணி தேசிகர் - நக்கீரர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர், முதற்பதிப்பு, 1973.

11. மீ.ப. சோமு - சித்தர் இலக்கியம் தொகுதி I - அண்ணா மலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர், முதற்பதிப்பு.

12. தெ.பொ.மீ. - பத்துப் பாட்டு ஆய்வு *(புறம்)*, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, முதற்பதிப்பு, 1981.

13. பி.எல்.சாமி - சங்க நூல்களில் முருகன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

14. மயிலை சீனி. வேங்கடசாமி - நுண்கலைகள்.

15. முனைவர் ம.பெ. சீனிவாசன், திருமுருகாற்றுப்படை உரை விளக்கம், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை முதற் பதிப்பு, 2009.

இதழ்கள்

1. செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 55, பரல் 12, சென்னை 79.

2. தமிழ் ஒளி, இதழ் 2, மலேயா பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரவை. 1973-74.

## தமிழண்ணலின்
## சங்க இலக்கிய ஆய்வுகள்

அவைய இலக்கியம் என்று வழங்கப் பெறும் தமிழ் மக்களின் தொன்மை இலக்கியங்கள் குறித்த ஆய்வுகள் இன்று புதிய நோக்கில் ஆழ்நிலை வாசிப்புக்கு உட்படுத்தப்பட்டு வருகின்றன. பழைய முடிவுகள் காரணங்களோடு ஏற்கவும், திருத்தவும், மாற்றவும் படுகின்றன. இப்போக்கு வரவேற்பிற்கும் வாழ்த்துவதற்கும் உரியது. அதே வேளையில் பொங்கி வரும் புது வெள்ளமாய்ச் சங்க இலக்கியங்களை ஆயப் புகுந்துள்ள இளைஞர் அணியினரில் சிலர், முன்னை அறிஞர்களின் முடிவுகளை முற்றாகப் புறந்தள்ளி பதிப்புத் தாத்தாக்களை எல்லாம் பகடி செய்து எள்ளி நகையாடும் சிறு பிள்ளை விளையாட்டும் ஒரு பக்கம் அரங்கேறத் தொடங்கியுள்ளது. ஏறத்தாழ நூறு ஆண்டுகளுக்கும் மேலாகச் சங்க இலக்கியங்கள் ஆய்வு செய்யப்பட்டு வருகின்றன. இவ்வாய்வுகளை 1. கால ஆய்வுகள், 2. திணைக் கொள்கை அடிப்படையிலான ஆய்வுகள், 3. இயற்கைப் புனைவு குறித்த ஆய்வுகள், 4. தனி நூல் ஆய்வுகள், 5. புலவர்திறன் குறித்த ஆய்வுகள், 6. கதை மாந்தர் குறித்த ஆய்வுகள், 7. சமூகவியல், மானுடவியல், உளவியல், மார்க்சியவியல், அழகியல் முதலிய கோட்பாட்டு அடிப்படையில் அமைந்த ஆய்வுகள், 8. திணை அடிப்படையில், 9. அணி நலன், 10. குறிப்புப் பொருள், 11. மொழியியல் நோக்கில் அமைந்த ஆய்வுகள் என்றெல்லாம் வகைப்படுத்திக் காண இயலும்.

சங்க இலக்கிய ஆய்வாளர்களாக ரா. ராகவையங்கார், கா.சு. பிள்ளை, மறைமலையடிகள், வையாபுரிப்பிள்ளை, மா. இராசமாணிக்கனார், சீனிவாச ஐயங்கார், வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர், கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, கனகசபைப் பிள்ளை, பண்டாரத்தார், எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளை, கே.என். சிவராசப்பிள்ளை, மு. இராகவையங்கார், நாவலர் சோமசுந்தர பாரதியார், ஔவை துரைசாமிப் பிள்ளை, தனிநாயகம் அடிகள், இளவழகனார், தெ.பொ.மீ., மு.வ., வெள்ளைவாரணனார், வித்தியானந்தன், வ.சுப. மாணிக்கம், சஞ்சீவி, சுப்பு ரெட்டி யார், இரா. சாரங்கபாணி, தண்டபாணி தேசிகர், தமிழண்ணல், சிவத்தம்பி, செ. வேங்கடராமச் செட்டியார், ச. அகத்தியலிங்கம், ரா. சீனிவாசன், வெ.தெ. மாணிக்கம், முத்துக் கண்ணப்பர், நா.ஜெயராமன், கு.வெ. பாலசுப்பிரமணியன், பெ. மாதையன் முதலியோரைக் குறிப்பிடலாம். சங்க ஆய்வுகள் குறித்துப் பொதுவாகவும் இவர்களுள் தமிழண்ணலின் சங்க இலக்கிய ஆய்வுகள் குறித்துச் சிறப்பாகவும் விளக்குவதே இக்கட்டுரை யின் நோக்கமாகும்.

## சங்க ஆய்வுகள்

### 1.1 கால ஆய்வுகள்

தொடக்க நிலை ஆய்வுகள் பெரிதும் சங்க இலக்கியங்களின் காலம் குறித்ததாகவே அமைந்தன. சங்கம் என்பது தமிழ்ச் சொல்லா? சங்கம் என்ற அமைப்பு இருந்ததா? எப்போது? அதன் காலம் என்ன? என்றெல்லாம் விவாதிக்கப்பட்டது. கனகசபைப் பிள்ளையின் 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர் (Tamils 1800 years above) என்ற ஆங்கில நூல், சீனிவாச ஐயங்காரின் (History of Tamils) என்ற ஆங்கில நூல். ரா. ராகவையங்காரின் தமிழ் வரலாறு, பண்டாரத்தார், கா.சு. பிள்ளை, எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளை, வையாபுரிப் பிள்ளை, சிவராசப் பிள்ளை, க. வெள்ளைவாரணர் முதலியோரின் தமிழ் இலக்கிய வரலாறு குறித்த நூல்கள் குறிப்பிடத் தக்கன.

### 1.2 திணைக் கொள்கை அடிப்படையிலான ஆய்வுகள்

மு.ரா., ஔவை, வெள்ளைவாரணர், நாவலர், இளவழகனார், தெ.பொ.மீ., வ.சுப.மா., தமிழண்ணல், சுப்பு ரெட்டியார்,

அ.ச. ஞானசம்பந்தம், இராம. தட்சணாமூர்த்தி முதலியோர் இவ்வகை ஆய்வுகளை நிகழ்த்தியவர்களுள் குறிப்பிடத் தக்கவர். திணை, துறைக் கோட்பாடு, பொருட் பாகுபாடு ஆகியவற்றின் அடிப்படையில் சங்க இலக்கியங்களை நயம்பட விளக்கியவர் இவர் எனலாம். வ.சுப.மா.வின் தமிழ்க் காதல், அ.ச. ஞாவின் அகமும் புறமும், வித்தியானந்தனின் தமிழர் சால்பு, தட்சிணாமூர்த்தியின் எட்டுத் தொகை நூல்களில் திணை, துறை என்னும் ஆய்வேடு முதலியன குறிப்பிடத் தக்கன.

**1.3 இயற்கைப் புனைவு குறித்த ஆய்வுகள்**

தனிநாயகம் அடிகளாரின் சங்க இலக்கியத்தில் இயற்கை, மு.வ.வின் பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை முதலிய நூல்கள் குறிப்பிடத் தக்கவை.

**1.4 தனி நூல் ஆய்வுகள்**

ஆறுமுக நாவலரின் திருமுருகாற்றுப்படை மூலமும் உரையும் *(1851)*, மறைமலையடிகள் எழுதிய முல்லைப் பாட்டு *(1901)*, பட்டினப்பாலை *(1901)*, மு. வரதராசனாரின் முல்லைத் திணை *(1946)*, ரா. ராகவையங்காரின் பட்டினப் பாலை *(1951)*,வேங்கடராமச் செட்டியாரின் புனையா ஓவியம் பெறலரும் பரிசில் *(1960)*, மார்க்கபந்து சாமாவின் குறிஞ்சிப் பாட்டு விளக்கம் *(1960)*, குறிஞ்சிக் கலி விளக்கம் *(1961)*,மா. இராசமாணிக்கனாரின் பத்துப் பாட்டு ஆய்வுகள் *(1970)*, கழகம் வெளியிட்ட எட்டுத் தொகை, பத்துப்பாட்டு குறித்த சொற் பொழிவு நூல்கள், சாரங்கபாணியின் பரிபாடல் திறன் *(1972)*, ஆறுமுகம் எழுதிய கலித்தொகை ஓர் ஆழ்வாய்வு, தமிழண்ணலின் குறிஞ்சிப்பாட்டு, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டுள்ள நற்றிணைச் சொற்பொழிவுகள், குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித் தொகை, அகநானூறு, புறநானூறு, பத்துப்பாட்டு குறித்த சொற் பொழிவு நூல்கள் குறிக்கத் தக்கன.

**1.5 புலவர் திறன் குறித்த ஆய்வுகள்**

செ. வேங்கடராகுலு ரெட்டியாரின் கபிலர், பரணர், தண்டபாணி தேசிகரின் நக்கீரர், மு.பெரி.மு. இராமசாமியின்

நக்கீரர், இந்திரா மானுவெல் எழுதிய பாலை பாடிய பெருங் கடுங்கோ முதலிய நூல்கள் சுட்டத் தக்கன.

**1.6 கதை மாந்தர் குறித்த ஆய்வுகள்**

தலைவி, தலைவன், தோழி, செவிலி பிற அகமாந்தர்கள் குறித்துக் குறிப்பிடத்தக்க ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. ஈ.கோ. பாஸ்கரதாஸ், சரளராசகோபாலனின் சங்க இலக்கியங்களில் தோழி முதலிய நூல்கள் கருதத் தக்கன.

**1.7 கோட்பாட்டு அடிப்படையில் அமைந்த ஆய்வுகள்**

நா. வானமாமலை, க. கைலாசபதி, கா. சிவத்தம்பி, கோ. கேசவன் முதலியோரின் சமூகவியல், மார்க்சியவியல் அடிப் படையிலும் ஒப்பியல் அடிப்படையிலும் எழுதப்பட்ட கட்டுரைகள் மற்றும் நூல்கள். குறிப்பாகக் கைலாசபதியின் வீர நிலைக் காலம் (The Heroic Age) சிவத் தம்பியின் பண்டைத் தமிழ்ச் சமூகம், து. சிவராசின் சங்க இலக்கியத்தில் உளவியல் முதலிய நூல்களும் செவ்வியல் நோக்கில் எழுதப்பட்டு வரும் கட்டுரைகளும் கருதத் தக்கன.

**1.8 திணை அடிப்படையில்**

பாலை, மருதம்; நெய்தல், முல்லை, குறிஞ்சி ஆகிய திணைகள் குறித்து முனைவர் பட்டத்திற்காக முறையே நாகு. வெ.தெ. மாணிக்கம், முத்துக் கண்ணப்பர், ஜெ. அண்ணா மலை, ஆடியபாதம் முதலியோர் எழுதிய நூல்கள் பாடாண் திணை குறித்த நா. ஜெயராமனின் நூல், கு.வெ.பா.வின் சங்க இலக்கியத்தில் புறப் பொருள், புறத்திணை ஆராய்ச்சி, சோ.நா. கந்தசாமியின் புறத்திணை வாழ்வியல் முதலிய நூல்கள் குறிப்பிடத் தக்கன.

**1.9 அணிநலன் அடிப்படையில்**

இரா. சீனிவாசன், சிங்காரவேலன் ஆகியோர் முனைவர் பட்ட ஆய்விற்கு எழுதிய சங்க இலக்கிய உவமைகள், மாயாண்டியின் சங்க இலக்கியக் கற்பனைகள் குறித்த நூல்கள் குறிப்பிடத் தக்கன.

**1.10 குறிப்புப் பொருள் அடிப்படையில்**

ம.ரா.போ. குருசாமியின் *சங்க இலக்கியத்தில் குறிப்புப் பொருள், உள்ளுறை, இறைச்சி* முதலியவை குறித்த தமிழண்ண லின் நூல்கள், ஆ. சிவலிங்கனாரின் *தொல்காப்பியத்தில் குறிப்புப் பொருள்* முதலியன சுட்டத் தக்கன.

**1.11 மொழியியல் நோக்கில்**

எல்.வி. இராமசாமி எழுதிய The Language of Kalithogai ச. அகத்தியலிங்கனாரின் *மொழியியல் நோக்கில் சங்க இலக் கியங்கள் (1983), சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக் கியங்களே (1983)* முதலிய நூல்கள், செ.வை. சண்முகம் எழுதிய நூல்கள் குறிப்பிடத் தக்கன. மேலே பகுத்துக் காட்டப்பட்டவை தவிர, அரசியல், வாழ்வியல் குறித்தும் நயங் காணும் நோக்கிலும் வெளிவந்துள்ள நூல்களும், கட்டுரைகளும் ஏராளம், ஏராளம். பொதுநிலையில் சங்க இலக்கியம் குறித்து ஆய முற்படுவோர் தண்டபாணி தேசிகரின் *சங்க இலக்கியச் சொற்களஞ்சியம் (1965)*, சஞ்சீவியின் *சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை (1973)*, அமிர்தலிங்கம் தொகுத்துள்ள மெய் யப்பன் தமிழாய்வக வெளியீடான *சங்க இலக்கிய ஆய்வுக் களஞ்சியம்* முதலியவற்றைக் கட்டாயம் வாசிக்க வேண்டும்.

**தமிழண்ணலில் ஆய்வுகள்**

82 அகவை நிரம்பிய தமிழண்ணல் எழுதியுள்ள ஆய்வு நூல்கள் பின்வருவன.

1. *சங்க மரபு (முனைவர் பட்ட ஆய்வேடு)* ஆங்கிலத்தில் 1969இல் பணிக்கப்பட்டு 2009இல் மொழிபெயர்க்கப் பட்ட நூல். The Tradition and Talent in Sangam Literature.
2. *சங்க இலக்கிய ஒப்பீடு.*
3. தொகுதி 1 *(இலக்கியக் கொள்கைகள்)* திருத்திய, முதற் பதிப்பு, 2003; தொகுதி 2 *(இலக்கிய வகைகள்)* திருத்திய முதற்பதிப்பு, 2005.
4. *ஒப்பிலக்கியப் பார்வையில் சங்க இலக்கிய ஒளிச் சுடர்கள்,* 2008.

5. செவ்விலக்கியச் சிந்தனைகள், 2008.

6. செம்மொழிப் படைப்பியல், 2008.

திணைக் கொள்கை அடிப்படையில் சங்க இலக்கிய ஆய்வு நிகழ்த்தியவர் இவர். பெரிதும் மரபை அடியொற்றியும் சிறுபான்மை மறித்தோடிச் சிந்தித்தும், பிறமொழி இலக் கியங்களோடு ஒப்பிட்டும், நயங்காணும் போக்கிலும் எழுதப் பட்டவை இவரது நூல்கள். ஒப்பீட்டு நோக்கில் இவர் எழுதிய நூல் பின்வந்த பலருக்கும் முன் மாதிரி நூல் ஆயிற்று.

The Trandition and Talent in Sangam Literature என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் 1969ஆம் ஆண்டு முனைவர் பட்டப் பேற்றுக்காக ஆங்கிலத்தில் பணிக்கப் பெற்ற ஆய்வேடு 2009ஆம் ஆண்டு ''சங்க மரபு'' என்னும் தலைப்பில் கு.வெ. பாலசுப்பிரமணியன் அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இவற்றுள் மூன்று நூல்களே தமிழண்ணலின் சங்க இலக்கியப் புலமையை நிறுவுவன. ஏனைய மூன்று நூல்களிலும் உள்ள கட்டுரைகள் பெரும்பாலும் நயங்காணும் நோக்கிலும் எளிமைப்படுத்தும் முயற்சியிலும் எழுதப்பட்டவை எனலாம். இருப்பினும் அவற்றிலும் ஆங்காங்கே புலமைக் குறிப்புகளையும் ஆய்வுச் செய்திகளையும் காணலாம். தம் ஆய்வு நூலில் தமிழர் நாகரிகப் பண்பாட்டின் தனித்தன்மையைப் புலப்படுத்தும் இலக்கியமாகச் சங்க நூல்கள் திகழ்கின்றன என்பதையும் பாடு பொருள், வடிவம், உத்தி தொடர்பாக பல அடிப்படைச் செய்யுள் மரபுகளை அவை தந்துள்ளன என்பதையும் நிறுவி யுள்ளார். வாழ்க்கையின் பல்வேறு நிகழ்வுகளை காட்சி ஓவியங் களாகப் படம் பிடிக்கும் திணைச் செய்யுட்கள் உண்மையான நிகழ்ச்சிகளை விட அவற்றால் ஏற்படும் உணர்ச்சிகளுக்கும் மனக் குறிப்புகளுக்குமே அழுத்தம் கொடுக்கின்றன என்பதை விளக்கியுள்ளார். திணைச் செய்யுள் என்பது மக்களுடைய மக்களுக்காக, மக்களால் படைக்கப் பெற்ற இலக்கியம் என விளக்கி, மையக் கருத்துகள் மனித வாழ்விலிருந்தும் கற்பனை மரபுகள் அக்கால நுண்கலைகளிலிருந்தும் கொள்ளப் பெற்றன

என எடுத்துக் காட்டி விளக்கியுள்ளார். இப்பாடல்கள் புலவர்களின் இயற்கை மீதான நுண்ணிய அறிவையும் அவர் களது மானுட வாழ்க்கையின் உண்மை அனுபவத்தையும் உளவியலைச் சரியாகப் புரிந்து கொண்ட தனித் திறனையும் காட்டுவன. கூர்த்த நோக்கும் தெளிந்த கருத்துப் புலப்பாடும் திணைச் செய்யுளின் உயிர் என்கிறார். தமிழண்ணல் கண்டறிந் துள்ள புதிய முடிவுகள், விளக்கங்களில் சில மட்டும் இங்கு சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

தொல்காப்பியர்க்கு முன்பே தமிழ் பல்வேறு நிலைகளில் முழு வளர்ச்சி பெற்றிருந்தது என்பதை, பாடலுள் பயின்றவை, பாடல் சான்ற உயர்ந்தோர் கிளவியும் முதலிய நூற்பாக்களையும் பேச்சு மொழி, இலக்கிய வழக்கு குறித்த நூற்பாக்களையும் எடுத்துக் காட்டி விளக்கியுள்ளார். *(சங்க மரபு பக்.47-66)*

செய்யுளியலின் முதல் நூற்பா அவ்வியலின் முதலும் தலைமையுமான நூற்பா மட்டுமன்று. பொருளதிகாரம் என்ற பெரும் பிரிவின் முதலும் தலைமையுமான நூற்பா என்பதை விரிவாக விளக்கியுள்ளார் *(பக். 67-71)*.

ஏழு அகத் திணைகளுக்கும் ஏழு புறத் திணைகளும் எவ்வாறு புறமாயின என்பதற்கு உரையாசிரியர்கள் கூறும் விளக்கங்களை ஆய்வுநோக்கில் ஏற்றும் மறுத்தும் விளக்கியுள்ளார். முல்லைக்கு வஞ்சி, உரிப் பொருள் அடிப்படையிலும், குறிஞ்சிக்கு வெட்சியும், நெய்தலுக்குத் தும்பையும், நில அடிப்படையிலும் தொடர்புடையன என்னும் உரையாசிரியர் கருத்துகளை ஏற்றுள்ளார். மருதமும், உழிஞையும் நில அடிப்படையிலே தொடர்புடையன, கால அடிப்படையில் தொடர்புடையன என்னும் உரையாசிரியர் கருத்து பொருந்தாது என்கிறார். பாலைக்கு வாகை புறனானதற்கு பாலைப் பாடல் களில், அரசர் தம் வெற்றிகள், நகரங்களின் பெருமைகள் முதலிய வாகைக்குரிய பொருண்மைகள் கூறப்படுவதே காரணம் என்று விளக்குகிறார். பின்னர் பாலை நானிலத்திற்கும் உரியது. அது போல வாகையும் எல்லா நிலத்திலும் நிகழ்வது என்ற உரை யாசிரியர் விளக்கத்தையும் தந்துள்ளார்.

பெருந்திணைப் புறன் காஞ்சி என்றும், கைக்கிளைப் புறன் பாடாண் என்றும் உரையாளர் கூறுவதற்கு உரிய காரணம் விளங்கிக் கொள்ள இயலவில்லை என்று குறிப்பிட்டு இயற்கைக் காரணங்கள் அன்றிச் செயற்கைக் காரணங்கள் இவற்றை இணைக்கப் பயன்பட்டிருக்கலாம் என்று கருதுகிறார் *(பக்.133 - 135)*.

வஞ்சி, உழிஞை, தும்பை என்பன ஒரே போரின் மூன்று படி நிலைக்கு உரியன என்ற கருத்து தவறானது என்று காரணங்களுடன் நிறுவியுள்ளார். இம்மூன்றும் மூன்று வேறு பட்ட தனித்தனி தன்மை கொண்ட போர் வகைகள் என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார். உரையாசிரியர் தனித் தனிப் போர்க ளாகவே கருதியுள்ளனர். பிற்காலத்தில் ஒரே போரின் நான்கு நிலைகளாகக் கருதப்பட்டு விட்டன. நுணுகி ஆராய்ந்தால் வெட்சி, வஞ்சி, தும்பை, காஞ்சி ஆகிய நான்கும் முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு நிலங் களுக்கும் உரியன என்கிறார் *(பக்.139 -144)*.

வாகை, காஞ்சி, பாடாண் என்பன தொடக்கத்தில் போர் சார்ந்த திணைகளாகவே கருதப்பட்டன. பின்னர் பிற வாழ் வியல் மெய்ப் பொருளியல் சார்ந்த நிலைக்கும் உரியனவாகப் படிநிலை வளர்ச்சி பெற்றன. வாகை போர் வெற்றியை அன்றி, ஒருவர் தன் திறன்களால் வாழ்வில் பெறும் வெற்றியையும் குறித்தது. காஞ்சி போர்த் துயரம் குறித்து, பின்னர் நிலையாமை யால் உண்டான மெய்யியல் நாட்டத்தைக் குறித்தது. பாடாண் போர் வெற்றியைக் குறித்து குறிக்கோள் மிக்க வாழ்க்கை வெற்றிகளையும் பின்னர் குறித்தது *(பக்.144 -146)*.

சங்கப் பனுவல்களில் இலக்கிய மரபுகள் என்னும் இயலில் திணை மரபுகள் குறித்த ஆழமான கருத்துகளை விளக்கியுள்ளார். குறிஞ்சி என்பது களவுக் காதலைச் சுட்டிக் காட்டும் திணை எனக் கூறப் பெறுவது போல நெய்தல் திணையும் களவு ஒன்றையே பெரிதும் குறிப்பதாகக் கருதுகிறார் பேராசிரியர் *(பக். 199)*. மலை, கடல் ஆகிய நிலங்களின் இயற்கையும் வாழும் மக்களின் வாழ்வுச் சூழல்களுமே இதற்குக் காரணம் என விளக்கியுள்ளார் *(பக்.200 -203)*. முல்லையிலும் மருதத்

திலும் கற்புப் பொருண்மையே கூறப்பட்டுள்ளது. பாலையில் களவு, கற்பு ஆகிய இரண்டும் கூறப்பட்டுள்ளன. எனவேதான் நடுநிலைத் திணை எனப்படுகிறது. சங்கப் பாடல்களில் 488 பாடல்கள் குறிஞ்சிக்குரியன. அவற்றுள் ஏறத்தாழ 30 பாடல்கள் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் குறித்தன. எஞ்சியவை தோழியிற் கூட்டத்திற்கு உரியன என்று கணக்கிட்டுள்ளார். நற்றிணை 176ஆம் பாடலும் ஐங்குறு நூற்றின் 240ஆம் பாடலும் மருதத் திணை சார்ந்தன. இவ்விரு பாடல்களைத் தவிர வேறு எத்திணைக்குரிய உரிப் பொருளும் குறிஞ்சியிற் கலக்கவில்லை. இது குறிஞ்சியின் தனித் தன்மை யாகும் என்கிறார். பாலுணர்வுச் செய்திகளைக் குறிப்பால் உணர்த்துவது திணைச் செய்யுள் மரபு என்பதைக் குறிஞ்சித் திணைப் பாடல்கள் வழி விளக்கியுள்ளார். குறிஞ்சித் திணை யில் வரும் எல்லாக் கூற்றுகளும் அடிக் கருத்துக்களும் திருமணத்திற்கு இட்டுச் செல்வன என்பதைச் சான்றுகளோடு விளக்கியுள்ளார். பாங்கற் கூட்டம் என்பதற்கு நச்சினார்க் கினியர் தலைவன் தன் தோழனைச் சந்திப்பது என்று விளக்கி யுள்ளார். இவ்விளக்கம் சங்கப் பாடல்களில் காணப்படும் மரபு களோடு முற்றிலும் ஒத்ததாக உள்ளது என்று ஆய்ந்து கூறி யுள்ளார். தலைவன் பாங்கன் உதவியால் தலைவியைச் சந்திப் பது என்று உரையாசிரியர்களும், இடைக்கால இலக்கண ஆசிரியர்களும் கூறும் கருத்து சங்க அகப் பாடல்களில் காணப் படவில்லை. தலைவன் தன் காதலை வெளிப்படுத்தவும், தன் துயரைப் புலப்படுத்தவும், ஆறுதல் கொள்ளவுமே பாங்கற் கூட்டம் பயன்பட்டிருக்கிறது. இவ்வாறே தோழியிற் கூட்டத்தில் தலைவன் தோழியிடம் காதலை வெளிப்படுத்துதல், தோழியிடம் குறை யிருத்தல், தோழியை நம்பியிருத்தல், மடலேறுவேன் என அச்சுறுத்தல், தலைவியைப் போற்றுதல் ஆகிய அடிக் கருத்து களே இடம் பெற்றுள்ளன.

முதற் பொருள், கருப் பொருள், உரிப் பொருள் அடிப் படையில் திணை வகுக்கப் பெற வேண்டும். இதற்கு மாறாக குறுந்தொகையில் 73, 336 ஆகிய பாடல்கள் குறிஞ்சித் திணை எனக் குறிப்பிடப்பட்டிருப்பது பொருந்தாது என்கிறார் அண்ணல். முதற் பாடலில் ''மகிழ்நன்'' என்ற சொல்லாட்சி உள்ளதாலும்

பின்னதில் துறைவன் என்ற சொல்லாட்சி உள்ளதாலும் அவற்றை மருதம், நெய்தல், திணை சார்ந்தவைகளாகக் கருத வேண்டும் என்கிறார் *(பக்.195)*. குறிஞ்சியில் உடன்போக்கு இல்லை என்கிறார்.

தொல்காப்பியரின் திணைச் செய்யுள் விதிமுறைக்கு மாறாக நெய்தலும் மருதமும் சில பாடல்களில் மயங்கியுள்ளன. இவ்வாறு நிலமயக்கம் நேர்ந்திருப்பது சான்றுகளோடு விளக்கப்பட்டுள்ளது.

நெய்தல் திணையில் பிற திணைப் பாடுபொருள் கலப்பு மிகுதியாக உள்ளது என்பதை எடுத்துக் காட்டி குறிஞ்சி நிலமும், முல்லை நிலமும், நெய்தல் நிலமும், மருத நிலமும் அடுத்தடுத்து உள்ளதால் இவற்றில் திணைக் கலப்பு நேர்ந் திருக்கிறது என விளக்கியுள்ளார். பரத்தையிற் பிரிவு என்ற மருதத் திணைப் பாடுபொருள் நெய்தல் பாடல்களில் பெரிதும் கலந்துள்ளது. ஐங்குறுநூற்றில் அம்மூவனாரின் பாடல்களில் 31 பாடல்கள் இப்பொருண்மையோடு தொடர்புடையன என்கிறார் *(334)*. நெய்தல் பாடல்களில் 303 பாடல்கள் களவு குறித்தன என்று கணக்கிட்டுள்ளார். கருப் பொருள் ஒப்புமையால் சில நெய்தல் பாடல்கள் குறிஞ்சியாகவும் சில குறிஞ்சிப் பாடல்கள் நெய்தலாகவும் குறிப்பிடப்பட்டுள்ளன என்கிறார். குறிஞ்சி எனக் குறிப்பிடப்பட்டுள்ள குறுந்தொகையில் 81ஆம் பாடல் நெய்தலுக்குரியது என்றும், நெய்தல் எனக் குறிப்பிடப்பட் டுள்ள 200ஆம் பாடல் குறிஞ்சிக்குரியது என்றும் சான்றுகளேடு கருத்துரைத்துள்ளார்.

530 பாடல்கள் பாலைத் திணைக்குரியவை என்றும் இவை தலைவன் பொருளீட்டப் பிரியும் பிரிவு *(422 பாடல்கள்)* தலைவி தலைவனோடு தன் பெற்றோரைப் பிரிந்து உடன் போக்குச் செல்லும் பிரிவு *(108 பாடல்கள்)* என்னும் இரு வகைப் பாடுபொருள் உடையன என்றும் எடுத்துக்காட்டியுள்ளார்.

பாலைத் திணையில் பிற திணை உரிப் பொருள் கலக்கும் மரபு அரிது. இருப்பினும் ஒரு சில பாடல்களில் அத்தகைய கலப்பு உள்ளது *(பக்.219)* என எடுத்துக் காட்டியுள்ளார். அகப் பாடல்களில் புறப் பொருள் விவரணைகளின் தாக்கம் ஏனைய திணைகளைவிடப் பாலைத் திணையில் அதிகம் காணப்படு

கிறது என்று சுட்டியுள்ளார் *(பக்.238)*. தாய்க் கூற்று பாலைத் திணைக்கே உரியது என்கிறார்.

234 பாடல்கள் முல்லைத் திணை சார்ந்தன என்றும் பெரும்பாலான பாடல்களின் மையக் கருத்து தலைவன் பகைவயிற் பிரிதலும் தலைவி காத்திருத்தலும் ஆகும். மிகச் சில பாடல்கள் பொருள் வயிற் பிரிவையும் குறிக்கின்றன. பாலைப் பாடல்களில் நிலம் குறித்த விவரணைகள் மிகுதி. முல்லைப் பாடல்களில் பருவம் குறித்த விவரணைகள் மிகுதி. இப்பாடல்களில் தலைவியின் காத்திருக்கும் பொறுமை பாடப் பெறாதது விந்தையாக உள்ளது. அளவு மீறிய துயர் மட்டுமே பாடப்பட்டுள்ளது.

263 பாடல்கள் மருதத் திணை சார்ந்தவை. இவற்றுள் 221 பாடல்கள் பரத்தையிற் பிரிவு காரணமாகத் தலைவன் பிரிவதைப் பேசுவன. எஞ்சிய 42 பாடல்களில் ஏனைய பொருண்மைகள் கலந்துள்ளன. மருதப் பாடல்களில் பருவங்கள் சித்திரிக்கப் பெறுவதில்லை. சில பாடல்களில் கூதிர்ப் பருவமும் மாலைப் பொழுதும் கூறப்பட்டுள்ளன. பெரும்பாலான பாடல்களில் வைகறைப் பொழுது குறித்த வருணனை இல்லை.

பாலை, முல்லை, மருதம் என்பனவற்றின் உரிப் பொருள் பிரிதல், இருத்தல், ஊடல் என வகுத்திருப்பது சங்கச் செய்யுள் மரபுக்கு முற்றிலும் வேறுபட்டது. இவை முறையே பொருள் தேடப் பிரிதல், பகைவரோடு போரிடப் பிரிதல், பரத்தையர் பொருட்டுப் பிரிதல் என்னும் மூன்று வேறு வகைப் பிரிவுகளைக் குறிப்பன.

பாலை தவிர எஞ்சிய எல்லாத் திணைகளும் காதலையே குறிக்க, பாலை பொருள் சேர்த்தலால் வளமான வாழ்க்கையை வற்புறுத்துவதாகவும் உடன்போக்குக் காரணமாக தாய்மை அன்பைக் காட்டுவதாகவும் உள்ளது. இத்திணைப் பாடல்களில் துன்பமும் அவலமுமே மிகுதியாகப் புனையப்பட்டுள்ளது. அகத்தில் புறம் கலத்தல் என்பது முல்லையில் மிகக் குறைவாகவும் பாலையில் உச்ச அளவிலும் உள்ளது. பாலையில்

விவரிக்கப்பட்டுள்ள செல்லும் வழியும் முல்லையில் விவரிக்கப் பட்டுள்ள திரும்பி வரும் வழியும் ஒரே நிலத்திற்குரியன என்பது தக்க எடுத்துக்காட்டுகள் மூலம் விளக்கப்பட்டுள்ளது. மலரின் பெயரைப் பாடலுக்குள் அறிமுகப்படுத்தும் மரபு, குறிஞ்சி, மருதம், பாலையில் சிறிதளவும் முல்லை, நெய்தலில் மிகுதியாகவும் உள்ளது.

குறிஞ்சி, நெய்தல் ஆகிய இரண்டும் களவு பற்றிப் பேசினாலும், வெறியாட்டு குறிஞ்சியிலேயே கூறப்படும். கைக்கிளை குறிஞ்சியோடும் பெருந்திணை நெய்தலோடும் நெருங்கிய தொடர்புடையன. தொல்காப்பியரால் கூறப்படாத காவல் மரம் பற்றிய செய்தி சங்கப் பாடல்களில் குறிப்பிடப் பட்டுள்ளது *(பக்.265)*.

அகப் பாடல்களில் புறச் செய்திக் கலப்பு முல்லைப் பாடல் களில் மிகக் குறைவு. போர்ப் பிரிவு கூறும் முல்லையில் போர் பற்றிக் கூறும் செய்திகள் காணப்படவில்லை. முல்லையைவிட நெய்தலில் புறக் கலப்பு சிறிது அதிகம். கடற்கரைப் பட்டினங்கள் குறித்த செய்திகள் உள்ளன. முல்லை, நெய்தலைவிடக் குறிஞ்சி யிலும், அதைவிட மருதத்திலும், அதைவிடப் பாலையிலும் புறச் செய்திக் கலப்பு உள்ளது *(பக். 270 -271)*.

சங்கக் கவிதை உத்தி மரபுகள் குறித்தும் விளக்கப்பட் டுள்ளது. தொகை பெறுவது, நூறு, பத்து ஆகிய எண்ணிக்கை யில் அமைந்த பாடல்களைக் கொண்டிருப்பது, அந்தாதித் தொடை யில் பதிற்றுப்பத்து, ஐங்குறுநூற்றுப் பாடல்கள் சில அமைந் திருப்பது. மோனையை விட எதுகைக்கு முதன்மை தந்திருப் பது, முரண் அல்லது எதிர்க்கூறு பயன்படுத்தியிருப்பது. உள்ளுறை, இறைச்சி ஆகியவற்றின் சிறப்பும் வேறுபாடும் *(பக்.273 -281)* ஆகியன விளக்கப்பட்டுள்ளன. உள்ளுறை பெரிதும் மருதப் பாடல்களிலும் இறைச்சி பெரிதும் முல்லை, பாலைப் பாடல் களிலும் இடம் பெறுகிறது என்பது குறிப்பிடத் தக்க செய்தி யாகும்.

சங்க இலக்கியத்தில் மரபு வழி உணர்வும் தனித் திறனும் என்றும் இயலில் மரபு வழி உணர்வு காரணமாகத்

திணைச் செய்யுட்களில் காணப்படும் ஒப்புமைத் தன்மை, புலவர்தம் தனித் தன்மை குறித்து விரிவாக விளக்கப்பட்டுள்ளது. நடை - வருணனை, கற்பனை - கட்டுமானத்தில் காணப்படும் ஒற்றுமைகள் சுட்டப்பட்டுள்ளன. தாம் பாடிய செய்யுள் காரணமாகப் பெயர் பெற்றவர்கள் 80 புலவர்கள் என்றும் அவர்கள் பயன்படுத்தியுள்ள சிறப்பான வேறுபட்ட சொல்லாட்சி, தொடர் மற்றும் உவமைகளால் பெயர் பெற்றுள்ளனர் என்றும் குறிப்பிட்ட திணை அல்லது துறை பாடுவதில் சிலர் ஆர்வம் காட்டியுள்ளார் என்றும் தொடர்ந்து வடிவத்திலும் பாடுபொருளிலும் ஏற்பட்டுள்ள செய்யுள் மரபுகளின் வளர்ச்சி குறித்தும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. ஒரு பாடலில் இரண்டு துறை அமையப் பாடுவது *(அகம். 74)* மலைபடுகடாம் பாடலில் காணப்படும் நீண்ட வருணனைகள், குறிஞ்சிப் பாடலில் காணப்படும் 99 மலர்கள் குறித்த பட்டியல், நில வளம் குறித்த வருணனைகள், பொருநராற்றுப் படையில் உள்ள பாதாதி கேச வருணனைகள், மிக நீண்ட உவமைகள் இவை திணைச் செய்யுள் படிப்படியே காப்பியச் செய்யுளாக வளர வழி வகுத்தன. போர் காரணமாகப் பிரியும் முல்லையில் பொருளுக்காகப் பிரிவது பாடப்பட்டுள்ளது. ஒரு அகப் பாடலில் இரண்டு நிலம் மயங்கி வரும் நிலை உள்ளது. 301 அடிகளை உடைய பட்டினப்பாலையில் 295 அடிகளில் புறம் பாடப்பட்டிருந்தாலும் மையக் கருத்து அகப் பொருளே.

அகம் பாடுதல், அகத்தில் புறம் பாடுதல், அகம் போலவே பாடி அதில் குறிப்பாகப் புறச் செய்தி கூறுதல் என்னும் படி நிலை வளர்ச்சியில் நெடுநல்வாடை மூன்றாம் நிலையினது என்பது பாராட்டப்பட்டுள்ளது *(பக். 348 -349)*. கலித் தொகையில் உள்ள முல்லைப் பாடல்களில் முல்லைக்குரிய போர் வயிற்பிரிவு சித்திரிக்கப்படவே இல்லை என்ற புரட்சி எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

அகத் தொகை நூல்களில் ஒவ்வொரு திணையிலும் இடம் பெறும் மாந்தர்களின் கூற்றுக் குறித்த எண்ணிக்கை *(பக்.358 -384)* புறத்திணை, துறை பற்றிய பாடல்களின் அட்டவணை *(பக்.386 -391)* குறித்த பின்னிணைப்புகள் பின்வரும் ஆய்வாளர்க்குப் பெரிதும் பயன்படுவன ஆகும்.

சங்க இலக்கிய ஒப்பீடு *(இலக்கியக் கொள்கைகள்)* என்னும் தலைப்பமைந்த நூல், சங்கப் புலமை, தமிழண்ண லின் பிறமொழி இலக்கிய ஒப்புமை நோக்கில் அமைந்த தெளிவான ஆழமான விளக்கம் காரணமாக தமிழுலகில் பெரிதும் வாசிப்புப் பெற்ற நூலாகும்.

சங்க இலக்கியப் பயிற்சிக்குத் தொல்காப்பியப் பயிற்சி அவசியம் என்பதால் தொல்காப்பியர் செய்யுளியல் முதல் நூற்பாவில் குறிப்பிடும் 34 உறுப்புகளைப் பற்றி முதற்கண் விளக்கியுள்ளார். மாத்திரை முதல் ஓசை வரையிலான 9 உறுப்புகள் வடிவம் சார்ந்தவை. யாப்பு முதல் மாட்டு வரை யிலான 10 உறுப்புகள் பொருள் பற்றியவை, கூற்று முதல் முன்னம் வரையிலான 6 உறுப்புகள் நாடகப் பண்பு சார்ந்தவை. வண்ணம் என்பது பெரும்பாலும் வடிவம் சார்ந்தது. வனப்புகள் எட்டும் வடிவமும் பொருளும் ஒருங்கிணைந்து அமைபவை என்று விளக்கி, தொடர்ந்து உலகியல் வழக்கு *(கட்டிப் பொன்)* நாடக வழக்கு *(அணிகலன்)*, புலனெறி வழக்கு குறித்துத் தெளிவுபடுத்தியுள்ளார்.

திணை இலக்கியக் கொள்கைகள் என்னும் தலைப் பமைந்த பகுதியில் அகம், புறம் என்பன பொருள் கருதியவை என்பது விளக்கப்பட்டுள்ளது. தொடர்ந்து முதல், கரு, உரி, அமைப்பு, நாடக மாந்தர், கூற்று முறை, புனைவு முறைக் கோட்பாடுகள் விளக்கப்படுகின்றன.

தமிழ் இலக்கியக் கோட்பாடுகள் என்னும் தலைப்பில் முன்னம், மரபு, உவமை, உள்ளுறை, இறைச்சி, மெய்ப்பாடு, வண்ணம், நோக்கு, வனப்பு, யாப்பு என்னும் பத்துக் கோட் பாடுகள் குறித்து விரிவாக விளக்கம் தரப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத்தில் காணப்படும் வாய்மொழி இலக் கியப் பண்புகளான பெயர் சுட்டாமை, தொன்மையைக் கையாளுதல், பேச்சு வழக்கு நடை, நிலப் பின்னணி, கூத்து மரபு குறித்து விளக்கப்பட்டுள்ளது. யாப்பு வடிவம் குறித்து எடுத்துக் காட்டப்படுகிறது.

சங்க இலக்கியமும் உளவியலும் என்னும் தலைப்பில், படைப்பாளி உளவியல், படைப்பாக்க உளவியல் *(கட்ட*

மைப்பு, இயற்கைப் புனைவு, சொல்லாட்சி) அவையோர், உளவியல் என்னும் பகுப்புகளில் சங்க இலக்கிய உளவியல் தன்மைகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

சங்க இலக்கியத்தில் உருக்காட்சி (ஐம்புல அனுபவம்) படிமம், தொன்மம் ஆகியவை உரிய சான்றுகளோடு விளக்கப் பட்டுள்ளன.

சங்க இலக்கியக் கொள்கை ஒப்பீடு என்பது இந்நூலின் உயிர்ப் பகுதியாகும். இப்பகுதியில் அவுசித்தியம் என்னும் கோட்பாடு குறித்து விளக்கி, நோக்கு என்று காப்பியர் கூறும் கோட்பாட்டுடன் அதனை ஒப்பிட்டு விளக்கியுள்ளார். இரசக் கோட்பாட்டை விபாவம், அனுபாவம், வியபிசாரி பாவம், ஆகிய பகுப்புகளில் எடுத்துரைத்துள்ளார். தொல்காப்பியரின் மெய்ப்பாட்டியல் கருத்துக்களை பரத முனிவரின் இரசக் கோட்பாட்டுடன் ஒப்பிட்டு விளக்கியுள்ளார். வாமனரால் வகைப்படுத்தப்பட்ட நெறி அல்லது ரீதிக் கோட்பாடு குறித்து விளக்கம் தந்து, வண்ணம், வனப்பு ஆகியவற்றுடன் ஒப் பிட்டுள்ளார். வியஞ்சனம் எனப்படும் சொற்பொருள் அடிப் படையில் பிறக்கும் தொனிக் கோட்பாட்டை அபிதா சக்தி, இலட்சணா சக்தி, வியஞ்சனம் என்னும் (வியங்கியம்) பகுப்புகளில் விளக்கி தொனியும் வியங்கியமும் ஒன்றே என்று குறிப்பிட்டு அதனைப் பொருட்டொனி, அணித்தொனி, சுவைத்தொனி என்று மூவகைப்படுத்தி விளக்கியுள்ளார். சங்க இலக்கியத்தில் தொனி அமைந்த சிறப்பினை எடுத்துக்காட்டு கள் தந்து விளக்கியுள்ளார்.

உள்ளுறை வகைகள் ஐந்தனுள் உவமை தவிர்த்த நான்கும் இறைச்சியும் தொனிப்பாற்படும் என்பது அண்ணலின் விளக்கம். சங்க, அக, புறப் பாடல்களில் தொனி அமைந்துள்ள சிறப்பும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

உலக இலக்கிய அறிமுகம் என்ற நான்காம் இயலில், சங்க இலக்கியம், வடமொழி இலக்கியம், கிரேக்க இலக்கியம், இலத்தீன் இலக்கியம் ஆகியவற்றைப் பொது நிலையில் பரவலாக அறிமுகப்படுத்தி அவ்வவ் இலக்கியச் சிறப்புகள்

குறித்தும் கொள்கையாளர்கள் குறித்தும் எளிமையாக விளக்கம் அளித்துள்ளார்.

சங்க இலக்கிய ஒப்பீடு *(இலக்கிய வகைகள்)* என்னும் நூலில் தமிழும் இலக்கிய வகைக் கோட்பாடும் என்னும் தலைப்பில் வகைமை அடிப்படை ஆய்வே தமிழுக்கு உரியது என்பது விளக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியர் காலம், சங்க காலம், பிற்காலம் எனக் காலந்தோறும் தமிழ் இலக்கிய வகைகள் வளர்ச்சி பெற்று வந்திருப்பதைச் சான்றுகளோடு விளக்கியுள்ளார்.

இலக்கிய வகை ஒப்பீடு என்னும் இரண்டாம் பகுதியில் வீரயுகப் பாடல்கள், தன்னுணர்ச்சிப் பாடல்கள், காப்பியப் பாடல்கள், நாடகப் பாடல்கள், பத்திமைப் பாடல்கள், தத்துவப் பாடல்கள், நீதிப் பாடல்கள், அங்கதப் பாடல்கள், இயற்கைப் புனைவுப் பாடல்கள், முல்லைப் பாடல்கள், கையறுநிலைப் பாடல்கள் ஆகிய தலைப்புகளில் வடமொழி, கிரேக்க, இலத்தீன் பாடல்களைத் தமிழ்ச் சங்கப் பாடல்களோடு ஒப்பிட்டு விளக்கியுள்ளார். வீரயுகப் பாடல்கள் குறித்த கட்டுரையில் தமிழின் தூய வீரநிலைப் பண்பு விவரிக்கப் பட்டுள்ளது. வீரநிலை உணர்வுக்கு முற்பட்ட நிலையையும் சிறிது பிற்பட்ட நிலையையும் தமிழ்ப் பாடல்கள் காட்டுகின்றன. வீரப் பண்பு சங்கப் பாடல்களில் புகழுரையாகி விடுகிறது. வீரயுகப் பாடல்களில் திரும்பத் திரும்ப வரும் வாய்மொழிப் பண்பு குறித்தும், வீர விளையாட்டுகள் குறித்தும் கிரேக்கப் பாடல்களுடன் ஒப்பிட்டு விளக்கப்பட்டுள்ளது.

தன்னுணர்ச்சிப் பாடல்கள் அல்லது தனியுணர்ச்சித் தனிப் பாடல்கள் என்னும் கட்டுரையில் குழுப் பாடல், தனிப் பாடல் என இரண்டாகப் பகுத்து, தன்னுணர்ச்சிப் பாடல் பத்திமைப் பாட்டு, வாகைப் பாட்டு, வெறியாட்டப் பாட்டு, ஊர்வலப் பாட்டு, வெற்றிப் பாட்டு என்றெல்லாம் பல்வேறு வடிவங்கள் எடுத்திருப்பதை விளக்கி இவற்றைச் சங்கப்புறப் பாடல் களோடு ஒப்பிடலாம் என்கிறார். சமயம் சார்ந்த போற்றிப் பாடல்கள், குழுப் பாடல்கள் என்றும் இவை கலிப் பாடல்களுடன் ஒப்பிடத் தக்கன என்றும் எடுத்துக் காட்டுகிறார். சாப்போ உள்ளிட்ட கிரேக்கப் புலவர் சிலர் தன்னுணர்ச்சிப்பா வளர்ச்

சிக்கு ஆற்றிய பணிகளைப் புலப்படுத்தியுள்ளார். வடமொழியில் தன்னுணர்ச்சிப்பா வளர்ச்சி குறித்தும் விளக்கியுள்ளார்.

காப்பியப் பாடல்கள் என்னும் தலைப்பில் கிரேக்க மொழியில் ஹோமர் எழுதிய ஒதீசி, இலியாது, வடமொழி இராமாயணம், மகாபாரதம், தமிழில் எண்வகை வனப்புகளுள் குறிப்பிடப்படும் தொன்மை, தோல், இயைபு, இழைபு ஆகியன காப்பியத் தொடர்புடையன என எடுத்துரைக்கிறார்.

நாடகப் பாடல்கள் என்னும் தலைப்பில் கிரேக்க வட மொழி நாடகப் பண்புகள் குறித்து விரிவாக விளக்கி தமிழில் தன்னுணர்ச்சிப் பாக்கள் காப்பியப் பண்பும் நாடக வடிவும் உள்ளன. குறிஞ்சிப் பாட்டு நாடகக் கட்டமைப்புடையது என்று விளக்குகிறார். பொருநராற்றுப்படை நாடக முன்னிலைக் கூற்று, அகத்திணைப் பாடல்கள் நாடக முன்னிலை மொழிகள் என்கிறார்.

பத்திமைப் பாடல்கள் என்னும் தலைப்பில் கிரேக்க மொழியில் ஹோமர், ஹீசியடு காலத்துப் பாடப்பட்ட பாடல்கள் தொன்மை மிக்க பத்திமைப் பாடல்கள். தெய்வங்களைப் புகழ்வன - தரவும் மறுதரவுமாய் அமைந்த போற்றிப் பாடல்கள் என்று விளக்கி தமிழில் செவ்வேள், திருமால் குறித்த பாடல்கள் இத்தன்மையன என்கிறார். பத்திமைப் பாடல்களில் உள்ள தன்னுணர்ச்சிப்பாத் தன்மை தமிழில் உள்ளது போல வேறு எம்மொழிப் பாடலிலும் இல்லை என மதிப்பிட்டுள்ளார்.

மெய்ப்பொருள் பாடல்கள் என்னும் தலைப்பில் கிரேக்க மொழியில் உரைநடை வடிவில் தத்துவம் பேசுவதே பெரு வழக்கு. கவிதையில் தத்துவம் பேசுவது அருகிய வழக்கு என்று குறிப்பிட்டு, கிரேக்க செனோபேனிசு, பார்மினைட்சு, எம்பெடக்கிளிசு கவிதைகளில் காணப்படும் தத்துவக் கருத்துகளையும், வடமொழி வேதம் இராமாயணம், மகாபாரதத்தில் காணப்படும் தத்துவக் கருத்துச் சிறப்பினையும் விளக்கி, மதுரைக் காஞ்சியிலும், கணியன் பூங்குன்றனாரின் புறப் பாடலிலும் காணப்படும் தத்துவக் கருத்துக்களையும் எடுத்துரைத்துள்ளார்.

நீதிப் பாடல்கள் என்னும் தலைப்பில் கிரேக்க மொழியில் ஹீசியடு எழுதிய அறநூற் கருத்துக்களையும் வடமொழி மகா பாரதம், பஞ்ச தந்திரக் கதை கூறும் நீதிக் கருத்துகளையும் குறித்து அறிமுகப்படுத்தி உள்ளார். சங்கப் பாடல் சில புத்தக் கொள்கைகளை ஆதரிப்பவை என எடுத்துக்காட்டி புறநானூற்றில் வரும் முதுமொழிக் காஞ்சி, பொருள்மொழிக் காஞ்சிப் பாடல்கள் நீதிக் கருத்துகளுக்கு வித்திட்டன என்கிறார்.

அங்கதப் பாடல்களில் கிரேக்க லூசியன் எழுதிய அங்கதங்கள் குறித்தும் லூசிலியனது என்னும் உரோமானியா மற்றும் ஜீவேனல் எழுதிய அங்கதப் பாடல்களின் சிறப்புக் குறித்தும் விளக்கியுள்ளார். ஔவையாரின் புறப் பாடல் மற்றும் சங்க அகப் பாடல்களில் *(மருதத் திணைப் பாடல்களில்)* அங்கதக் குறிப்புகள் வந்திருப்பதை எடுத்துக் காட்டியுள்ளார்.

இயற்கைப் புனைவுப் பாடல்களில் வோர்ட்ஸ் வொர்த்தின் குயிற்பாட்டையும் கபிலரின் மஞ்ஞைப் பத்துப் பாடல்களையும் விளக்கி கிரேக்க ஹீசியட், வடமொழி காளிதாசர் பாடல்களில் காணப்படும் இயற்கைப் புனைவு குறித்து எடுத்துரைத்துள்ளார். இயற்கையை வியப்பது, அற்புத நவிற்சியாக வருணிப்பது *(மித்து)* இயற்கையைப் பின்னணியாக்கி மனிதச் செயல்களுக்கு முதன்மை கொடுப்பது, இயற்கையை ஓய்விடமாகக் கொண்டு புனைவது, நில அடிப்படையிலும் கால அடிப்படையிலும் புனைவது, உயிரினங்களிடம் மனிதப் பண்புகளை ஏற்றிப் பார்ப்பது என்று ஆறு வகையாக விளக்கி, இயற்கைப் பின்னணியில் மனித வாழ்வைப் புனைவதும், நில அடிப்படையில் புனைவதும் உயிரினங்களிடம் மனிதப் பண்புகளை ஏற்றிப் பார்ப்பதும் சங்கப் பாடல்களின் தனிச் சிறப்பு என்று மதிப்பிட்டுள்ளார்.

முல்லைப் பாடல்கள் என்னும் தலைப்பில் மேலை நாட்டில் வழங்கப்படும் முல்லைப் பாட்டு என்பது நிலப் புனைவு அடிப்படையில் ஒற்றுமை உடையதே தவிர, உரிப் பொருள் அடிப்படையில் வேறுபட்டது என்று விளக்கியுள்ளார். கிரேக்க தியோகிரிடசு பாடற் சிறப்புகளையும் இடைக்காடனார், ஒக்கூர் மாசாத்தியார் பாடற் சிறப்புகளையும், கிரேக்க

செவ்வியல் நிலப் புனைவு, பொற்காலக் கோட்பாடு குறித்தும் அறிமுகப்படுத்தியுள்ளார். தமிழ் முல்லைப் பாடல்களின் தனிச் சிறப்பு அவை கற்புத் திறனைச் சித்திரிப்பது என்கிறார்.

கையறு நிலைப் பாடல்கள் என்னும் தலைப்பில் காலனசு, தைரித்தேயுசு ஆகிய கிரேக்கப் புலவர்களின் அவலப் பாடல்கள் குறித்தும் மிம்னெர்மஸ் என்பாரின் காதல் அவலம் குறித்தும் ஆரிக்கிலோசு, கலிமாக்கஸ், காட்டுலசு என்பாரின் கையறு நிலைப் பாடல்கள் குறித்தும் விளக்கியுள்ளார். தமிழில் கையறு நிலைப் பாடல்கள் என்பன பெரிதும் இறப்பின் போது பாடப் பட்டவையே என்கிறார்.

மேலை நாட்டு முறைப்படி தமிழ் அகப் பாடல்களில் பல கையறு நிலைப் பாடல்கள் என்று குறிப்பிட்டு கலித் தொகைப் பாடல்கள் வழி எடுத்துக் காட்டுகிறார். தொடித்தலை விழுத்தாண்டினார், நப்பசலையார், ஔவையார், பாரிமகளிர், குடவாயிற் கீரத்தனார் முதலியோரின் புறநானூற்றுப் பாடல்கள் வழி, அவல உணர்வு புலப்படுத்தப்பட்டுள்ள திறத்தை நன்கு விளக்கியுள்ளார்.

செவ்விலக்கியச் சிந்தனைகள் என்னும் நூலில் **11** கட்டுரைகள் உள்ளன. சங்கப் பாடல்களின் வடிவம் மற்றும் பாடுபொருள் சிறப்புகளைப் பல்வேறு பகுப்புகளில் விளக்கு வன. இவற்றுள் சங்க கால மரபுகள் குறித்த கட்டுரை குறிப்பிடத் தக்கது.

ஒப்பிலக்கியப் பார்வையில் சங்க இலக்கிய ஒளிச் சுடர்கள் என்னும் நூலில் 12 கட்டுரைகள் உள்ளன. சங்க இலக்கியக் கொள்கைகளும் பண்பாடும் என்னும் கட்டுரை சிறப்பானது.

செம்மொழிப் படைப்பியல் என்னும் நூலில் 11 கட்டுரை கள் உள்ளன. ஓவிய வரைவில் உணர்ச்சி வண்ணங்கள், கருத்துக் குவிவும் காட்சிப் பதிவும், ஒப்பீட்டு நோக்கில் முல்லை நிலைப் பாடல்கள் ஆகிய கட்டுரைகள் சிறப்பானவை.

உள்ளுறை, இறைச்சி, நோக்கு, மெய்ப்பாடு என்னும் தலைப்புகளில் தொல்காப்பியக் கோட்பாடுகளை விளக்கும்

நூல்களும் உரை மரபுகள் என்னும் நூலும் அண்ணலின் சங்க இலக்கியப் புலமையைப் புலப்படுத்துவன.

### தொகுப்புரை

சங்க இலக்கியம், மக்கள் இலக்கியம், உளவியல் இலக்கியம், உருக்காட்சி இலக்கியம் என்பது அண்ணலின் கருத்து. பாடுபொருள், உத்திகள் அடிப்படையில் தொல்காப்பியத்தைப் பெரிதும் அடியொற்றியும் மேல் வளர்ச்சியாகவும் அமைந்துள்ள சங்க மரபுகள் பலவற்றை உரிய சான்றுகளோடு சங்க மரபு என்னும் முனைவர் பட்ட ஆய்வேட்டில் தெளிவாக விளக்கியுள்ளார். பல புதிய முடிவுகளைக் கூறியுள்ளார். சங்க இலக்கிய ஒப்பீடு என்னும் நூலில் தொல்காப்பியர் கூறும் இன்றியமையாச் செய்யுட் கோட்பாடுகள் பத்தினை விளக்கி பல்வேறு, பிற மொழிக் கோட்பாடுகளை அறிமுகப்படுத்தி சங்க இலக்கியப் பாடல்களை இணைத்து விளக்கம் அளித்துள்ளார். சங்க இலக்கிய ஒப்பீடு *(இலக்கிய வகைமைகள்)* என்னும் நூலில் கிரேக்க, இலத்தீன், வடமொழி இலக்கிய வகைகளை விளக்கி அவற்றோடு ஒப்பிடத்தக்க சங்கச் செய்யுள்களை எடுத்துக் காட்டி விளக்கியுள்ளார். ஏனைய மூன்று நூல்களில் உள்ள கட்டுரைகள் பல்வேறு காலப் பகுதிகளில் ஆய்வரங்குகளுக்காக வும், மலர்களுக்காகவும் எழுதப்பட்டவை. அவற்றில் சில குறிப்பிடத்தக்க கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இக்கருத்து கள் இக்கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளன. இவற்றால் சங்க இலக்கிய ஆய்வாளர்களில் குறிப்பிடத்தக்க ஆய்வாளராக விளங்குகிறார் தமிழண்ணல் என்று மதிப்பிடலாம்.

# திருக்குறள் இயல்புரை - ஒரு மதிப்பீடு

பேராசிரியர் இரா. சாரங்கபாணி பெரும்புலவர். சங்கப் பாடல்களில் தோய்ந்தவர். திருக்குறள் உரைகள் பலவற்றையும் ஒப்பு நோக்கிப் பல்லாண்டுகள் ஆராய்ந்து உரை வேற்றுமை கண்டவர். 'உளங்கூர் கேள்வி இளம்பூரணர்' எனப் பாராட்டப் படுவது போல 'வள்ளுவர் உள்ளம் கண்ட உரையாசிரியர்' என்ற பாராட்டுக்குரியவர். பேரறிஞர் வ.சு. மாணிக்கனார் அவர்களின் அறிவுறுத்தலை ஏற்று உரை வேற்றுமைப் பணியை மேற் கொண்டவர். அவர்தம் இயல்புரையில் சிறப்புகள் மிகுந்திருக் கும் என்பதில் ஐயமில்லை. இயல்புரையின் சிறப்புக்கள் சில வற்றை மறு சிந்தனைக்குரிய மிகச் சில குறள் உரைகளையும் எடுத்துக் காட்டுவதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

**இயல்புரை**

பேராசிரியர் இரா. சாரங்கபாணி அவர்களின் உரை 'குறளின் கருத்துக்கு முரண்படாமல் குறள் இயல்பறிந்து பலரும் ஏற்கும் முறையில் செய்திகளைக் கூறுவதால் இயல்புரை என்று பெயர் பெறுகிறது' என்கிறார் பதிப்பாசிரியர். இவ்விளக்கம் முற்றிலும் பொருத்தமானதாகும். 'சில புதுக் கூறுகளைத் தழுவியும் மூலப் பிரிப்பு இன்றியும் சில நல்ல பாடங்களை ஏற்றும் இயல்பாக எழுதப் பெற்ற இத்திருக்குறள் இயல்புரை' என முன்னுரையில் தம் உரை குறித்துத் தாமே மதிப்பிட்டுள்ளார் சாரங்கபாணி.

**உரை இயல்புகள்**

1. பரிமேலழகர் கொண்ட மூல பாடத்திற்கு மாறாகப் பிறர் கொண்ட சிறந்த பாடங்களைத் தழுவியுள்ளது.

2. பழைய புதிய உரைக் கருத்துகளில் பொருத்தமான உரைகளை ஏற்றுள்ளது.

3. சில குறட்பாக்களுக்கு நயமான புதிய உரை அளித்துள்ளது.

4. மூலப் பிரிப்பால் பொருள் மாற்றம் ஏற்படும் என்பதால் இருபொருள் தருமாறு அமையும் மூல பாடங்களை மட்டுமே சேர்த்தே பதிப்பித்துள்ளது.

பரிமேலழகர் பாடத்தைக் கொள்ளாமல் பிற உரையாசிரியர் பாடத்தை ஏற்றுக் கொண்டுள்ளமை.

'தினற் பொருட்டாற் கொல்லாது உலகெனின்' என்பது *(பா.256)* பரிமேலழகர் கொண்ட பாடம். 'திறன் பொருட்டாற் கொள்ளாது' என்பது மணக்குடவர் கொண்ட பாடம். அப் பாடம் பொருத்தம் என்பதால் அதையே இரா. சாரங்கபாணி ஏற்றுள்ளார்.

'வேலான் முகத்த களிறு' என்பது பரிமேலழகர் கொண்ட பாடம். 'வேலாட்களைக் கோத்த கோட்டவுமாய களிறு' என்பது அவர் விளக்கம். 'வேலாழ் முகத்த' என்பது மணக்குடவரும் காளிங்கரும் கொண்ட பாடம். 'வேல் அழுத்தப்பட்ட முகத்தினை உடைய களிறு' என்பது மணக்குடவர் விளக்கம்.

கண்ணஞ்சா என்பதற்குப் பாகருடைய சினப் பார்வைக்கு அஞ்சாத களிறு என்னும் கா.சு. பிள்ளையின் உரையையும், வேலாழ் முகத்த என்பதற்கு வேலழுத்திய வடு ஆறாத முகத்தை உடைய கடுங்களிறு எனக் காளிங்கர் தரும் விளக்கத்தையும் ஏற்று இரா. சாரங்கபாணி உரை எழுதியுள்ளார். இவ்வாறே 'உடையர் எனப் படுவது ஊக்கம்' என்ற பரிமேலழகர் பாடத்தை ஏற்காமல், 'உடைமை எனப்படுவது ஊக்கம்' என்ற மணக்குடவர் பாடத்தை ஏற்றிருப்பதும் 'ஊனைக் குறித்த உயிரெல்லாம்' என்று பரிமேலழகர் பாடத்தை ஏற்காமல் 'ஊணைக் குறித்த உயிரெல்லாம்' என்ற மணக்குடவர் பாடத்தை ஏற்றிருப்பதும் 'கண் தாஅம் இதற்பட்டது' என்ற பாடத்தை விட்டு, 'தாஅம் இடர்ப்பட்டது' என்ற காளிங்கரின் பாடத்தை ஏற்றிருப்பதும் கருத்திற்கு முதன்மை தரும் இயல்புடையவர் சாரங்கபாணி என்பதைப் புலப்படுத்துகின்றன.

பழைய, புதிய உரைகளில் பொருத்தமானவற்றை ஏற்றிருப்பது

வாலறிவன் என்பதற்கு மெய்யுணர்வினை உடையான் என்ற பரிமேலழகர் உரைக்கு மாறாக 'தூய அறிவினை உடையவன்' என்ற வ.சுப. மாணிக்கம் உரையை ஏற்றுள்ளார். பிறவாழி என்பதற்குப் பாவக் கடல் என்ற பரிதியார் உரையை ஏற்றுள்ளார். எண்குணத்தான் என்பதற்கு எட்டுக் குணங்களை உடையவன் என்ற பழைய உரை விளக்கங்களை ஏற்காமல் எளிய குணம் உடையவன் என்ற குழந்தை உரையை ஏற்றுள்ளார்.

உயிர் உடம்பின் நீக்கியார் என்ப *(பா.330)* என்ற பாடலுக்குப் பரிமேலழகர் போல முற்பிறவியைத் தொடர்பு படுத்தி உரை தராமல் புலவர் குழந்தை உரையின் அடிப்படையில் நோயுற்ற உடம்போடு நீங்காத பசி என்னும் தீப்பணியும் உடைய வாழ்வினரை, உயிரை உடம்பினின்று போக்கியவர் என்பர் பெரியோர் என்று உரை தந்துள்ளார். செயிர் உடம்பு என்பதற்கு நோக்கலாகா நோயுடம்பு என்ற பரிமேலழகர் உரை வழி விளக்கம் தந்துள்ளார். குற்றமான உடம்பு என்பர் புலவர் குழந்தை. துறந்தார்க்கும் என்பதற்கு களைகண் ஆனவரால் துறக்கப்பட்டார் என்ற பரிமேலழகர் உரை பொருத்தமில்லை என்பதால் மண், பெண், பொன் என்ற மூவகை ஆசையைத் துறந்தவர் என்ற பரிதி உரை வழி பற்றற்ற துறவிகளுக்கு என்றும், இறந்தாரையும் என்பதற்கு தன்பால் வந்து இறந்தார் என்ற பரிமேலழகர் உரையை விலக்கி 'நிலை திரிந்தவர்' என்ற வ.சுப.மா. உரை வழி, நெறி மாறி நடந்து வாழ்விழந்தவர் என்றும் உரை தந்துள்ளார். தென்புலத்தார் என்பதற்கு இறந்த முன்னோர் என்ற பாவாணர் உரையையும், தெய்வம் என்பதற்கு வழிபடு தெய்வம் என்று பரிதி உரையையும் ஏற்று, தான் என்பதற்கு தன் குடும்பம் என்று விளக்கம் தந்திருப்பது சிறப்பாகும்.

எச்சம் என்பது மக்கள் என்ற பொருளையும் தரும். எஞ்சி நிற்கும் புகழ் என்ற பொருளையும் தரும். 'எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து' என்ற குறளில் பரம்பரைக்கு என்று பரிமேலழகர் உரை எழுதியுள்ளார். அவரவர் எச்சத்தால் காணப்படும் *(114)* என்ற குறளில் எஞ்சி நிற்கும் புகழாலும் இகழாலும் என்ற வ.உ.சி. உரையை ஏற்றுள்ளார். மிச்சமாய் நின்ற புண்ணிய

பாவங்கள் என அரசஞ்சண்முகனார் உரையும் இதே கருத்தை உடையதாகும்.

இசை என்னும் எச்சம் பெறாஅ விடின் *(238)* எச்சமென்று என் எண்ணும் கொல்லோ *(1004)* என்ற திருக்குறள் ஆட்சிகளைக் கருத்திற் கொண்டு புகழ், இகழ் என்று குறிப்பிட்டிருப்பது பொருத்தமுடையதாகும்.

'இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்' என்னும் *(223)* பாடலுக்குப் பரிமேலழகர் உரை, இலக்கணம் கருதிய நயமுடையதாயினும் அதனை ஏற்காமல் ஈதல் பல திறத்தன ஆதலின் அது பன்மைப் பொருளில் கூறப் பெற்றது என்ற வ.உ.சி. உரையை ஏற்று உரை வரைந்துள்ளார். அதற்கு ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல் 'காதலர் கண்ணே உள' என்ற குறளினைச் சான்று காட்டி இருப்பது சிறப்பானதாகும்.

உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை *(பா.761)* என்ற குறளில் உறுப்பமைந்து என்பதற்கு யானை முதலிய நான்கு உறுப்பாலும் நிறைந்து என்று பொருள் தருவர் பரிமேலழகர். காலாட்படையின் உடலுறுப்பு எனக் காளிங்கர் பொருள் தந்துள்ளார். அவ்வுரையை ஏற்று உடலுறுப்புகள் நன்கு அமைந்து என்று விளக்கியுள்ளார் சாரங்கபாணி. இவ்வதி காரத்துக் காலாட் படையின் மாட்சியே பேசப்படுதலானும் ஊறஞ்சாமைக்கு உடலுறுப்பும் நன்கு அமைந்திருத்தல் காரணம் ஆதலானும் காளிங்கர் உரை சிறப்புடைத்து என உரை வேற்றுமை நூலில் இவர் குறிப்பிட்டுள்ளார்.

உட்பகை அஞ்சி *(பா.883)* என்ற குறளில் மட்பகை என்பதற்கு வேறுபட்ட விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. மட்கலத்தை அறுக்கும் கருவி என்பர் பரிமேலழகர். வெள்ளம் என்பர் காளிங்கர். மண்வெட்டி என்பர் வ.சுப. மாணிக்கம். ஈரமான சுவர் என்பர் மு.கோ. புதை சேறு என்பர் இளங்குமரனார். அதை ஏற்று மட்பகை - புதை மண் புறத்தே நல்ல மண்ணாகத் தோன்றி அடி வைத்தால் உள்ளே இழுத்துப் புதைப்பது என்று விளக்கி யுள்ளார் சாரங்கபாணி.

'வழீப்படுவார் கெழீஇயிலர்' என்ற *(பா.1194)* குறளுக்கு 'கற்புடை மகளிரால் நன்கு மதிக்கப்படுவாரும் தாம் விரும்பும் கணவரால் விரும்பப்படாராயின் தீவினையாட்டியர்' என்று

பொருள் தருவர் பரிமேலழகர். 'உலகத்தாரால் விரும்பப் படுவர்' என்பர் மணக்குடவர்.

தாம் விரும்புகின்றவர் தம்மை விரும்பாராயினார் என்றால் விரும்பப்படுகின்றவர் பழந் தொடர்புடையவர் அல்லர் என்பர் இளங்குமரனார். அவ்வுரையை ஏற்று, தாம் விரும்புகின்ற வரால் மகளிர் விரும்பப்படார் என்றால் அம்மகளிரால் விரும்பப்படுவர் பழந்தொடர்புடையவர் அல்லர் என்று தெளிவுபடுத்தியுள்ளார் சாரங்கபாணி.

**நயமான புதிய உரை**

'நற்றாள் தொழஅர்' எனின் என்பதில் அளபெடைச் சொல் பயின்றுள்ளது. வணங்கார், துதியார், பரவார் என எத்தனையோ பிற சொற்கள் இருக்க அளபெடைச் சொல்லை ஏன் பயன் படுத்தினார் வள்ளுவர். அக்குறிப்பறிந்து 'திருவடிகளை நெடிது தொழாராயின்' எனப் பொருள் கூறுவது நயமுடையதாகும்.

இல்லதென் இல்லவள் மாண்பானால் *(பா.53)* என்ற குறளுக்கு இல்லாள் நற்குணம், நற்செய்கையால் ஆயினக்கால் எனப் பொருள் தந்தது மாண்பு எனக் குணத்தின் பெயர் குணி மேல் நின்றது என்று விளக்குவர் பரிமேலழகர். அவ்வாறு பொருள் கொள்வதைவிட 'மனைவி நற்பண்பே வடிவமாகத் திகழ்வாள் ஆயின்' என்று பொருள் கூறியுள்ளார் சாரங்கபாணி. இவ்வாறு குணத்தையே உருவகமாகக் கொள்ளுதலில் பொருள் சிறந்து நிற்பதை அறியலாம்.

**இரு பொருள் தரும் மூல பாடங்களைச சேர்த்தே பதிப்பித்திருத்தல்**

உண்ணின்று உடற்றும் பசி *(பா.13)* என்பதனை உள்நின்று எனப் பிரித்துப் பதிப்பித்தால் உணவின்றி எனப் பொருள் கொள்ள வாய்ப்பின்மையால் சேர்த்தே பதிப்பித்துள்ளார். அறத்திற்கே அன்பு சார்பு என்ப அறியார் *(பா.76)* என்று பிரித் தால் வறியார் மறத்திற்கும் எனப் பொருள் கொள்ள இயலாது என்பதால் அப்படியே பதிப்பித்துள்ளார்.

அறம் பார்க்கும் ஆற்றின் உழைந்து *(பா.130)* எனப் பிரித்தால் நுழைந்து என்று *(எதிர்நோக்கும்)* பொருள் கொள்ள இயலாதென்பதால் சேர்த்தே பதிப்பித்துள்ளார். பின்னூறு

இரங்கி விடும் *(பா.535)* என்பதனைப் பின்நூறு எனப் பிரித் தால் பின் ஊறு எனப் பிரித்துப் 'பிழை உறுதலால் இரங்குவான்' என்று பொருள் கொள்ள இயலாது.

கண்ணிறை நீர்கொண்டனள் *(1315)* என்பதனை கண் + நிறை எனப் பிரிக்காததால் கண் இறை நீர் என்றும் பிரித்துப் பொருள் கொள்ள வாய்ப்பு உண்டு எனக் கூறி 'கண்ணநீர் கைகளால் இறைக்கும்' என்ற நம்மாழ்வார் பாடலைச் சான்று காட்டியுள்ளார்.

தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே *(பா.129)* என்பதை ஆறாதே எனப் பிரிக்காததால் மாறாதே நிலைத் திருக்கும் என்று பொருள் கொள்ளவும் வாய்ப்புள்ளது.

மன்னவ னாடொறும் நாடு கெடும் *(பா.553)* எனப் பிரிக்காமல் பதிப்பித்து இருப்பதால் நாள்தோறும் என்று பொருள் கொள்ளலாம்; ஆள்தோறும் என்றும் பொருள் கொள்ளலாம்.

**மறு சிந்தனைக்குரியவை**

இயல்புடைய மூவர் *(பா.41)* என்பதற்கு வ.சு.மா. உரையைப் பின்பற்றி மரபில் வந்த மூவேந்தருக்கும் என்ற பொருள் தந்துள்ளார். தன் உரை வேற்றுமை நூலில் வண் புகழ் மூவர் *(தொல்.1336)* விறல்கெழு மூவர் *(13)* முற்றிய திருவின் மூவர் *(புறம்.205)* போன்ற தொடர்களை எடுத்துக் காட்டி இக்கருத்துக்களை நிறுவ முற்பட்டுள்ளார். ஆனால் வண் புகழ், விறல்கெழு, முற்றிய என்ற அடைமொழிகளுக்கு மாறாக இயல்புடைய மூவர் என்று வந்திருப்பதால் மூவேந்தர் என்று கொள்வது இயல்புடையதா? இவ் ஐயம் ஆசிரியர்க்கு உள்ளது. அங்ஙனம் ஆய்ந்து இளையர், முதியர், பெண்டிர் என்று உரைப்பர் தண்டபாணி தேசிகர் என்று அவரே எடுத்துக் காட்டி 'மேலும் ஆய்விற்குரியது' என்று தன் உரை வேற்றுமை நூலில் குறிப்பிட்டுள்ளார்.

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்வான் என்பான் *(பா.47)* எனக் குறளில் பின்னரும் இச்சொல் பயின்று வருகிறது. எனவே, இயல்புடைய என்பது மூவேந்தரைக் குறிப்பிடுகிறது என்பது பொருத்தமற்றது. குடிமகன் ஒருவன் தன் அரசன் ஒருவனுக்குத்தானே துணையாக இருக்க முடியும்?

இன்மையுள் இன்மை, வன்மையுள் வன்மை *(பா.153)* என்பதற்கு வறுமையுள் சிறந்த வறுமை, ஆற்றலுள் சிறந்த ஆற்றல் எனப் பொருள் தந்துள்ளார். சிறந்த என்ற அடைமொழியை ஆளாமல் மிக்க என்று ஆண்டிருக்கலாம்.

ஒன்னார் வழுக்கியும் *(பா.165)* என்பதற்குப் பகைவர் கேடு செய்யத் தவறினாலும் என்று பொருள் கூறாமல் பகைவர் இல்லாவிட்டாலும் என்று பொருள் தந்திருப்பது பொருத்தமாகத் தோன்றவில்லை.

பயனில் சொல் பாராட்டுவானை *(பா.196)* என்பதற்குப் பயனில்லா சொற்களைப் பல காலும் சொல்லுவானை என்பர் பரிமேலழகர். பிறர் பேசும் பொருளற்ற சொற்களைப் போற்றிக் கொண்டாடுபவனை என்று சாரங்கபாணியார் உரை தந்திருப்பது சிறப்பாக அமையவில்லை. பாராட்டுதல் என்பது கொண்டாடு தல் என்ற பொருளில் *(பா.521, 994)* ஆகிய குறட்பாக்களில் வந்திருப்பதை உரை வேற்றுமை நூலில் எடுத்துக் காட்டிப் பரிமேலழகர் உரையை மறுத்து, கொண்டாடுதல் என்று பொருள் கொள்வதே நேரிது என்பர். இவ்வதிகாரத்தில் உள்ள ஏனைய பாடல்களில் பயனில் சொல் என்பது சொல்வான் நிலையிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது. இப்பாடலில் மட்டும் பிறர் பேசும் பயனற்ற சொற்களை எப்படிக் குறிக்கும்?

தன்னுயிர் தான்அறப் பெற்றானை ஏனை மன்னுயிரெல் லாம் தொழும் *(பா.268)* என்பதற்கு 'ஒழிந்தவையாகிய நிலை பெற்ற உயிர்கள் எல்லாம்' என்று பொருள் கொள்வர் மணக் குடவர். அதுவே ஏற்புடையது. பிற உலகத்து உயிர்களெல்லாம் என்று பொருள் தந்திருப்பது குறை உடையதாகத் தோன்றுகிறது.

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்று அதன் பின் சாரப் பொய்யாமை நன்று *(பா.323)* என்ற குறளுக்கு கொல்லாமை முதலறம், பொய்யாமை இரண்டாம் தரத்தது என்று குறிப் பிடுவது அக்குறளின் கருத்தன்று என வள்ளுவம் என்ற நூலில் வ.சுப.மா. விளக்குவதை ஏற்று அறநூலோர் தொகுத்துக் கூறும் அறங்களுள் தனித்த சிறப்புடையது கொல்லாமை. அதற்குத் துணையாக நிற்கும் பொய்யாமையும் நல்ல அறம் என்று விளக்கியுள்ளது குழப்பம் தருகிறது.

நல்லார் தொடர்கை விடல் *(பா.450)* என்பதற்குப் பெரியாரோடு நட்பினைக் கொள்ளாது ஒழிதல் என்ற பரிமேலழகர் உரை வழி பெரியவர்களுடைய நட்பைக் கொள்ளாது இருத்தல் என்பர் சாரங்கபாணி. பெரியார்களைத் தொடர்புடையராகப் பெற்றிருந்தும் அதனைத் தமது அறியாமையால் நீங்குதல் எனப் பொருள் கூறுவர் தண்டபாணி தேசிகர். இதுவே ஏற்புடையது. 'கைவிடல்' என்பதற்கு இக் கருத்தை உரை வேற்றுமை நூலில் குறிப்பிட்டுள்ள சாரங்க பாணி இங்கு அக்கருத்தைக் கை விட்டுள்ளார்.

செறுநரைக் காணின் சுமக்க இறுவரைக் காணின் கிழக்காம் தலை *(பா.458)* என்பதற்குப் பகைவர்க்கு இறுதிக் காலம் வரும் வரை அவரைக் கண்டால் பணிக. பணிந்தால் இறுதிக் காலம் வரும்போது அப்பகைவரின் தலை கீழே விழும் என்று உரை தந்துள்ளார். அப்பகைவர் தலைகீழாக வீழ்வர் என்று பொருள் கொள்வதுதானே பொருத்தமானது?

நண்ணாரும் உட்கும் என் பீடு *(பா.1088)* என்பதற்கு நேராத பகைவரும் நேர்ந்தார் வாய்க் கேட்டு அஞ்சுதற் கேதுவாய் என் வலி என்று கூறியுள்ள பரிமேலழகரின் நயவுரையைத் தவிர்த்து, பகைவரும் கண்டு அஞ்சும்படியான என்று உரை அளித்திருப்பது சிறப்பாக இல்லை.

## முடிவுரை

பேராசிரியர் சாரங்கபாணியின் இயல்புரை பெயருக்குப் பொருத்தமாக அமைந்துள்ளது. பழைய, புதிய உரையாசிரியர்களின் சிறந்த கருத்திற்கு முதன்மை அளிக்கப்பட்டுள்ளது. சில குறட்பாக்களுக்கு உரை தரும் போது உரையாசிரியர் இருவர் அல்லது மூவரின் உரைகளை இணைத்து எழுதியுள்ள தன்மை சிறப்பாக உள்ளது. பன்னூற் கற்று ஒரு நூலில் படிந்தால் பார்வை கூர்மையாகும் என்பர் வ.சுப.மா. பல உரைகளைத் தோய்ந்து கற்று உரை வேற்றுமை நூலைச் சிறப்பாகத் தந்திருப்பதால், தேனீயாகச் செயற்பட்டு உரைப் பணியைச் செம்மையாகச் செய்துள்ளார் பேராசிரியர் சாரங்கபாணி.

# அறவியல் நோக்கில் திருக்குறள்

**வை**யத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்குரிய இலக்கணங் களைத் தெளிவாக வரையறுத்துக் கூறுவதால் திருக்குறள் ஓர் 'இலக்கிய இலக்கணம்' ஆகும். நாடு, மொழி, இனம், சமயம் முதலிய சார்புகள் இன்றி மானுட மேன்மைக்கு வழிகாட்டும் மங்கலப் பாடல் திருக்குறள். பண்டைத் தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியம் இன்பம், பொருள், அறம் என்று சுட்டிய கருத்து வலுப் பெற்றிருந்த காலத்தில் அறம், பொருள், இன்பம் என்று வரிசைப்படுத்தியவர் வள்ளுவர்.

பொருளும் இன்பமும் அறத்தின் வழிப்பட்டதாகவே இருக்க வேண்டும் என்று வலியுறுத்தியவர். தனி மனிதன் திருந் தினால் உலகம் திருந்தி விடும் என்று நம்பியவர். தன்னைத்தான் காக்கின் *(205)*, தன்னைத் தான் காதலனாயின் *(209)*, தற்செய்து தற்காப்ப *(808)* என்று தன்னையும் காத்து உலகத்தையும் புரக்க வேண்டும் என்று அறம் கூறியவர். வள்ளுவத்தின் அறவியல் நோக்கு குறித்துக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**அறம் - அறன் - அறிவியல்**

அறம், அறன் என்ற சொற்கள் அறத்துப் பாலிலும் பொருட்பாலிலும் 48 குறட்பாக்களில் *(20 + 28)* பயின்று வந்துள்ளன. மனித நடத்தையை ஒழுங்குபடுத்துவதே அறவியல் ஆகும். மனிதர்கள் யாவரும் தங்களைத் தாங்களே தூய்மைப் படுத்திக் கொள்ளவும் தனி நிலையிலும், குடும்ப நிலையிலும்,

சமுதாய நிலையிலும் அவரவர்க்கு உரிய கடமைகளை ஆற்ற வும், தன் முயற்சியிலும் தன்னுழைப்பிலும் நம்பிக்கை வைக்க வும், பொதுநலம் கருதி வாழவும் மேற்கொள்ள வேண்டிய பண்புகளை, செயல்களை விரித்துரைப்பது வள்ளுவம். ''முறைகளின் தொகுதியே திருக்குறள்''. ஒருவனுக்கே அவன் பல நிலைகளுக்கு ஏற்பப் பன்னெறிகள் மொழிவது திருக்குறள். ''மனித வாழ்வில் பல நிலைகள் உண்டு என்று கண்டு உணர்ந்து அவற்றிற்கெல்லாம் பல வழிகள் காட்டிய சிறப்பே குறளின் சிறப்பு''[1] என்பர் வ.சுப. மாணிக்கம்.

'பழைய தமிழ் இலக்கியத்தில் நன்று, நன்றி, நன்மை, நல்லது என்ற சொற்கள் 'அறம்' என்ற பொருளில் பல இடங் களில் பயன்படுத்தப்பட்டுள்ளன'2 என்று சுட்டிக் காட்டியுள்ளார் க.த. திருநாவுக்கரசு.

மனிதனுக்கு நல்லவைகள் எல்லாம் கடமைகள் *(981)* என்றும், நல்லவை நாடி இனிய சொற்களைச் சொன்னால் அல்லவை தேய அறம் பெருகும் *(96)* என்றும் சுட்டிக் காட்டு கிறது வள்ளுவம்.

தொடக்கம் முதல் முடிவு வரை விதியறமும் விலக்கற மும் கூறும் நல்லிலக்கியம் திருக்குறள். கடவுளை வாழ்த்தி, வான் சிறப்பைப் போற்றி, துறந்தார் பெருமை கூறி, அறன் வலியுறுத்தும் பாயிரம் வள்ளுவத்தின் முதன்மை நோக்கம் அறன் வலியுறுத்தலே என்பதைத் தெளிவாக அறிவிக்கிறது. ஏனைய இரண்டும் இதனுள் அடங்கியவையே. இதனை 'சிறப் பீனும் செல்வமும் ஈனும் அறம்' *(31)* என்றும், 'அறத்தான் வருவதே இன்பம்' *(39)* என்றும் வரும் வள்ளுவங்கள் உறுதிப் படுத்துகின்றன.

அறத்துப் பாலில் தனி மனித அறங்களையும் பொருட் பாலில் பொது வாழ்வில் மனிதர் பின்பற்ற வேண்டிய அரசியல், நிருவாகம், கல்வி, பொருளீட்டுதல், குடி செயல்வகை முதலிய புற வாழ்க்கை அறங்களையும், காமத்துப் பாலில் களவு, கற்பு ஆகிய அகவாழ்வுக்குரிய அறங்களையும் விவரிக்கிறது வள்ளுவம்.

கடவுளை 'அறவாழி அந்தணன்' என்று சுட்டுவதும், துறவை 'அறம்' என்றே குறிப்பதும், துறந்தவர்களை 'அறவோர்'

என்பதும், அதற்குரிய காரணத்தை விவரித்திருப்பதும் அனைத்து உயிர்களிடமும் அருளோடு நடப்பதே அறம் என்பதைப் புலப்படுத்துவதாகும்.

**எது அறம்?**

மனமாசின்மையே அறம்

மனிதன் தனக்கும், குடும்பத்திற்கும், சமுதாயத்திற்கும் பயன்பட வாழ்வதற்கு எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றாலும் நல்லவனாகத் திகழ வேண்டும் என்று எடுத்துரைப்பது வள்ளுவம். வள்ளுவம் மிகுதியும் வலியுறுத்துவது செயலறமே *(பொருட்பால் அதிகாரங்கள்)*. எனினும் செயலின் செம்மையும் சொல்லின் ஒழுங்கும் எண்ணத்தின் வழிப்பட்டன ஆதலின் அறத்தை வரையறுக்கும் நிலையில் 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்' *(34)* என்கிறது.

மாசு என்பது குற்றம். பொறாமை, ஆசை, சினம் ஆகிய மனக் குற்றங்களும், கடுஞ்சொல் ஆகிய சொற்குற்றமும் இல்லாமல் இருப்பதே அறம் *(35)* என்று விரித்துரைக்கிறது. மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம் *(457)* என அறுதியிடுகிறது. எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும் மாணா செய்யாமை தலை *(317)* என்று நெறிப்படுத்துகிறது.

**எண்ணம்**

உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றும்தான் உள்ளியது உள்ளப் பெறின் *(540)* என்றும் உள்ளம் உடைமை *(592)* என்றும் எண்ணியர் திண்ணியராகப் பெறின் *(666)* என்றும் எண்ணத்தின் ஆற்றலைப் புலப்படுத்துகிறது.

**சொல்**

உள்ளம் உவந்து கொடுப்பதை விட முகம் மலர்ந்து இனிய சொற்களைப் பேசுவது நல்லது *(927)* என்றும், பிறர் தீமை சொல்லா நலத்தது சால்பு *(984)* என்றும், நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று பண்பின் தலைப் பிரியாச் சொல் *(97)* என்றும் சொல்லறம் கூறுகிறது. புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழ்வதைவிடச் சாவது நல்லது *(183)* என்று விழிப்பூட்டுகிறது.

**செயல்**

பெருமைக்கும் சிறுமைக்கும் அவரவர் செயல்களே உரை கல்லாகும் *(505)*. ஒவ்வொருவரும் தன்னால் இயன்ற அளவு இடையீடு இல்லாமல் தொடர்ந்து அறம் செய்ய வேண்டும் என்கிறது வள்ளுவம். 'ஒல்லும் வகையான்' *(33)* என்ற நெகிழ்ச்சியுரை எல்லோரையும் அறம் புரிவோராக ஆக்க வேண்டும் என்பது கருதி எழுதப்பட்டதாகும்.

ஈதலும் இசைபட வாழ்தலுமே உயிர்க்கு ஊதியமாகும் *(231)*, இன்னா செய்தார்க்கும் இனியவை செய்ய வேண்டும் *(874)*, பகை நட்பாகக் கொள்ள வேண்டும் *(874)*, அருமை உடையதென்று அயர்ந்து விடாமல் செயல் புரிய வேண்டும் *(611)*, முயற்சி திருவினையாக்கும் *(616)* என்பன வள்ளுவர் கூறும் செயல் அறங்களுள் சில.

**அன்பே அறம்**

அறிவில் சிறந்த மனிதராக வாழ்வதைவிட பண்பில் சிறந்த மனிதராக வாழ்வதையே வள்ளுவம் போற்றுகிறது. அப்படி வாழாதவரை 'மரம் போல்வர் மக்கட் பண்பிலாதவர்' என்கிறது. பிறர் துன்பத்தைத் தன் துன்பமாகக் கொண்டு அதை நீக்க முயல்வதே மனிதப் பண்பு. அதற்கான அடிப்படை அன்புடைமை. எனவே அன்பின் வழியது உயிர் நிலை *(80)* என்கிறது. அன்புடையவர்கள் உடல், உயிர் எல்லாவற்றையும் பிறர்க்கு வழங்கி மகிழ்பவர்கள். 'அன்பிலார் எல்லாம் தமக்குரியர்' என்கிறது வள்ளுவம்.

**இல்வாழ்வே அறம் - பகுத்துண்ணுதலே தலையறம்**

அறன் என்று சிறப்பிக்கப்படுவது இல்வாழ்க்கையே *(49)* ஆகும். பிறரையும் அறநெறியில் நடத்தி, தானும் அறநெறி பிறழாமல் ஒழுகுவானது இல்லறம் தவம் செய்வார் நிலையை விட வலிமையுடையது *(48)*. அன்பே இல்வாழ்வின் பண்பு. அறனே அதன் பயன். இல்லறம் புரிவதன் பயன் விருந்து பேணுவதே *(81)*. மனிதர் ஊருணி நீராக, பழமரமாக, மருந்து மரமாகப் பிறர்க்குப் பயன்பட வேண்டும். இவ்வாறு பொது

நலத் தொண்டு புரிந்து வாழும் ஒப்புரவாளனே உயிரோடு கூடி வாழ்பவன். அவ்வாறு செய்யாதவன் வாழ்ந்தும் செத்தவனே ஆவான். பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதலே நூலாசிரியர் தொகுத்துக் கூறும் அறங்களுள் தலை சிறந்ததாகும் *(322)*.

அறம் தரும் பயன்கள்

**இம்மை நலம் தரும்**

பயனை எதிர்பார்த்துச் செய்யப்படுவதல்ல அறம். ஆனால், எச்செயலுக்கும் பயனை எதிர்பார்ப்பது சராசரி மானுடரின் இயல்பு. எனவே, பல்வேறு அறங்கள் இம்மையிலும் மறுமையிலும் தரும் பயனைச் சுட்டுகிறது வள்ளுவம். விருந்தோம்புபவன் இல்லத்தில் திருமகள் வாழ்வாள் *(984)*, அவன் வயல் விதைக்காமலே விளையும் *(85)*, சிறுமையுள் நீங்கிய இன் சொல் மறுமையிலும் இம்மையிலும் இன்பம் தரும் *(98)*, பிறர் செய்த தீமையைப் பொறுத்துக் கொள்பவர்க்கு இறக்கும் வரை புகழ் கிடைக்கும் *(156)*, பிறர் பொருளை விரும்பாதார் செல்வம் குறைவுபடாது *(178)*, பகுத்துண்பவர்க்குப் பசி என்னும் தீப்பிணி தீண்டாது *(227)*, ஊக்கமுடையவனிடம் செல்வம் வழி கேட்டுச் சென்று சேரும் *(594)* என்றெல்லாம் இம்மை, மறுமைப் பயன்களைப் பலவாறு விவரிக்கிறது.

**மறுமைப் பயன் தரும்**

செல்விருந்தோம்பி வருவிருந்து பேணுபவன் வானத்த வர்க்கு நல்விருந்தாவான் *(36)*, நற்பண்புகள் உடைய கணவனை நன்கு பேணி இல்லறம் நடத்திய மகளிர் புத்தேளிர் உலகில் பெருஞ்சிறப்புப் பெறுவர் *(58)*, அடக்கம் அமரருள் உய்க்கும் *(122)*, புகழ்பட வாழ்வோர் புத்தேள் உலகத்தோரால் போற்றப் படுவர் *(234)* களவு செய்யாதவர் புத்தேள் உலகம் பெறுவர் *(290)* என்று வருவன மறுமைப் பயன் சுட்டுவன.

**வீடு பேறும் தரும்**

யான் என்ற அகப் பற்றையும் எனது என்ற புறப் பற்றையும் துறந்தவன் தேவர்கட்கும் அடைவதற்குரிய மிக உயர்ந்த வீட்டுலகம் அடைவான் *(346)* நிறைவு பெறாத

இயல்புடைய ஆசை என்னும் அறத்திற்கு மாறான பண்பை ஒருவன் விட்டு விட்டால் என்றும் மாறா இயல்புடைய பேரின்பம் கிடைக்கும் *(370)* என்பன அறம் வீடு தரும் என்பதைக் குறிப்பிடுகின்றன.

**சுற்றமும் நலம் பெறும்**

அறம் செய்பவனுக்கு மட்டுமின்றி அவன் சுற்றத்தார்க்கும் நலம் சேர்க்கும். பழிக்கு அஞ்சிப் பலரோடு பகுத்துண்டலை உடையராயின், அவன் பரம்பரை எக்காலத்தும் இடையறவு படாது *(44)* என்றும், நடுவுநிலை உடையவன் செல்வம் என்றும் அழியாது அவன் வழி வரும் பரம்பரைக்கும் துணையாகும் *(112)* என்றும் குறிப்பிடும் வள்ளுவங்கள் இதற்குச் சான்றாகும்.

இவ்வாறே பிறர்க்குக் கொடுப்பது கண்டு பொறாமைப் படுபவன் மட்டுமின்றி அவனுடைய சுற்றமும் உடுக்க உடையும் உண்ண உணவும் இன்றிக் கெடும் *(166)* என்றும், சினம் என்னும் தீய குணம் தன்னைச் சேர்ந்தாரைக் கொன்று தீர்ப்பதோடு அவன் இனத்தையும் சுடும் *(306)* என்றும் வரும் குறள்கள் அறத்திற்கு மாறான செயல்கள் செய்தவனைச் சுற்றத்தோடு அழிக்கும் என்பதைப் புலப்படுத்துகின்றன.

**அறம் செய்வோர் பயன் கருதக் கூடாது**

எல்லாத் தரப்பு மக்களையும் அறவோராக மாற்ற விழைந்து, அறம் செய்வதால் கிடைக்கும் இம்மை, மறுமை, வீடு பேறு ஆகிய பயன்களைப் பல பாடல்களில் சுட்டியுள்ள வள்ளுவர் பயன் கருதாமல் செய்யப்படுவதே அறம் என்பதைப் பதிவு செய்யத் தவறவில்லை. வறியவர்க்குக் கொடுப்பதே ஈகை. பிறர்க்குக் கொடுப்பது எதிர்பார்ப்பு உடையது *(221)* என்றும், மேலுலகம் கிடைக்காது என்றாலும் கொடுப்பதே நல்லது *(222)* என்றும், நன்மையே தருவதாக இருந்தாலும் நடு நிலைமை தவறிப் பெறும் செல்வத்தை விட்டு விடுதல் வேண்டும் *(113)* என்று கூறும் கருத்துகள் பயன் கருதாத அறச் செயலே வள்ளுவரின் அறவியல் கோட்பாடு என்பதைத்

தெளிவுபடுத்துகின்றன. இம்மைச் செய்தது மறுமைக்கா மெனும் அறவிலை வணிகன் ஆஅய் அலன் *(புறம்.134)* என்ற புறநானூற்றுப் பாடல் இணைத்துச் சிந்திக்கத் தக்கதாகும்.

**அறம் மற்றோர் அறத்தைத் தரும்**

அறங்களைப் பாராட்டுவதோடு நின்றுவிடக் கூடாது. பாராட்டிய நெறிகளை வாழ்விற் கடைப்பிடிக்க வேண்டும். கடைப்பிடிக்கா விட்டால் எந்த முன்னேற்றமும் கிடைக்காது என்பதைப் 'புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும் செய்யாது இகழ்ந்தார்க் கெழுமையும் இல்' *(538)* என்பார் வள்ளுவர்.

முன்னேற விரும்புபவனுக்கு அடிப்படையாகத் தேவைப் படும் பண்பு ஊக்கமுடைமை ஆகும். ஊக்கத்தோடு பொரு ளீட்டுபவர்களே விருந்தோம்பல், ஈகை, ஒப்புரவு முதலிய அறங்களைச் செய்ய முடியும். இக்கருத்து,

> "உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
> வள்ளியம் என்னும் செருக்கு." *(குறள்.598)*

என்னும் குறளில் குறிப்பாகப் பொதிந்துள்ளது. பொய்கூறாமை போலப் புகழ்தரும் அறம் வேறு எதுவுமில்லை. அதுவே எல்லா அறத்தையும் கொண்டு வந்து சேர்க்கும் *(296)*. உள்ளத்தில் வெகுளி ஏற்படாமல் காத்து அடக்கத்தோடு திகழ்பவனிடம் அறம்தானே வழி வினவிச் சேரும் *(130)* என்கிறார். பிற அறங்களும் செய்ய வல்லவன் ஆவான் என்பதுதானே கருத்து.

**வள்ளுவம் வலியுறுத்தும் தலையறங்கள்**

கொல்லாமை, கள்ளாமை, காமமின்மை, பொய் பேசாமை, கள் உண்ணாமை ஆகிய இல்லறத்தார்க்குரிய நெறிகளைப் பெரிதும் வலியுறுத்துவது வள்ளுவம். வள்ளுவர் வாழ்ந்த சமூகத்தில் உயிர்ப் பலி, புலால் உண்ணுதல் ஏற்றுக் கொள்ளப் பட்டிருந்தன. பின்னது விருந்தோம்பலின் முக்கியக் கூறாகவே பாராட்டப் பெற்றது. ஆறலைத் துண்ணும் களவு நெறி பரவ லாக இருந்து வந்தது. பரத்தமை ஒழுக்கம் அனுமதிக்கப்பட் டிருந்தது. புலவர் போற்றிப் பாடும் அளவு கள் உண்ணுதல்

வழக்கமாகியிருந்தது. பொய்யும் வழுவும் பெருகியிருந்தது. இவ்வாறு சமூகம் ஏற்றுக் கொண்டிருந்த செயல்களைத் தவிர்க்க வேண்டும் என்றும், அதற்கு மாறான அறங்களைப் பின்பற்ற வேண்டும் என்றும் வலியறுத்துவதற்குத் தேவையான உள்ள உறுதி வள்ளுவரிடம் இருந்தது.

21 வேள்விகள் பற்றிய குறிப்பினைப் புறநானூற்றில் *(166:8)* காண முடிகிறது. சேரவேந்தர் புரிந்த பல வேள்விள் பற்றிப் பதிற்றுப் பத்துப் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி போன்ற அரசர் பெயர்கள் தமிழ் மக்களின் வேள்வி ஈடுபாட்டை நன்கு புலப்படுத்தும். இத்தகைய வேள்வி நாகரிகம் வேரோடி விழுது விட்டிருந்த ஒரு காலகட்டத்தில்,

''அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர் செகுத்துண்ணாமை நன்று.'' *(259)*

என்றும்

''ஒன்றாக நல்லது கொல்லாமை.'' *(323)*

என்றும் முழங்குகிறது வள்ளுவம்.

இதனால் வள்ளுவம் வேள்வியை உடன்பட்டுள்ளது என்று கூறுவது பொருந்தாது. சமூகம் நம்பிய ஒரு கருத்தை மாற்றி அதைவிட இது சிறந்தது என்று எடுத்துக் காட்டவே வள்ளுவர் இவ்வாறு கூறினார் என்பதே பொருந்தும். அவர்,

''அரங்கின்றி வட்டாடி யற்றே *(401)* என்று உவமை கூறியதால் சூதாடுதலை வெறுக்கவில்லை என்று முடிவு செய்தல் பொருந்துமா?''[3] என்று இக்கருத்தை வலியுறுத்துவர் சோ.ந. கந்தசாமி. வேள்வி என்பதற்குப் புதிய பொருளைத் தந்து விருந்தோம்புவதே வேள்வி என்ற மாற்றுக் கருத்தையும் முன் வைத்துள்ளது வள்ளுவம்.

பிறரால் இகழப்படக் கூடாது என்று எண்ணுபவன் மனத்தளவில் கூடப் பிறர் பொருளைக் கவர நினைக்கக் கூடாது *(281)*. அப்படி நினைப்பதே தீமை தரும் *(282)* என்று கள்ளாமையை வலியுறுத்துகிறது.

பிறனில் விழைபவனிடம் பகை, பாவம், அச்சம், பழி என்ற நான்கும் நீங்காவாம் *(146)*. அவ்வாறு விழைவோர் செத்தவரே *(143)* என்று அச்சுறுத்துகிறது.

''பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.''

என்று வாய்மையறத்தைப் போற்றுகிறது. கள் குடிப்பவர் சமூக மதிப்பினை இழப்பார் *(921)*, பெற்ற தாயாலும் வெறுக்கப் படுவர் *(923)*, சான்றோரால் எண்ணப்பட மாட்டார் *(923)* என்றெல்லாம் கூறி கள்ளுண்ணாமையை வலியறுத்துகிறது.

**செய்ந்நன்றி மிகச் சிறந்த அறம்**

காலத்தாற் செய்த உதவி சிறிது எனினும் உலகத்தைவிடப் பெரிதாம் *(102)*, பயன் கருதால் ஒருவர் செய்த உதவி கடலை விடப் பெரிதாம் *(103)* என்று உதவியின் பெருமைகளை உரைக் கிறது வள்ளுவம். எவ்வளவு பெரிய அறங்களைச் சிதைத்த வர்க்கும் தப்பிக்க வழியுண்டு. ஆனால், ஒருவர் செய்த நன்றியை மறந்து அவர்க்குத் தீமை செய்தவர் தப்பிக்க வழியே இல்லை *(110)* என்று செய்ந்நன்றி கொல்லக் கூடாது என்பதை அழுத்த மாக வலியுறுத்துகிறது வள்ளுவம். புறப் பாடல் ஒன்று இதனை எடுத்து மொழிவது இதன் முக்கியத்துவம் கருதியே எனலாம்.

**வள்ளுவத்தில் ஆண் பெண் அறங்கள்**

''வினையே ஆடவர்க்குயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரே.'' *(குறுந்)*

என்ற சங்க அகமரபின் அடிப்படையில் கட்டமைக்கப்பட்டது. வள்ளுவர் கூறும் ஆண், பெண், அறம் செயல்படும் உயிரியாக ஆணுக்கும் ஆணைச் சார்ந்து வாழும் உயிரியாகப் பெண்ணுக் கும் அறம் கூறப்பட்டது எனலாம்.

''ஆணின் அறம் பொருளறம். பெண்ணின் அறம் இன்ப அறம் எனச் சுருங்கச் சொல்லலாம்.''[4]

என்பர் ராஜ்கௌதமன்.

காமத்துப் பால் மற்றும் வாழ்க்கைத் துணை நலம் அதிகாரத்தில் வரும் கருத்துகளைத் தொகுத்து வைத்துச் சார்புகள் எதுவும் இல்லாமல் நோக்கினால் வள்ளுவர் பெண்ணை மனை நலத்திற்குரியவளாகவும், கணவனுக்கு உரியவளாகவும் மட்டுமே கருதியுள்ளார் என்பது தெளிவாகிறது. பிறன் பொருள் *(141)* என்ற சொல்லாட்சியே அவள் ஆணின் உடைமை என்பதைக் குறிப்பதாக உள்ளது. ஆணை நுகர்பவன், பெண் நுகரப்படுபவள் என்ற கருத்தே அக்கால அறக் கவிஞர் முதல் இக்காலப் பொருட் கவிஞர் வரை அனைவரின் கருத்தாக்கமாகவும் உள்ளது என்பது சிந்திக்கத் தக்கது. தமிழ்ச் சமூகத்தின் மாறாத எண்ணப் போக்கிற்கு அடையாளம் இது எனலாம்.

**வள்ளுவம் சுட்டும் பெண் அறங்கள்**

புறத்தே மடநோக்கும் அகத்தே நாணமும் பெண்ணிற் குரிய அணிகலன்கள் *(1089)*, பெண் ஐம்புல இன்பத்திற்குரி யவள் *(1101)*, அவள் காமத் துன்பத்தை வெளிப்படையாகக் கூற மாட்டாள். அவ்வாறு கூறுவது நாணப் பண்பிற்கு இழுக்கு *(1162)*, தலைவன் சொற்களை மனத்தால் நினைப்பதும், அவன் நற்றிறங்களை வாக்கால் உரைப்பதும் பெண் இயல்புகள் *(1184)*, கணவனால் விரும்பப்படும் பெண்களுக்கே வாழுநர் என்னும் செருக்கு ஏற்புடையதாகும் *(1193)*, தலைவி தன் நெஞ்சில் எப்போதும் தலைவனை வைத்திருக்க வேண்டும் *(1204)*, குறிப்பாகவே கருத்தினை உணர்த்த வேண்டும். காம நோயினைக் கண்ணாற் சொல்ல வேண்டுமே தவிர வாயாற் சொல்லக் கூடாது *(1280)*, தலைவன் கொடுமையை இகழ்ந்துரைத்தால் இழிவாகும் என்பதால், அவன் பண்புத் திறங்களையே *(அவர் திறம்)* கருத வேண்டும் *(1298)*. தற்கொண்டான் வருவாய்க்கு ஏற்ப வாழ்க்கை நடத்துபவளே வாழ்க்கைத் துணை *(51)*, மனை மாட்சியே வாழ்க்கை மாட்சி *(52)*, பெண்ணுக்குப் பெருமை கற்பென்னும் திண்மை *(54)*, தெய்வத்தைத் தொழாமல் கணவனைத் தொழ வேண்டும் *(55)*, மகளிர் நிறை காக்கும் காப்பே சிறந்தது *(57)*, நற்பண்புகள் நிறைந்த கணவரைப் பெற்றால் புத்தேளிர் உலகம் பெறுவாள் *(58)*, கணவனைக் காணாத போது அவன் தவறுகளைக் காண்பவள் *(1285)*, மகளிர்

மனம் இனமல்லார் நட்பு மாறுவது போல அடிக்கடி மாறுபடும் *(822)*. இவ்வாறு ஆணைச் சார்ந்த சார்புயிரியாகவே பெண்ணுக் குரிய பண்புகள், அறங்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

**வள்ளுவர் சுட்டும் ஆண் அறங்கள்**

பெண்ணோடு கூடி வாழும் இன்பமே சிறந்தது *(1103)*, பெண்ணின் நற்குணங்களை ஆண் மறக்க மாட்டான் *(1125)*, இழிவாயின செய்தற்கண் விலக்கும் நாணமும் ஒன்றற்கும், தளராத நல்லாண்மையும் *(வீரமும்)* ஆணுக்குரிய குணங்கள் *(1133, 1134)*, காதலியிடத்துக் காதலன் செய்யும் தலையளி வாழ்வார்க்கு வானம் வழங்குவது போன்றது *(1192)*, ஆண்கள் பொருள் இயல்பே தமக்கியல்பாக உடையவர் *(1230)*, *(பொருண்மாலையார்)* வேந்தன் வினை முடிந்த பிறகுதான் வீரன் மனைவியோடு கூடி இன்பம் நுகரலாம் *(1268)* என்பன ஆணின் பண்பு குறித்த ஒரு சில காமத்துப் பால் செய்திகள் ஆகும். இச்செய்திகளை, பொருளீட்டுவதும், புறக்கடமைக்குப் பிறகு அக இன்பம் துய்ப்பதும், இழிவுக்கு நாணுவதும், வீரமும், பெண்ணுக்குத் தலையளி செய்வதும், அவள் குணங்களை மறவாமையும் ஆண் அறங்கள் என்று தொகுத்துக் கொள்ளலாம்.

**காமத்துப் பால் கூறும் வாழ்க்கை அறம்**

ஆண் பெண் நட்பு உடம்பும் உயிரும் போல ஒட்டியிருப் பது *(1122)*. கூடியிருக்கும்போது உடம்போடு கூடிய உயிராகத் திகழ்பவள் பெண். பிரிந்து செல்லும்போது உடம்பை விட்டுச் செல்லும் உயிர் ஆவாள் *(1124)*. இன்ப துன்பங்களை ஒக்க அனுபவித்தல் ஒன்றற்கொன்று அவசியமாதல் காரணமாக இவ்வுண்மை மிகப் பொருத்தமாகக் கூறப்பட்டுள்ளது.

அன்பு செலுத்தும் உறவினர் இல்லாத ஊரில் வாழ்வது துன்பம் தருவதாகும் *(1158)*, அன்பு நீங்காத சுற்றம் ஒருவ னுக்குக் கிடைக்குமானால் அஃது எப்பொழுதும் கிளைத்துச் செழிக்கும் செல்வம் பலவற்றையும் தரும் *(522)* என்று சுற்றந் தழால் அதிகாரத்தில் கூறியிருக்கும் கருத்து இங்கு இணைத்து எண்ணத் தக்கது.

மனையாளோடு கூடிப் பெறும் இன்பம் தம் இல்லத்தில் இருந்து தம் முயற்சியால் வந்த பொருளில் தனக்குரிய பங்கினை உண்ணுவதைப் போன்றது *(1107)* என்ற உவமை தென்புலத் தார், தெய்வம் என்ற குறளையும் பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் *(322)* என்ற குறளையும் நினைவுபடுத்துவதாக உள்ளது.

இன்பத்தை இணைந்து அனுபவிக்கலாம். துன்பத்தைத் தனியாகத்தான் அனுபவிக்க முடியும். எனவே, துன்பம் வந்த போது துணை அவரவர் நெஞ்சமே *(1299)* என்கிறது வள்ளுவம்.

ஆணும் பெண்ணும் உயிரும் உடம்புமாய் ஒன்று கலந்து சுற்றத்தோடு கூடி, தமக்குரிய பங்கினை உண்டு வாழும் தன்னலமும் பொது நலமும் இணைந்த வாழ்க்கையே வாழ் வாங்கு வாழும் வாழ்க்கை என்பது காமத்துப் பாலின் பிழிவு.

**நிறைவுரை**

மனிதர் தன்னை ஒழுங்குபடுத்திக் கொண்டு பொதுநலம் புரிய வேண்டும். எண்ணம், சொல், செயலால் நல்லவை புரிய வேண்டும். அறப் பண்புகள் இம்மையிலும், மறுமையிலும் பயன் தரும். ஆனால், பயன் கருதி அறம் புரியக் கூடாது. ஓர் அறத்தை ஒழுங்காகப் பின்பற்றினால் பிற அறங்கள் தாமே வந்து சேரும். செய்ந்நன்றி பேணுவது மிகச் சிறந்த அறமாகும். செயல்படும் உயிரியாக புற வாழ்வு சார்ந்து ஆணுக்கும் சார்புயிரி யாக அக வாழ்வு சார்ந்து பெண்ணுக்கும் அறங்கள் கூறப்பட் டுள்ளன. இவை இக்கட்டுரைச் செய்திகளின் தொகுப்பு. அன்பே அனைத்திற்கும் அடிப்படை.

**சான்றெண் விளக்கம்**

1. வ.சுப. மாணிக்கம், திருக்குறள் சுடர், பக்.19.
2. க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், பக்.17.
3. டாக்டர் சோ.ந. கந்தசாமி, திருக்குறள் கூறும் உறுதிப் பொருள், பக்.159.
4. டாக்டர் ராஜ் கௌதமன், அறம் அதிகாரம், பக்.156.

# திருக்குறளில் அறிவியல்

1.0 திருவள்ளுவர் உழைப்பின் சிறப்பை உணர்ந்து போற்றியவர். உள்ளத் தூய்மையை வலியுறுத்தியவர். தத்துவக் கண்ணோட்டம் உடையவர். மேலுலகம் குறிந்த நம்பிக் கையைப் புலப்படுத்துபவர். அதே சமயத்தில் உலகத்தோடு எப்படி வாழ வேண்டும் என்று உரத்துச் சொன்னவர். மொத் தத்தில் வாழ்வாங்கு வாழ்வதற்குரிய நெறிமுறைகளை வகுத்துத் தந்தவர். அவர் தந்த திருக்குறள் அறிவியல் கருத்துகளையும் கொண்டிருக்கும் 'அறநூல்' ஆகும்.

இன்று அறிவியல் 'விசுவரூப' வளர்ச்சி பெற்றிருக்கிறது. ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட ஒரு நூலில் இன்றைய அறிவியல் கருத்துகள் முழு அளவில் இருக்கிறது என்று நினைப்பதோ, வலிந்து புகுத்திக் காட்டுவதோ, அறிவியல் கண்ணோட்டம் ஆகாது.

''பல்வேறு சோதனைகளுக்கும் கோட்பாடுகளுக்கும் பயன்படுத்தலுக்கும் ஆளான முதலாளித்துவ அறிவியலுக்கு சோதனைக்கு அதிகம் ஆளாகாத அனுபவத்தாலும் கூரிய நோக்காலும் மட்டுமே பதிவு செய்யப்பட்ட நிலவுடைமை அறிவியல் ஈடு கொடுக்க முடியாது''1 என்று இக்கருத்தைப் புலப்படுத்துவார் அறிஞர் இராம. சுந்தரம்.

திருக்குறளில் காணப்படும் (i) அறிவியல் கண் ணோட்டம், (ii) கல்வியியல், (iii) வேதியியல், (iv) சுற்றுச் சூழலியல், (v) உளவியல், (vi) விலங்கியல், (vii) மருத்துவ

இயல் குறித்த சில அடிப்படைச் செய்திகளைத் தொகுத்து, குறளில் உள்ள அறிவியல் கருத்துகளை விளக்கிக் கூற முற்படுகிறது இக்கட்டுரை.

**1.1 அறிவியல் கண்ணோட்டம்**

கருத்து முக்கியமே தவிர கூறுபவர் யார் என்பது முக்கியத்துவம் இல்லை. கற்றவர், கல்லாதவர், நண்பர், பகைவர், உயர்ந்தோர், இழிந்தோர் முதலிய வேறுபாடுகள் கருதத் தக்கன அல்ல. கூறப்பட்ட பொருளின் மெய்ப் பொருள் காண்பதே அறிவு என்னும் கருத்தை,

''எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.'' *(குறள் 123)*

என்று சுட்டுவர் வள்ளுவர்.

''எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.'' *(குறள் 355)*

என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

பின்னால் வருவதனை முன்னறிபவர் அறிவுடையவர் என்றும் அவ்வாறு முன்னறிந்து காக்க வல்லவர்க்கு நடுங்கச் செய்யும் துன்பம் இல்லை என்றும் *(427.429)* எடுத்துரைப்பர். இக்கருத்துகள் வள்ளுவரின் அறிவியல் கண்ணோட்டத்தைப் புலப்படுத்துவனவாக அமைந்துள்ளன.

**1.2 கல்வியியல்**

கல்வி என்பது எதனையும் நுட்பமாக அறிவது. தகவல் களைத் தெரிந்து வைத்திருப்பது மட்டும் கல்வி ஆகாது. எந்த ஒன்றையும் கற்க வேண்டும். ஐயம் திரிபறக் கற்க வேண்டும். தேர்ந்து கற்க வேண்டும். இந்த மூன்று செய்திகளையும் 'கற்க கசடறக் கற்பவை' என்பார் வள்ளுவர்.

கற்பவை என்பதற்கு உரையாளர் பல கருத்துகளைச் சுட்டியிருந்தாலும் வள்ளுவர் காட்டுவது ''எண்ணும் எழுத்தும்'' ஆகும்.

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு."

என்பது வள்ளுவம்.

'எண்ணென்பது' கணிதம். 'எழுத்து' என்பது இலக்கண இலக்கிய நூல்கள். இவ்விரு கல்வியில் எழுத்திற்கு இக்குறளில் இரண்டாவது இடம் உறுதிப்படுத்தப்பட்டு விடுகிறது என்று குறிப்பிட்டு,

"வள்ளுவர் எண்ணின் இடத்தையும், எழுத்தின் இடத்தையும் ஆழமாக, அறிவார்த்தமாக அறிந்தே எழுதியிருக்கிறார். அன்றைய உலகின் அறிவுத் திறன் பலவற்றின் வளர்ச்சியை முழுமையாக உணர்ந்து, அதன் அடிப்படையில் தனது அணுகுமுறையை வகுத்திருக்கிறார் என்பது புரிகிறது."[2]

என்று விளக்கியுள்ளார் வா.செ. குழந்தைசாமி. ஆனால், "இவ்விரண்டும் கண்ணென்ப" என்கிறார் வள்ளுவர். இதனை அடியொற்றி 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்' என்பர் பின்னோர். எனவே, கண்கள் இரண்டினில் ஒன்றுக்கு உயர்வு சொல்ல வேண்டிய அவசியமில்லை. 'அறிவியலின் அரசி கணிதம்' என்பர். கணிதம் தேவைப்படாத அறிவியல் துறையே இல்லை எனலாம். ஆயிரம், கோடி முதலிய எண்களை வள்ளுவர் குறிப்பிட்டிருப்பதன் மூலம் எண் குறித்த அறிவு தமிழர்க்கு இருந்திருக்கிறது என்பது புலனாகிறது.

அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் *(259)*, பத்தடுத்த கோடி உறும் *(817)* முதலிய குறட்பாக்கள் கருதத் தக்கன.

**1.3 வேதியியல்**

வேதித்தல் என்ற சொல்லுக்கு வெப்பமிடுதல், புடமிடுதல் என்பது பொருள். பொருள்களில் அமைந்துள்ள நுண் பொருள் களின் இயல்பைப் பகுத்தறியப் பெரும்பாலும் வெப்பமிடும் முறையையே அந்தக் காலத்தில் பயன்படுத்தியமையால் வேதியியல் என்று பெயர் பெற்றது.

18ஆம் நூற்றாண்டிற்குப் பிறகுதான் வேதியியல் தனி ஒரு அறிவியல் துறையாக முறைப்படுத்தப்பட்டது. இன்று ஒளி

வேதியியல் (Photo Chemistry), மின் வேதியியல் (Electro Chemistry) என வேதியியல் பெருவளர்ச்சி அடைந்துள்ளது. ஆனால், வேதியியல் துறை பல்வேறு தொழில்களோடு சம்பந்தப்பட்டு தொன்று தொட்டே இருந்து வருகிறது.

கொல்லர், குயவர், கள் தயாரிப்போர், கண்ணாடிப் பொருள் செய்வோர், சாயம் தயாரிப்போர் முதலியோர் பொருட்களின் வேதியியல் பண்பை அறிந்து அவற்றைத் தம் தொழிலுக்குப் பயன்படுத்தினர்.

''பழந்தமிழர் அறிந்திருந்த வேதியியல் கருத்துகள் மிகச் சிலவே. ஒரு சில நிகழ்ச்சிகள் - வாழ்க்கையுடன் தொடர்பு கொண்டவை - அவர்கள் அறிந்திருந்தனர். அவைகள் வேதியியலின் பாற்பட்டவை என்பதை அறிந்தும் அல்லது அறியாமலும் இருந்திருக்கலாம். நிகழ்ச்சிகள் என்னென்ன என்பதை அறிந்திருந்தனரேயொழிய அதற்கான காரணங்களை அவர்கள் அறியவில்லை.''[3]

என்பர் செ. சண்முகம்.

**1.3.1 சார்ந்ததன் வண்ணமாதல்**

மக்களின் அறிவு அவர்கள் சேரும் இனத்திற்கேற்ப மாறுபடும் என்பதனை விளக்க வந்த வள்ளுவர், 'நிலத்தியல்பால் நீர் திரிந்தற்றாகும்' என்கிறார். நீரின் இயல்பு நிலத்தின் இயல்பால் மாறுபடும் என்பது அனுபவம் தந்த அறிவு. முன்னரே குறிப்பிட்டிருப்பது போல் இதற்குரிய காரணத்தை அவர் அறிந்திருந்தாரா என்பது ஐயமே. நிலத்தில் உள்ள உப்புக்கள் கரைவதால் அவற்றின் தன்மை நீரில் கலந்து அது தன் தூய்மையை இழக்கிறது என்பது இன்று வேதியியல் தரும் விளக்கம். உப்புக்கள் கரைதல், அதனால் ஏற்படும் பிற விளைவுகள் வேதி வினையில் ஏற்படும் மாற்றங்கள், அதன் பயன் கொள்வது போன்ற பல கருத்துகளை இன்றைய வேதியியல் துறை விளக்குகிறது.

**1.3.2 மூவகைப் பொருட்களும் கலவைப் பொருளும்**

உலகில் காணும் பல்வேறு வகைப் பொருட்களும் தனிமம் (Element), சேர்மம் (Compound), கலவை (Mixture)

என்ற மூன்றில் அடங்கும். தனிப் பொருளாய்த் தனித்திருப்பது தனிமம். வேதி வினையால் இரண்டு அல்லது அதற்கு மேற் பட்ட தனிமங்களை ஒருங்கிணைத்து உருவாக்கப்படும் பொருள் சேர்மம். தனிமங்களின் பண்பு சேர்ந்த பிறகு இருக்காது. கலவை என்பதும் தனிமங்களின் கூட்டம் தான். அதன் பகுதிப் பொருட்களை எளிய பௌதிக முறைகளைக் கையாண்டு பிரிக்க முடியும். ஆனால், சேர்மங்களைக் கடினமான வேதியியல் முறை கொண்டே பிரிக்க இயலும். உலோகங்களைச் சேர்த்து உருவாக்கும் கருவி பற்றிக் குறிப்பிடுகிறது வள்ளுவம். பொருளின் ஆற்றலை உணர்ந்து அதனைச் சேர்க்கக் கட்டளை யிடும் ஆசான், ‘செருக்கறுக்கும் எஃகு’ என்று குறிப்பிட் டுள்ளார். இரும்பை உருக்கிச் செய்யப்படும் கூர்மையான ஆயுதம் *(வேல்)* ‘எஃகு’ என்ற சொல்லால் இக்குறளில் சுட்டப் பட்டுள்ளது. வடிமான எஃகம் கடிமுகத்து ஏந்தி *(275)* என்கிறது புறநானூறு. எனவே, உலோகக் கலவை குறித்த அறிவு பண்டைத் தமிழர்க்கு இருந்திருக்கிறது என்பது புலனாகிறது.

**1.3.3 நொதித்தல்**

வெவ்வேறு வகையான நொதித்தலினால் வெவ்வேறு வகைப் பொருட்கள் கிடைக்கும் என்பதை விளக்கும் நொதித் தல் (Fermentation) வேதியியலில் முக்கியமான வினையாகும். இதன் அடிப்படையில் பல்வேறு தொழிற்கூடங்கள் இன்று தோன்றி வருகின்றன. நொதித்தலால் கிடைக்கும் பொருட் களில் ஒன்று புளிப்புக் காடி.

“துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று.” *(1050)*

என்கிறார் வள்ளுவர்.

‘வறுமையுற்றோர் முற்றத் துறக்காமல் இருப்பது பிறர் இல்லத்தில் உள்ள உப்புக்கும் புளித்த நீருக்கும் கேடு’ என்பது இப்பாடலின் பொருள். எனவே, புளித்த நீர் தயாரிப்புக் குறித்து பண்டைத் தமிழர் அறிந்திருந்தனர் என்பது தெரிகிறது.

வள்ளுவர் கூறும் பாத்திரத்தின் தீமையால் பால் திரியும் என்ற உவமையால் *(1000)* ஒரு பொருளின் தீமை அதனோடு

சேரும் மற்றொரு பொருளைத் திரித்து விடும் என்ற வேதியியல் கருத்தை அவர் தெரிந்து வைத்துள்ளார் என்பது தெரிகிறது.

''பெய்தகலம் சிதைக்கும் பாலின் சுவை'' *(21)*

என வழிமொழிகிறது கடிகை.

**1.4 சுற்றுச் சூழலியல்**

**1.4.1 நீர்**

மனித வாழ்க்கைக்கு நிலமும், நீரும், காற்றும் அவசிய மானவை. இம்மூன்றும் குறித்து வள்ளுவர் சிந்தித்துள்ளார். கடல், நதி, ஆறு, ஏரி, குளம் ஆகியவை நீர் ஆதாரங்கள். இவற்றிலிருந்து நீர் ஆவியாகி முகில்களாகத் திரண்டு இயங்குகிறது. காற்றால் அடித்துச் செல்லப்படும் மேகங்கள் மலைகள், காடுகளால் ஏற்படும் அழுத்த வேறுபாட்டால் நீராவியாகி பின்னர் மழையாகப் பெய்கிறது. அந்நீர் மண்ணில் விழுந்து, பரந்து பாய்ந்து, குளமாய் நிரம்பி, ஆறாய்ப் பெருகி, நதியாய் நடந்து, கடலில் கலக்கிறது. மீண்டும் கதிரவனின் வெப்பத்தால் ஆவியாகி மேகமாய்த் திரண்டு மழையாகப் பொழிகிறது. இது ஒரு முழுமையான நீரியல் சுழற்சி (Hydrological Cycle) என்பர் அறிவியலார். மழையின்றி உலகில் நீரில்லை; ஒழுக்க வாழ்வில்லை என்பதை வள்ளுவர்.

''நீரின்றி அமையாது உலகெனின்யார் யார்க்கும்
வானின்றி அமையா தொழுக்கு.'' *(20)*

என்கிறார்.

இக்கருத்தை 'நீரின்றி அமையா உலகம் போல' என நற்றிணையும் நவில்கிறது. ''வானத்துளி நோக்கி வாழும் உலகம்'' *(நற்.26)* என்கிறது கடிகை.

மழைதான் நீர் ஊற்றுகளுக்கும் அடிப்படை என்ற கருத்து 14ஆம் நூற்றாண்டில்தான் உறுதியாக்கப்பட்டது என்பர் வா.செ. குழந்தைசாமி. ஆனால், இக்கருத்தைப் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்பே வள்ளுவர் கூறியிருப்பது பாராட்டத் தக்கதாகும். கடல் நீர் என்பது ஒரு கரைசல். இதில் சோடியம் குளோரைடு முதலான பல்வேறு உப்புகள் கலந்துள்ளன.

எனவே, தூய நீரும் உப்புக் கரைசலும் கலந்தது கடல் நீர் எனலாம். கடலின் மேற்கூறிய தன்மையே நீர்மை எனப்படும். இது இடத்திற்கு இடம் மாறுபடும். இந்நீர்மைக்குத் தக்கபடி கடல்வாழ் உயிரினங்கள் வாழ்கின்றன. விட்டு விலகுகின்றன. இறந்து படுகின்றன.

இவ்வாறு,

''கடல் தன் நீர்மை குன்றாமல் இருப்பதற்கு மழை நீர், ஊற்று நீர், ஆற்று நீர், ஆவியாதல் என்பன அடிப்படைக் காரணங்கள்''[4]

என்பர் அறிவியலாளர்.

இவற்றுள் முதன்மைக் காரணம் மழையே ஆகும். மழை பொய்த்தால் கடலின் நீர்மை குறையும். உப்பளவு மிகும். கடலின் வளம் கெடும். உயிரினங்கள் அழிந்துபடும். நாட்டின் பொருளாதாரம் பாதிக்கப்படும். நீர் வளம் குறைந்தால் நில வளமும் குறையும். உப்பளவு, நீரளவு போன்ற அறிவியல் கண்டுபிடிப்புகளை வள்ளுவர் உணரார். ஆயினும், மழை பெய்யாவிட்டால் கடலும் தன் வளமும் கெடும் என்பதை,

''நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடும்.'' *(17)*

என்று வலியுறுத்திக் கூறியுள்ளார்.

'வான்தரும் மழையை அமிழ்தம்' *(11)* என்பார் வள்ளுவர். மழை பெய்யும் போது காற்றில் உள்ள நைட்ரஜன், ஆக்ஸிஜன் போன்ற பிற வாயுக்கள் மழையுடன் கரைந்து விடுகின்றன. எனவே, ஆற்றலும் உயிர்ப்புச் சக்தியும் அதிகமாகிறது. இவ்வாறு ஆக்கம் சேர்க்கும் மழையை 'அமிழ்தம்' என்று குறிப்பிட்டிருப்பது பொருத்தம்தானே! 'அளவுக்கு மிஞ்சினால் அமிழ்தமும் நஞ்சு' என்பது பழமொழி. மழை அளவு மீறி பெய்தால், காலம் தவறிப் பெய்தால் உயிர்கள் அனைத்தும் பாதிக்கப்படும் என்பதை 'கெடுப்பதூவும்' *(15)* என்ற குறளில் புலப்படுத்தியுள்ளார் வள்ளுவர்.

### 1.4.2 காற்று

மனிதன் நீரில்லாமல் ஓரிரு நாட்கள் மட்டும் வாழ முடியும். ஆனால், காற்றில்லாமல் ஒரு சில மணித் துளிகள் கூட வாழ இயலாது. எரிமலைச் சிதறல், புயல், காடுகள் தீப்பற்றுவதால் ஏற்படும் சாம்பலின் தாக்கம், நிலச் சரிவு முதலிய இயற்கைக் காரணங்களாலும் மின்சாரத் தேவை, தொழிற்சாலைப் பெருக்கம், வாகனப் பெருக்கம், அணு உலைகள் முதலிய செயற்கைக் காரணங்களாலும் காற்று மாசு படும். கார்பன் மோனாக்சைடு *($CO_2$)* சல்பர்-டை-ஆக்ஸைடு *($SO_2$)*, நைட்ரஜன் ஆக்சைடு முதலிய வாயுக்கள் காற்று மாசு பாட்டை உருவாக்கி வருகின்றன. இதனால் சுவாச நோய், இதய நோய், பார்வைக் குறைபாடு, சிறுநீரக நோய், நரம்பியல் நோய், தோல் புற்று நோய், நோய் எதிர்ப்புத் திறன் குறைதல் முதலிய பல விளைவுகள் ஏற்படுகின்றன. இயற்கையாக ஏற்படும் காற்று மாசு குறித்து வள்ளுவத்தில் சிறு குறிப்பு ஒன்று காணப் படுகிறது.

'யாராலும் விரும்பப்படாதவன் செல்வம் நடுவூரில் நச்சு மரம் பழுத்தது போல்' *(1008)* என்கிறார் வள்ளுவர். இக்குற ளின் விளக்கத்தில் 'அண்மை உடைமைகளால் பயனில்லை' என்பார் பரிமேலழகர். ஆனால், நஞ்சுப் பழம் என்று தெரிந்த வர்கள் அதை ஆசைப்பட்டு உண்ண மாட்டார்கள். ஏன் எவ்வாறு துன்பம் நேரிடும் என்று எண்ணிப் பார்த்தால் ஒரு அரிய உண்மை அதில் பொதிந்திருப்பது புலனாகிறது.

நஞ்சுப் பழத்தின் நச்சு மணம் காற்றால் ஊர் முழுவதும் பரவி நோயைத் திசைதோறும் சென்று சேர்க்கும். அது போல யாராலும் விரும்பப்படாதவன் செல்வம் சமுதாயத் தீமைகளை வளர்க்கிறது. எனவே, இயற்கையால் ஏற்படும் காற்று மாசு நோயை விளைவித்தலை இக்குறள் குறிப்பாகக் காட்டுவதாகக் கொள்ள லாம்.

### 1.5 உழவியல்

உலகத் தொழில்களில் உயர்ந்தது உழவுத் தொழில். உழவே தலை *(1031)*, உழுவார் உலகத்தார்க்கு ஆணி *(1032)* என்பார்

வள்ளுவர். நாட்டின் பொருளாதாரத்தின் முதுகெலும்பு வேளாண் தொழில் எனலாம். உழவுத் தொழில் குறித்து

"ஏரினும் நன்றாய் எரு விடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு." *(1038)*

என்பார் வள்ளுவர்.

1. உழுதல் (Tillge), 2. உரமிடுதல் (Fertilization), 3. களை யெடுத்தல் (Weed Control), 4. நீர்ப் பாய்ச்சுதல் (Irrigation), 5. பயிர்ப் பாதுகாப்பு (Crop Production) என இவற்றை வகுத்துரைக்கலாம்.

உழுதல், எருப் பெய்தல், களை கட்டல், நீர் கால் யாத்தல், காத்தல் என்று இம்முறையாய ஐந்தும் வேண்டும் என்பதாம் என்று விளக்கியுள்ளார் பரிமேலழகர். நிலத்தை உழுத பிறகு அதனை ஆறப் போட வேண்டும். 'தொடிப்புழுதி கஃசா உணக்கின்' *(1037)* என்பார் வள்ளுவர்.

ஒரு நிலத்தினை உழுதவன் ஒரு பலப் புழுதி கஃசாம் வண்ணம் அதனைக் காய விடுவானாயின் அதன்கண் செய்த பயிர் ஒரு படியின்கண் அடங்கிய எருவும் இட வேண்டாமல் பணைத்து விளையும் என்று விளக்குவர் பரிமேலழகர். முன்னம் தான் நீர் பதம் கொண்டு உழுத ஈரப் புழுதி எண் கழஞ்சும் இரு கழஞ்சாகக் கீழ்ப்புழுதி கிளர்ந்து மேற்பட்டு உணங்குமாறு பின்னும் பின்னும் பெயர்த்து இனிது உணக்கப் பெறின், பிடித்து ஒரு பிடி எருவும் கூட வேண்டாவாறு அங்ஙனம் உழுது காய்ந்த புழுதிச் சுவடு தானே தன் வேர் ஊறு சுவையாக மிக விளையும்' என்று காளிங்கர் விரித்துரைத்திருப்பது கருதத் தக்கது.

**1.6 விலங்கியல்**

விலங்கினங்களை வகைப்பாட்டியலார் (Taxonomists), பல தொகுதிகளாகவும் (Phylum), வகுப்புகளாகவும் (Classes), பிரிவுகளாகவும் (Order), குடும்பங்களாகவும் (Families), இனங் களாகவும் (Species) வகைப்படுத்தியுள்ளனர். முதுகெலும் புடையவை (Invertebrates), முதுகெலும்பற்றவை (Verteb-

rates) என்பன இரு பெரும் பிரிவுகளாகும். முதுகெலும்பற்ற விலங்கு பற்றிய குறிப்பு.

"என்பிலதனை வெயில் போலக் காயுமே." *(77)*

என்று ஒரே ஒரு குறளில்தான் இடம் பெற்றுள்ளது. இப்பாடலில் எலும்பில்லாத புழுக்கள் கதிரவனின் வெப்பத்தால் இறந்து படும் என்கிறார். முதுகெலும்புடைய விலங்குகளை மீனினங்கள் (Pisces), ஊர்வன (Reptiles), பறவைகள் (AVes), பாலூட்டிகள் (Mammals) முதலிய வகுப்புகளாகப் பிரிப்பர்.

ஆமை, மீன், முதலை, பாம்பு முதலிய ஊர்வன குறித்தும், புள், காக்கை, கொக்கு, மயில், அன்னம் ஆகிய பறவைகள் குறித்தும், எருது, யானை, புலி, மான் குதிரை ஆகிய பாலூட்டிகள் குறித்தும் குறிப்பிடுகிறது வள்ளுவம். விலங்குகளின் இயல்புகள் மற்றும் வாழ்க்கை முறை குறித்து ஓரளவு அறிய முடிகிறது. *(காண்க. 126, 931, 495, 763, 890, 1146, 338, 481, 527, 490, 475, 1081, 1120, 59, 500, 597, 599, 678, 722, 1087, 28, 60, 23, 969, 1087, 814, 1066).*

### 1.7 மருத்துவவியல்

வள்ளுவர் காலத்தில் மருத்துவம் நன்கு வளர்ச்சி பெற்றிருந்தது என்பது 'மருந்து' என்ற அதிகாரத்தில் அமைந்துள்ள குறட்பாக்களால் உறுதியாகிறது. குறளில் நோயற்ற வாழ்வு வாழ வழிமுறைகள் *(உணவு மற்றும் உணவுக் கட்டுப்பாடு)*, நோய் வரக் காரணங்கள், நோய் வந்தால் தீர்க்கும் நெறிகள், மருத்துவத்தின் நான்கு அடிப்படைக் கூறுகள் குறித்து நுணுக்கமாகவும் விளக்கமாகவும் கூறப்பட்டுள்ளன.

#### 1.7.1 நோயற்ற வாழ்வு வாழ வழிமுறைகள்

உண்ட உணவு சீரணமான பிறகுதான் உண்ண வேண்டும். மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது அற்றது போற்றி உணின் *(பா.942)*, அற்றது அறிந்து *(944)*, இழிவறிந்து உண்பான் *(946)*, தன் உடம்பிற்கேற்ப சீரணமாகும் அளவு அறிந்து உண்ண வேண்டும் *(அளவறிந்து உண்க (943))*. தன் உடம்பிற்கு மாறுபாடில்லாத உணவை (Allergy) உண்ண

வேண்டும் *(மாறல்ல துய்க்க பா.944)*, மாறுபாடில்லாத உண்டி *(945)*, உடலின் தன்மைக்கேற்ப தள்ள வேண்டியவற்றைத் தள்ளி காலமறிந்து நோய்க்குத் தக்கவாறு உணவு முறைகளைக் கடைப்பிடித்து உண்ண வேண்டும் *(944)*, பசியளவு அறிந்து உண்ண வேண்டும் *(தீயளவு 947)* என்றும் உணவு உண்ணும் நெறிமுறைகளைக் கூறி, மருந்தே வாழ்வு என்றிருக்கும் மக்களுக்கு உணவே மருந்து என்கிறது வள்ளுவம். அளவு மீறி உணவுண்பது நோய் தரும் *(கழிபேரிரையான் கண் நோய் நிற்கும் (946)*, பெரிதுண்ணின் நோய் அளவின்றிப்படும் *(947)* என்று எதிர்மறை முகத்தாலும் உணவுக் கட்டுப்பாட்டை வலி யுறுத்துகிறது. இக்குறளில் உள்ள,

''தீயளவு என்பதற்குக் கலோரி சக்தி என்று பொருள் கொள்வது இன்றைய அறிவுலகக் கொள்கைக்கு ஒத்ததாகும்.''[5]

என்பர் எல். ராமசாமி. எனவே, நோயற்ற வாழ்க்கைக்கு உணவுக் கட்டுப்பாட்டையே பெரிதும் வலியுறுத்துகிறது வள்ளுவம் எனலாம். சமச்சீர் உணவை உடம்பிற்கேற்ப, அளவறிந்து, காலமறிந்து, பசித்த பிறகு உண்ண வேண்டும் என்று மேற்கூறிய கருத்துகளைத் தொகுத்துரைக்கலாம்.

### 1.7.2 நோய் வரக் காரணம்

மருத்துவ நூலார் குறிப்பிடும் வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்றும் உணவின் அளவு மிகுந்தாலும் குறைந்தாலும் நோயை ஏற்படுத்தும் என்கிறார் வள்ளுவர்.

''மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று.'' *(941)*

மிகினும் குறையினும் என்பதற்கு உணவும் செயல்களும் ஒருவன் பகுதிக்கு ஒத்த அளவினவன்றி அதனின் மிகுமாயினும் குறைமாயினும் என்பர் பரிமேலழகர். 'உணவும் உறக்கமும் இணைவிழைச்சும் தன்னுடம்பின் அளவிற்கு மிகினும் குறையினும்' என்பர் மணக்குடவர்.

வாதம், பித்தம், கபம் நோய் செய்வதற்கு உணவு, உறக்கம், செயல்பாடு ஆகியன மிகுதலும் குறைதலும்தானே காரணம்.

''இன்றைய மருத்துவக் கண்ணோட்டத்துடன் விட்டமின்கள் மிகினும் குறையினும் நோய் வரும் என்றும் தாது உப்புக்களோ கனிமங்களோ நம் உடல் தேவைக்குக் குறையினும் மிகினும் நோய் வரும்.''[6]

என்றும் விளக்கம் கூறுவர் எல். ராமசாமி.

**1.7.3** நோய் தீர்க்கும் நெறிகள்

மருத்துவர், நோயாளிக்கு ஏற்பட்டிருப்பது என்ன நோய் (Diseases), அதற்குரிய காரணம் யாது (Aetiology), போக்குவதற் குரிய வழிமுறை யாது (Cure) என்று ஆராய்ந்து வாய்ப்பன (Treatment) செய்ய வேண்டும் என்பதனை,

''நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.''

என்கிறார் வள்ளுவர். இதனை Diagnosis என்பர் இன்றைய மருத்துவவியலார்.

நோயுற்றவன் உடம்பின் வன்மை, மென்மை மற்றும் வயது *(நோய் தாங்கும் ஆற்றல், மருந்தை ஏற்றுக் கொள்ளும் நிலை)* நோயின் தன்மை தொடக்க நிலையா? வளர் நிலையா? முதிர்வு நிலையா? அறுவகைப் பருவ காலம் ஆகியவற்றைக் கருதிப் பார்த்து மருத்துவர் மருந்து தர வேண்டும் *(949)* என்பதை,

''உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல்.'' *(949)*

என்ற குறளில் குறிப்பிட்டுள்ளார்.

**1.7.4** மருத்துவவியலின் நான்கு அடிப்படைக் கூறுகள்

நோயாளி, மருத்துவன், மருந்து, அருகிலிருந்து காப்பவன் ஆகிய நான்கு திறத்தது மருத்துவவியல் என்பதை,

''உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வான்என்று
அப்பால்நாற் கூற்றே மருந்து.'' *(950)*

என்பார் வள்ளுவர்.

இக்குறளின் விளக்கத்தில் உற்றவன் வகை நான்கு, தீர்ப்பான் வகை நான்கு, மருந்து வகை நான்கு, உழைச் செல்வான் வகை நான்கு என்று பரிமேலழகர் விளக்கியிருப்பது கருதத் தக்கது.

**1.7.5 கூடுதல் விளக்கங்கள்**

''உழைச்செல்வான் *(துணையாளர்)* என்பதில் மருத்துவக் கருவிகளையும் (Medical Instruments) உள்ளடக்கலாம்''[7]

என்பர் கு. மோகனராசு. ஆனால், அது மருந்து என்பதிலேயே அடங்கி விடும். இதற்கு 'உடலிலே உடன்பிறந்த நோய் அகற்றும் சக்தி'[8] எனப் பொருள் கண்டுள்ளார் ஜே.ஜி. கண்ணப்பர். ஆனால், உற்றவன் தீர்ப்பான் என்ற சொல்ல மைப்புகளை எண்ணிப் பார்க்கும் போது மேற்கூறிய விளக்கம் பொருந்தாததாகிறது.

அறிவுடைமை அதிகாரத்தில் 'எதிரதாக காக்கும் அறிவி னார்க்கு இல்லை அதிர வருவதோர் நோய்' *(429)* என்ற குறள் இடம் பெற்றுள்ளது. பின்னர் வருவதை முன்னர் கருதிப் பார்த்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ளும் அறிவுடையவர் களுக்கு நடுங்கும்படியான நோய் ஒன்றும் உண்டாகாது என்பது இக்குறளின் நேர்ப் பொருளாகும். ஆனால், இக்குறள் விளக் கத்தில் முனைவர் மு. கோவிந்தசாமி

அதிர வருவதோர் நோய் - அயலான் படையெடுப்பு, மாரடைப்பு, புற்று, கொடிய விபத்து, இரத்த அழுத்தம், சர்க்கரை முதலிய நோய்களாகும் என்கிறார்.

''மருத்துவ நோக்கில் இக்குறளைக் கருதிப் பார்த்து நோய் வராமல் காக்கும் மருத்துவ முறையை (Preventive Medicine) உரைப்பதைக் காணலாம் என்று குறிப்பிட்டு, அதிர வருவதோர் நோய் என்பதற்கு உடல் நடுக்கம் அல்லது மன நடுக்கம் தரும் நோய் என்றும் பொருள் கொள்ளலாம். அல்லது அதிர்ச்சி யினால் வரும் நோய் என்றும் பொருள் கொள்ளலாம். இரண் டாம் வகையில் அடங்குவனவாக. மாரடைப்பு (Heart Attack), நரம்புத் தளர்ச்சி (Neurological Disorders) முதலியவற்றைக் கொள்ளலாம்''[9]

என்று கு. மோகனராசு குறிப்பிட்டிருப்பது ஓரளவு ஏற்கத் தக்க கூடுதல் விளக்கமாக உள்ளது. அதே நேரத்தில் 'மெய்யுணர்தல்' என்ற அதிகாரத்தில் இடம் பெற்றுள்ள

''சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.'' *(359)*

என்ற குறளின் விளக்கமாக, அதிகார அமைப்பே வள்ளுவர் செய்ததாகக் கொள்ள வாய்ப்பில்லை என்று குறிப்பிட்டு,

''தம் பிறப்புக்குக் காரணமான பெற்றோர் தம் மரபணுப் பண்புகளை உணர்ந்து அவற்றில் உள்ள நோய்மைப் பண்புகளை அறிந்து, அப்பண்புகள் தம் உடலில் செயல்பாடற்றுப் போகும் வழிகளை அறிந்து அவற்றை முடங்கச் செய்தால் மரபு வழியாக வரும் நோய்கள் வாரா.''[10]

என்று விளக்கம் அளித்திருப்பது *(சார்தருநோய் - மரபு வழி நோய்கள்)* ஆர்வ மிகுதி காரணமான மிகை விளக்கமாகத் தெரிகிறது.

''குறிப்பின் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல்.'' *(703)*

என்ற குறளுக்கு 'ஒருவரது முகக் குறிப்பால் அவருடைய மனக் குறிப்பை உணர வல்லவரைத் தம் உறுப்பினுள் எதைக் கொடுத்தும் தம்மோடு சேர்த்துக் கொள்ள வேண்டும்' என்பது பொருள். இக்குறளில் உள்ள உறுப்பு, பொருள், நாடு, யானை, குதிரை முதலிய புறத் துறுப்புக்கள் என்பர் பரிமேலழகர். அங்கம் என்பர் மணக்குடவர். உரை வேற்றுமை கண்ட அறிஞர் சாரங்கபாணி பிற குறட்பாக்களைச் சான்று காட்டி ஈண்டும் மக்கள் உறுப் பையே கொள்ளலாம் என்பர். இக்குறளை எடுத்துக்காட்டி,

''திருவள்ளுவர் காலத்திலேயே உறுப்பைக் கொடையாகக் கொடுக்கும் போக்கும், அதனை மற்றவர்க்குப் பொருந்தும் முறையும் இருந்துள்ளதை உய்த்துணர முடிகிறது.''[11]

என்று முனைவர் கு. மோகனராசு குறிப்பிடுவது 'யார் யார் வாய் கேட்பினும்' என்ற குறளை நினைவுபடுத்துகிறது. இவ்வாறே 'என்பும் உரியர் பிறர்க்கு' *(72)* என்ற குறளில் எலும்புக் கொடை

குறித்த குறிப்பு உள்ளது என்பார் அவர். உடம்பு என்பது தோல், தசை, எலும்பு, நரம்பு முதலியவற்றால் கட்டப்பட்டது. இங்கு எலும்பு என்பது ஆகு பெயராக உடம்பைக் குறிக்கிறது என்பது பொருத்தமானது. ஆருயிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு *(73)* என்பதில் எலும்பு உடம்பைக் குறித்து நிற்றல் கருதத் தக்கது. இவ்வாறே,

''நாமநீர் வைப்பு *(149)* அச்சம் தருகின்ற நோய்க் கிருமிகளை உள்ளடக்கிய நீரின் வைப்பிடம்''12

*(ஆண் - பெண்ணின் பிறப்புறுப்பு)* என்று விளக்கியிருப்பது அதிர்ச்சி தருகிறது. மிகை ஈடுபாடு காரணமாக இவ்வாறெல் லாம் விளக்கம் அளிப்பது அறிவியல் நோக்கிற்கு முரணானதாகும்.

**நிறைவுரை**

"எல்லாப் பொருளும் இதன்பால்உள இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லை."

என்ற வள்ளுவ மாலைப் பாடல் முற்றிலும் ஏற்புடையதன்று.

பல்துறைக் கருத்துகள் வள்ளுவத்தில் பொதிந்துள்ளன எனப் பாராட்டலாம். அவ்வகையில் கல்வியியல், வேதியியல், சுற்றுச் சூழலியல், உழவியல், விலங்கியல், ம்ருத்துவவியல் ஆகிய துறை சார்ந்த கருத்துகள் வள்ளுவத்தில் குறிப்பிடப்பட் டிருப்பது சார்புக் கண்ணோட்டம் இன்றி இக்கட்டுரையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இச்செய்திகளால் அறவியல் நூலான வள்ளுவம் அறிவியல் கருத்துகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது எனப் பாராட்டலாம்.

**சான்றெண் விளக்கம்**


1. முனைவர் இராமசுந்தரம் - தமிழக அறிவியல் வரலாறு, முன்னுரை, பக்.1.
2. முனைவர் வா.செ. குழந்தைசாமி - வாழும் வள்ளுவம், பக்.65-66.
3. முனைவர் ந. கடிகாசலம் - தமிழும் பிற துறைகளும், பக்.47.

4. Preece and Wood, The Foundation of Geography, p. 90, மேற்கோள் ஆட்சி, புலவர் மு. வெங்கடேசன் - திருக்குறளில் மழை தரும் சிந்தனைகள், பக்.44.

5. எல். இராமசாமி, திருக்குறளில் மருந்து, பக்.32.

6. மேலது, பக்.9-10.

7. முனைவர் கு. மோகனராசு, திருவள்ளுவர் ஒரு மருத்துவர், பக்.18.

8. ஜே.ஜி. கண்ணப்பர், திருக்குறளில் அறிவியல், பக்.61.

9. முனைவர் க. மோகனராசு, திருவள்ளுவர் ஒரு மருத்துவர். பக்.30-31.

10. மேலது, பக்.36.

11. மேலது, பக்.122.

12. மேலது, பக்.33-157.

# கவிதையாக்க நோக்கில் அற இலக்கியங்கள்

''வார்த்தைகள் நடந்தால் வசனம். நடனமாடினால் கவிதை'' என்பார் கண்ணதாசன். உணர்ச்சிப் பெருக்கால் உருவாவது இலக்கியம். ஆனால், அற இலக்கியங்கள் எதை, எப்படிச் சொல்ல வேண்டும் என்று ஓரளவு சிந்தித்துத் திட்டமிட்டு எழுதப்பட்டவை. கற்பனைச் செவ்வி மிக்க புனைவியல் நெறி சார்ந்தவை அல்ல அவை. ''பாக்களிலே வெண்பா தான் பத்தினிப்பா' என்பர் தமிழன்பன். கட்டுப்பாடு மிகுந்த வெண்பா யாப்பில் கருத்துகளைச் சொல்வதற்கே முதலிடம். அணிநலம் அமையப் புனைவதில் அற இலக்கியக் கவிஞர்கள் அக்கறை செலுத்த மாட்டார்கள். இருப்பினும் சொற்களைத் தேர்வதில், தொடர்களை அமைப்பதில், நிறுத்தங்களைச் செய்வதில், வினாக்களை அடுக்கிக் கூறுவதில், அளபெடை, விளிகளைப் பயன்படுத்துவதில், மோனை, எதுகை முதலிய தொடைகளைக் கையாளுவதில் உவமை ஆட்சியில், சொற்களைத் திரும்பத் திரும்ப வரும்படி செய்வதில் அற இலக்கியக் கவிஞர்கள் தங்கள் ஆளுமையை வெளிப்படுத்தியுள்ளார்கள். மனிதன் வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டிய அறங்களைக் கூறும் விதிமுறை இலக்கியங்களான (Prescriptive) அற இலக்கியங்கள் உலக வாழ்க்கையின் பண்புகளை விளக்கும் விளக்க முறை (Descriptive) இலக்கியமாகவும் அமைந்துள்ளன. பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் 11 நூல்கள் அற இலக்கியங்கள். இவற்றுள் கருத்தாலும் கவிதை நலத்தாலும் முதன்மை இடம் பெறுவது திருக்

குறளே. அடுத்த நிலையில் நாலடியார், நான்மணிக்கடிகை, திரிகடுகம் ஆகிய நூல்கள் குறிப்பிடத்தக்கவை. குறளின் அணிநலம், கவிதையழகு குறித்துப் பல கட்டுரைகள் எழுதப்பட்டிருப்பதால் ஆய்வு வரையறை கருதி நாலடியார்ப் பாடல்கள் மட்டும் இக்கட்டுரையில் கவனம் பெறுகின்றன.

ஒரு நல்ல கவிதை அடி படித்தவுடன் நெஞ்சில் பதிய வேண்டும். ஈர மண்ணில் பதியும் கால் தடம் போல. *(எ.கா)*

கல்வி கரைஇல கற்பவர் நாள் சில,
தலையாயார் தம் கருமம் செய்வார்,
தன்னைத் தலையாகச் செய்வானும் தான்
அறப்பயன் யார்மட்டும் செய்க,
அடங்காதார் என்றும் அடங்கார்,
நல்கூர்ந்த மக்கட்கு அணிகலமாவது அடக்கம்
தெளிவிலார் நட்பின் பகை நன்று
இசையா ஒரு பொருள் இல்லென்றல் யார்க்கும்
வசையன்று
ஓதியும் ஓதார் உணர்விலார்
செல்வம் சகடக்கால் போல வரும்,
இளையான் அடக்கம் அடக்கம்,
நுண்ணுணர்வின்மை வறுமை

போன்ற நாலடியார்த் தொடர்கள் எண்ணத் தக்கவை.

**சொல் தேர்வு**

நாலடியார் அறிவுடைமை அதிகாரத்தில் பின்வரும் பாடல் இடம் பெற்றுள்ளது.

உணர உணரும், உணர்வுடை யாரைப்
புணரிற் புணருமாம், இன்பம் - புணரின்
தெரியத் தெரியும், தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமாம் நோய் *(247)*

நம் குணங்களை உணர்ந்து கொள்ள அறிந்துள்ள உணர் வுடையாரைச் சேர்ந்தால் இன்பம். அறிந்து கொள்ளத் தெளி

வான அறிவில்லாதவர்களைச் சேர்ந்தால் *(துன்பம்)* அவரை விட்டுப் பிரிந்தால் பிரியும் துன்பம் என்பது பாடற்பொருள். இன்பம் என்பதற்கு எதிர்ச்சொல் துன்பம். ஆனால், அச் சொல்லை இங்குப் பயன்படுத்த முடியாது. காரணம் இரண்டு. இலக்கணக் கட்டுப்பாட்டின்படி ஈற்றுச் சீரில் ஈரசைச் சொல் வரக் கூடாது. மற்றொரு காரணம் இன்பம் என்பது பொதுச் சொல். நோய் என்பது சிறப்புச் சொல். துன்பம் வருவதற்குரிய பல காரணங்களில் நோயும் ஒன்று. எனவே, நாலடியார்க் கவிஞர் ''நோய்'' என்ற சிறப்புச் சொல்லைத் தேர்ந்துள்ளார்.

**தொடராக்கச் சிறப்பு**

இளமை நிலையற்றது என்பதை விளக்க வரும் நாலடியார்

**வேல்கண்ணள் என்றிவளை வெஃகன்மின் மற்றிவளும்**
**கோல்கண்ணள் ஆகும் குனிந்து.**

என்று விவரிக்கிறது. இளமையைக்குறிக்க வேல்கண்ணள் என்றும் முதுமையைக் குறிக்க வேல்கண்ணள் என்றும் தொடராக்கம் செய்யப்பட்டுள்ளது.

நிலையாமையே உலகின் நிலைத்த இயல்பு என்று குறள் முரண்சுவை அமையப் பாடுவதுபோல நிலையாமையை விளக்க வரும் நாலடியார்,

சென்றே எறிப ஒருகால் சிறுவரை
நின்றே எறிப பறையினை - நன்றே காண்
முக்காலைக் கொட்டினுள், மூடித்தீக் கொண்டெழுவர்
செத்தாரைச் சாவார் சுமந்து *(24)*

என மொழிச்சுவை அமையப் புலப்படுத்தியுள்ளது.

மலைநலம் உள்ளும் குறவன், பயந்த
விளை நிலம் உள்ளும் உழவன் *(356)*

என்ற பாடலில் மலைவளம் என்றிருக்க வேண்டிய தொடர் விளைநிலம் என்ற இரண்டாம் அடியின் பொருட்டு மலைநலம் என்று மாற்றிக் கையாளப்பட்டிருக்கிறது.

யாப்பின் பொருட்டுச் சொற்களை மாற்றிக் கையாள்வதற்கு உள்ள கவியுரிமை இங்கே பயன்படுத்தப்பட்டுள்ளது.

வறுமையுற்ற காலம் என்பதற்கு ''ஏட்டைப் பருவம்'' *(பா.358)* என்ற சொல்லையும் உயர்வுற்ற காலம் என்பதற்கு ''மோட்டிடத்தும்'' என்ற சொல்லையும் கையாண்டிருப்பது கருதத் தக்கது.

**பிணை**

மோனை பற்றி விவரிக்கும் போது தொல்காப்பியர் பொழிப்பு *(1,3)* ஒரூஉ *(1,4)* ஆகிய தொடர்களைத் தனியே குறிப்பிட்டுள்ளார். அடிகளை அமைக்கும் போது பெரும் பாலும் இரண்டு சீர்களில் அல்லது மூன்று சீர்களில் ஒலி நிறுத்தம் வரும் என்பதை அறிந்து கொண்ட நிலையில் இவ்விலக்கணம் எழுதப்பட்டுள்ளது எனலாம். கருத்துகளைப் பிணைக்கும் நிலையில் அமைந்த இவ்வுறுப்பு அண்மைக் காலமாக பிணை என்று பேசப்படுகிறது. இதை உறுப்பாகக் கருதுவதைவிட உத்தியாகக் கருதலாம். கவிஞர்களின் தனித் தன்மையை அடையாளம் காட்டும் கூறுகளுள் பிணையும் ஒன்று. குறளில் பல பாடல்களில் முதல் மூன்று சீர்களில் ஒலி நிறுத்தம் இருப்பதை அனைவரும் அறிவர். *(எகா) (செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம்; எல்லார்க்கும் நன்றாம் பணிதல்)* ''இம்மை பயக்குமால்'' என்ற நாலடியார் பாடலில் முதல் இரண்டு அடிகளில் இரண்டு சீர்களுக்குப் பிறகு ஒலி நிறுத்தம் அமைந்துள்ளது. மூன்றாம் அடியில் மூன்றாவது சீருக்குப் பிறகு ஒலி நிறுத்தம் உள்ளது. 'நட்புநார் அற்றன நல்லாரும் அஃகினார், அற்புத் தளையும் அவிழ்ந்தன' என்ற பாடலும் இப்படிப் பட்டது *(பா.12)*. ஒரு சில பாடல்களில் சீர்தோறும் ஒலி நிறுத்தம் உள்ளது.

*(எகா)*

தாழாத், தளராத், தலைநடுங்காத், தண்டூன்றா

*முதற்சீர், இரண்டாம் சீர், மூன்று நான்காம் சீர்களில் நிறுத்தம் அமைந்த பாடல்களும் உள்ளன. (எகா)*

உண்ணான், ஒளி நிறான், ஓங்குபுகழ் செய்யான் *(பா.9)*

உடாஅதும், உண்ணாதும் தம்உடம்பு செற்றும் *(பா.10)*

சொல் தளர்ந்து, கோல் ஊன்றிச் சோர்ந்த நடையினராய்

பரவா, வெளிப்படா, பல்லோர்கண் தங்கா *(பா.288)*

சிறுகா, பெருகா, முறைபிறழ்ந்து வாரா *(பா.110)*

*முதல் மூன்று சீர்களில் நிறுத்தம் அமைந்த பாடல்களும் உள்ளன.*

சென்றே எறிப ஒருகால் *(பா.24)*

துன்பம் பலநாள் உழந்தும் *(பா.54)*

துன்பமே மீதுராக் கண்டும் *(பா.60)*

மதித்திறப் பாரும் இறக்க *(பா.61)*

இளையான் அடக்கம் அடக்கம் *(பா.65)*

யாஅர் உலகத்தோர் சொல்லிலார் *(பா.119)*

நல்லவை செய்யின் இயல்பாகும் *(பா.144)*

*மேலும் காண்க பாடல் எண்.* 170, 179, 188, 216, 219, 245, 248, 251, 298, 338, 351, 363, 364, 365, 366.

*முதற்சீர், இரண்டு மூன்று சீர், நான்காம் சீரில் நிறுத்தம் அமைந்த பாடல்களும் உள்ளன. (எகா)*

அவமதிப்பும், ஆன்ற மதிப்பும் இரண்டும் *(பா.163)*

கற்றனவும் கண்ணகன்ற சாயலும், இற்பிறப்பும் *(பா.340)*

11

நான்கு சீர்களில் சீர் தோறும் நிறுத்தம் அமைந்த பாடல் களும் உள்ளன. *(எ.கா)*

உருவும் இளமையும் ஒண்பொருளும் உட்கும் *(பா.102)*

முதற்சீர் 2,3,4 சீர்களுக்குப் பிறகு நிறுத்தம் அமைந்த பாடல்களும் உள.

கட்கினியாள், காதலன் காதல் வகை புனைவாள் *(பா.384)*

நான்கு சீர்களுக்குப் பிறகு நிறுத்தம் அமைந்த பாடல்களும் உள்ளன.

வளம்பட வேண்டாதார் யார்யாரும் இல்லை *(பா.103)*

உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா *(பா.104)*

தம்மை இகழ்வாரைத் தாமவரின் முன்னிகழ்க *(பா.117)*

### அளபெடை நயம்

''கெடாத நல்லறம்'' என்பதற்கு அழியாத நல்லறம் என்பது பொருள். அறத்தின் அழியாமையை வற்புறுத்த ''கெடா அத'' என்று அளபெடை அமைத்திருப்பது மிகவும் பொருத்த மானது. இரண்டாம் அடியில் ''கொடாஅத'' என்று அளபெடை அமைப்பது கருத்துப் புலப்பாட்டுக்குத் தேவையாக இருப்ப தால் அதற்கேற்ப முதலடியில் ''உடாதும்'' என்பது உடாஅதும் என்றும், தனிச் சொல்லில் கொடாஅது என்றும் அளபெடைச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இங்கு உடுக்காதும் என்ற இயல்பான சொல்லைக் கையாண்டிருந்தாலும் பாடலின் தளை மாறுபடாது. இவ்வாறே தனிச் சொல்லாக ''கொடுக்காது'' என்ற சொல்லைப் பயன்படுத்தியிருக்கலாம். பாடலின் அமைப்பழகு கருதி அளபெடைச் சொற்கள் பிற இடங்களில் ஆட்சி பெற்றுள்ளன.

''நற்றாள் தொழாஅர் எனின்'' என்ற பாடலில் படித்தவர் பணிய மாட்டார். கருவத்தால் நிமிர்ந்திருப்பார் என்பதைப் புலப் படுத்த தொழார் என்ற சொல் ''தொழாஅர்'' என அளபெடை ஆட்சி செய்யப்பட்டிருப்பதைக் கருதலாம். இங்கு வணங்கார்,

பரவார், துதியார் என்ற இயல்பான சொற்களைக் கையாண் டிருந்தாலும் இலக்கணப் பிழை வராது என்று நோக்குப் பற்றிய கருத்தில் தமிழண்ணல் விளக்கியிருப்பது இணைத்துக் கருதத் தக்கது. தாங்க முடியாத துன்பங்களை ''நீக்கி நிறுத்தும் உர வோரே'' *(பா.57)* என்றிருந்தாலும் பாடலின் தளை மாறு படாது. எனினும், துன்பங்களை நீக்கி நிறுத்துவது வலிமை யுடையவர்க்கே இயலும் என்பதால் நிறூஉம் என்ற அள பெடைச் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஊக்கித்தாம் கொண்ட விரதங்கள் உள்உடைய
தாக்கருந் துன்பங்கள் தாம்தலை வந்தக்கால்
நீக்கி, நிறூஉம் உரவோரே நல்லொழுக்கம்
காக்கும் திருவத்தவர் *(பா. 57)*

தம்மை இகழ்ந்து விட்டார்களே என்று வருந்தாமல், இகழ்ந்தவர்கள் மறு பிறப்பில் நரகத்தில் வீழ்வார்கள் என்று அவர்களுக்காக இரங்குவதும் துறவியர் இயல்பு என்ற கருத்தை உணர்த்தும் பாடலில் *(58)* பரிவதும் என்ற இயல்பான சொல்லை அமைத்திருந்தாலும் பாடற் கருத்து குறைவுபடாது. ஆனால், துறவியர் மற்றவர்க்காக இரங்குவதை மிகுதிப்படுத்த பரிவதூஉம் என்ற அளபெடைச் சொல் கையாளப்பட்டுள்ளது.

மழை பெய்தல் அருமையாகிய காலத்தும் ஊற்று நீர்க் குளம் ஊரைக் காப்பாற்றும். கொடுத்தலாகிய கடமை தளர்ந்த போதும் பெரியோர் பிறரை உபசரிப்பார். சிறியர் பொருள் பெருகி வரினும் பிறரை உபசரியார் என்ற கருத்தாழம் மிக்க பாடலில் சாஅ அயக் கண்ணும் *(பா.184)* என்ற அளபெடை வரி தளர்ச்சி மிகுதியைக் காட்டுவதற்காக இரண்டு மாத்திரை மிகுந்துள்ளது. இவ்வாறே சிறியோர் செல்வப் பெருக்கம் உணர்த்துவதற்காக சாஅ அயக் கண்ணும் என்பதும் இரண்டு மாத்திரை மிகுந்துள்ளது.

''கலாஅற்கிளி'' என மூன்றாம் அடியில் அளபெடை ஒரு மாத்திரையளவும் இல்லாஅஅர்க்கு என நான்காம் அடியில் இரண்டு மாத்திரையும் பாடற் பொருளுக்கேற்ப அளபெடை மிகுந்துள்ளது *(பா.283)*.

கலாஅல் கிளிகடியும் கானக நாட
இலாஅஅர்க்கு இல்லை தமர் *(பா.283)*

இவ்வாறு கருத்துப் புலப்பாட்டிற்காகவும் அமைப்பழகிற்காகவும் அளபெடைச் சொற்கள் நாலடியாரில் பயன்படுத்தப் பட்டுள்ளன.

விளிப் பயன்பாடு

எல்லா விளிகளும் கருத்துச் சிறப்புடையன அல்ல. ஆனால், கவிஞர்களின் ஆளுமைப் பண்பிற்கேற்ப விளிகளில் கூடக் கருத்தைப் புலப்படுத்த இயலும்.

செல்வம் நிலையாமை என்ற அதிகாரத்தில் ''உடாஅதும் உண்ணாதும்'' என்ற பாடலில் *(பா.10)* ''வான்தோய் மலைநாட'' என்ற விளி உள்ளது. ஒருவன் தன்னுடம்பைப் பேணி, நன்கு உண்டு, உடுத்து அழியாத நல்அறம் புரிவது செல்வம் பெற்றதன் பயன். தனக்கும் பிறர்க்கும் பயன்படாத செல்வம் பயனற்றது என்பதைத் தேனடைச் சான்று காட்டி விவரிக்கும் இப்பாடலில் ''ஆகாயத்தை அளாவிய மலைகளுள்ள அரசனே'' என்ற விளியில் ''உயர்ந்த செல்வம் பெற்றுள்ளாய்; ஆனால், உனக்கும் பிறர்க்கும் பயன்பட வாழவில்லை''என்ற குறிப்பு உள்ளது. உலக வழக்கில் ஒருவரை ''நீ ரொம்பப் படித்தவன்'' ஆனால் என்று கூறுவது போன்ற தன்மை இப்பாடலில் உள்ளது.

பொறையுடைமை அதிகாரத்தில் ''கோதையருவிக் குளிர்வரை நன்னாட'' *(பா.71)* என்ற விளி உள்ளது. மலை போன்ற அருவிகளாலே குளிர்ந்த மலைகளையுடைய நல்ல நாட்டை உடையவனே என்னும் நீண்ட விளி, பேதையின் சினப் படுத்தும் வார்த்தைகளால் சினம் கொள்ளாத குளிர்ச்சி மிக்க நல்ல பண்புடையவன் தலைவன் என்பதை உணர்த்துவதாக உள்ளது.

காதலன் சொல்லும் கடும் சொல் உவந்துரைக்கும்
ஏதிலார் இன்சொலின் தீதாமோ - போதெலாம்
மாதர்வண்டு ஆர்க்கும் மலிதடல் தண் சேர்ப்ப
ஆவ தறிவார்ப் பெறின் *(பா.73)*

'அயலாரின் இனிமையான சொல்லைவிட அன்பான வரின் கடுமையான சொல் தீமை தருமா என்ன?' என்று வினவும் இப்பாடலில் பாடற் கருத்திற்கேற்ப ''மாதர்வண்டு ஆர்க்கும் மலிகடல் தண்சேர்ப்ப'' என்ற விளி உள்ளது. காதல் வண்டுகள் இடைவிடாமல் ரீங்காரம் செய்வது துன்பம் தருவதுதான். ஆனால், தீமை தருவதல்ல என்ற பொருளைத் தரும் இவ்விளி பாடற் கருத்திற்குப் பொருத்தமாக உள்ளது எனலாம்.

ஒருவர் பெரியோர் நட்பைக் கொள்ளுவது தாம் செய்த பிழை பொறுப்பர் என்பதற்காக என்பதைச் சொல்லும் பாடலில் ஒல்லென் அருவி உயர்வரை நன்னாட *(பா.77)* என்ற விளி உள்ளது. ஒலித்துக் கொண்டு இறங்கும் அருவி, நீராடுவார் மாசுகளை நீக்குவது, பெரியோர் நட்பு, பிழை பொறுப்பது என்ற கருத்திற்கேற்ப இவ்விளி அமைக்கப்பட்டிருக்கிறது.

முன்னைத் தீவினையின் பயனே துன்பம் மிகுந்த மனத்தோடு எல்லோரும் காணப் பெரிய வீட்டு வாயில்களிலே நின்று பிச்சை கேட்டு உழல்வது என்ற கருத்தைச் சொல்லும் பாடலில் அடம்பப்பூ அன்னங்கிழிக்கும் அலைகடல் தண் சேர்ப்ப *(பா.107)* என்றவிளி உள்ளது. அடம்பக் கொடிப் பூக்களை அன்னம் கிழிப்பது, வறுமையுற்று இரங்குவார் உள்ளத்தைச் செல்வம் மிக்க இல்லத்தில் வாழ்வார் சிதைப்பது போன்றது என்ற கருத்தை விளக்கப் பொருத்தமானதாக அமைக்கப்பட்டுள்ளது.

குடிப் பிறப்பு அதிகாரத்தில் இன்சொல் வழங்குதல், யாசித்தவருக்குப் பொருள் தருதல், மனத் தூய்மை இவை நற்குடியிற் பிறந்தவர் பண்புகள் என்பதை விளக்கும் பாடலில்,

கனமணி முத்தோடிமைக்கும் முழங்குவரித் தண் சேர்ப்ப
*(பா.146)*

என்ற விளி உள்ளது. ஒளி மிகுந்த இரத்தினங்கள் முத்தோடு சேர்த்துப் பிரகாசிக்கும் கடற்கரையுடைய தலைவனே என்ற விளி பாடற் பொருளுக்கு இயைபுடையதாக அமைந்துள்ளது என்பது கருதத் தக்கது.

''அடுத்தடுத்து பல காய் நெருங்கிக் காய்த்தாலும் அதைப் பொறுக்காத கிளை இல்லை'' என்ற உவமை மூலம் பெரியோர் தம்மை எவ்வளவு பேர் சேர்ந்தாலும் தாங்க மாட்டோம் என்று சொல்ல மாட்டார் என்ற கருத்தை விளக்கும் பாடலில் பாடற் கருத்திற்கேற்ப அடுக்கன் மலைநாட *(பா.203)* என்ற விளி உள்ளது. அடுக்கடுக்கான மலைகளையுடைய என்ற விளி மலைகள் பலவற்றைத் தாங்கி நிற்கும் பூமியின் மாண்பினை உணர்த்துவதாக உள்ளது.

''ஒருவர் பொறையிருவர் நட்பு'' என்பதை விளக்கும் பாடலில் *(பா.223)* நிறக்கோங்கு உருவ வண்டார்க்கும் உயர்வரை நன்னாட என்ற விளி உள்ளது. ''நிறம் உள்ள கோங்க மலரில் அழகுள்ள வண்டுகள் ஆரவாரிக்கும் மலைநாட்டை உடையவனே'' என்பது பொருள். ஆர்ப்பரிப்புத் துன்பத்தைக் கோங்க மலர்கள் பொறுத்துக் கொள்வது போல என்ற கருத்தைத் தரும் விளி பாடற் கருத்திற்குப் பொருத்தமாக உள்ளது.

துன்பங்களைச் செய்தாலும் விடக் கூடாதவர்களைச் சேராமல் விட்டு விடுவது தகுந்தது அல்ல. கண்ணைக் குத்திற்று என்று கையை நீக்குபவர் யாரும் இல்லை என்ற உவமை மூலம் மேற்கூறிய கருத்தை விளக்கும் பாடலில் *(பா.226)* 'விண்குத்து நீள்வரை வெற்ப' என்ற வரி உள்ளது. விண்ணைக் குத்துகின்ற மூங்கிலையுடைய நீண்ட மலை என்பது மலையின் சகிப்புத் தன்மையை உணர்த்துவதாக அமைந்துள்ளது.

ஒற்றுமை இல்லாதார் நட்பு இன்னாது என்ற கருத்தை விளக்கும் பாடலில்,

முற்றற் சிறுமந்தி முற்பட்ட தந்தையை
நெற்றிக்கண் டன்ன விரலால் ஞெமிர்த்திட்டுக்
குற்றிப்பறிக்கும் மலைநாட *(பா.237)*

என நீண்ட விளி உள்ளது. கருத்தை விளக்கும் மிக நீண்ட விளியாகஇது சிறக்கிறது.

காந்தள் மலர்ந்தால்தான் வண்டுக் கூட்டங்கள் தேடிச் செல்லும். பொருள் இருப்பவர்களையே உறவினர் நாடிச் செல்வர்

என்ற கருத்தைச் சொல்லும் பாடலில் 'கொல்லைக் கலாஅற் கிளிகடியும் கானக நாட' என்ற விளி உள்ளது. கொல்லையில் தினைக் கதிர் இருந்தால்தான் கிளி நாடிச் செல்லும். அது போலப் பொருள் நலமுடைய மாந்தர் இருந்தால்தான் இரவலர் அவரைத் தேடிச் செல்வர் *(பா.283)*.

நிலையான மனமுடையவர்கள், நன்மைகள் சேர்ந்திருக் கும் யாரையும் நீங்குவதும் பின்சேர்வதும் செய்ய மாட்டார்கள் என்ற கருத்தை விளக்கும் பாடல், கூறும் கருத்திற்கேற்ப 'பராரைப் புன்னைப் படுகடற் தண்சேர்ப்ப' *(பா.246)* என்ற விளியுடன் சிறக்கிறது. பருத்த அரையையுடைய புன்னை மரங்கள் நிலையான மனம் உடையவர்களைச் சுட்டி நிற்கிறது. பூத்து நீங்கின கொம்புகளை வண்டுகள் நாடா. பொருள் பெற்று வாழாதவர்களுக்கு உறவினர் இல்லை என்ற கருத்தைச் சொல் லும் பாடல், 'நீர்த்தருவி தாழா உயர்சிறப்பின் தண்குன்ற நன்னாட' என்பது *(பா.290)* பாடற்பொருளுக்கேற்ற விளியாகச் சிறக் கிறது. அருவிகள் நீர் வெள்ளம் குறையாதிருப்பதே சிறப்பு. அவ்வாறே பொருட் செல்வம் குறையாதிருப்பதே சிறப்பு என்பது பொருள்.

பெரியோர் பெருஞ்சிறப்பைத் தாம் அடைந்தாலும் தமது நடக்கையில் ஒரு தன்மையாளர்களாக இருப்பர். கீழானவன் பெருஞ் சிறப்பைப் பெற்றால் தம் நடக்கையில் மாற்றம் அடை வான் என்பதை விளக்கும் பாடலில் 'பிறங்கருவி நன்னாட' என்ற விளி பாடற் கருத்திற்கேற்பப் பொருத்தமாக உள்ளது.

நண்பர் தம் நெஞ்சத் துன்பத்தைச் சொல்ல, அத்துன்பங் களைப் போக்காத மனமுடையவர்கள், வாழ்வதைக் காட்டிலும் மலையிலிருந்து குதித்து உயிரை விடுவது நல்லது என்ற கருத்தைச் சொல்லும் பாடலில் 'மணிவரன்றி வீழும் அருவி விறன்மலை நன்னாட' என்ற விளி உள்ளது. இரத்தினங்களை வாரிக் கொண்டு விழுகின்ற அருவிகளோடு கூடிய மேன்மை யான மலைகளையுடைய நல்ல நாடனே என்ற வருணனை யோடு கூடிய இவ்விளி உதவி செய்யும் மனத்துடன் வாழ்வதை உள்ளுறுத்தி நிற்கிறது.

### ஒலிக் குறிப்பிலும் கருத்துப் புலப்பாடு

அவரவர்க்கு விதிக்கப்பட்ட நாட்கள் எல்லை இகவா, கூற்றுவனைத் தப்பிப் பிழைத்தவர்கள் யாரும் இல்லை என நிலையாமையைச் சொல்லி,

''பெரும்பொருள் வைத்தீர்வழங்குமின்,நாளைத்
தழீஇம் தழீஇம் தண்ணம் படும். *(பா.6)*

என்கிறது நாலடியார். இரண்டு முறை அடுக்கப்பட்டுள்ள ஒலிக் குறிப்புச் சொல் கொடுக்க வேண்டும் என்பதை உணர்த்துவதாக உள்ளது.

உறவினர் கூவிஅழ, பிணங்கொண்டு சுடுகாட்டில் இருப்ப வரைக் கண்டும், மணம் செய்து மகிழலாம். இவ்வுலகில் சுகமுண்டு என்ற உணர்வுடன் இருப்பவர்களை எச்சரிக்கை செய்வது போல 'டொண் டொண் டொண்' என்று ஒலிக்கும் பிணப்பறை என்பது பாடல்,

.........மணங்கொண்டீண்
டுண்டுண்டுண் டென்னும் உணர்வினாற் சாற்றுமே
டொண்டொண்டொ னென்னும் பறை. *(பா.25)*

சுகமுண்டு என்பதை மூன்று முறை அடுக்கிச் சொல்லி, டொண், டொண், டொண் என்ற ஒலியடுக்கால் வாழ்வதில் சுகமில்லை என்பதை உணர்த்துகிறது இப்பாடல்.

### வினா அடுக்கிக் கூறல்

உயிர் போன பிறகு உடம்பை என்ன செய்தால் என்ன? என்ற கருத்தை விளக்கும் பாடலில்,

நார்த்தொடுத் தீர்க்கிலென்? நன்றாய்த் தடக்கிலென்
பார்த்துழிப் பெய்யிலென்? பல்லோர் பழிக்கிலென்

என்ற வினாக்களை அடுக்கி, அதனால் உயர்வோ, இழிவோ இல்லை என்பதை விவரிக்கிறது ஒரு பாடல்.

யாஅர் உலகத்தோர் சொல்லில்லார்? தேருங்கால்
யாஅர் உபாயத்தின் வாழாதார் - யாஅர்

இடையாக இன்னாததெய்தாதார்? யாஅர்
கடை போகச் செல்வம் உய்த்தார்?

யாருமில்லை என்பதை வலியுறுத்துவதற்காக யார் என்ற வினா 'யாஅர்' என்று அளபெடை ஆட்சி செய்யப்பட்டிருப்பது சிறப்பாகும்.

**அணிநலம் அமையப் பாடுவது**

சொல் திரும்பத் திரும்ப வரும்படி பாடுவதில் எந்நிலைக் கவிஞர்க்கும் ஈடுபாடு மிகுதி. அற இலக்கியக் கவிஞர்களும் இதற்கு ஆட்பட்டவர்களே. வள்ளுவர் இவ்வணி அமையப் பாடல்கள் பாடியுள்ளார். நாலடியார், நான்மணிக் கடிகை, பழமொழி, சிறுபஞ்சமூலம், ஏலாதி முதலிய நூல்களில் இவ்வணி அமைந்த பாடல்கள் உள்ளன.

ஓரடியில் சொற்கள் திரும்பத் திரும்ப வருவது, அடிதோறும் ஒரே சொல் திரும்பத் திரும்ப வருவது என்ற நிலையில் பின்வருதல் காணப்படுகிறது.

**ஓரடியில் சொற்கள் திரும்ப வருவது**

நின்றன நின்றன .........
ஒன்றின ஒன்றின .........
சென்றன சென்றன .........
வந்தது வந்தது ......... *(பா)*

**அடிதோறும் ஒரே சொல் வருவது**

புக்க விடத்தச்சம் போதரும் போதச்சம்
துய்க்கு மிடத்தச்சம் தோன்றாமற் காப்பச்சம் *(பா.83)*

கல்லாமை அச்சம் கயவர் தொழிலச்சம்
சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்சம் *(பா.145)*

ஈட்டலுந் துன்பம்மற் றீட்டிய வொண்பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுந்துன்பம் - காத்தல்
குறைபடில் துன்பம் கெடில் துன்பம் *(பா.280)*

பிறந்த குலமாயும் பேராண்மை மாயும்
சிறந்ததங் கல்வியும் மாயும் *(காண்க பாடல் பா.15,39)*

## தொடைக் கட்டு

*அடித் தொடை அமைந்து காணப்படுவதே தொடைக் கட்டு எனப்படுகிறது. நான்கடி உடைய பாடல்களில் பொதுவாக இரண்டு தொடைக் கட்டு மிகுதியாகக் காணப்படும். நாலடி யாரில் பல பாடல்களில் இவ்வகை அமைப்பு உள்ளது.*★ *(எ.கா)*

கட்கினியாள் காதலன் காதல்வகை புனைவாள்
உட்குடையாள் ஊர்நாண் இயல்பினாள் - உட்கி
இடனறிந் தூடி இனிதின் உணரும்
மடமொழி மாதராள் பெண் *(பா.384)*

*முதல் மூன்றடிகளும் ஒரே எதுகை அமைந்த பாடல்களும் உள்ளன.*

அகத்தாரே .........
பகத்தாம் .........
மிகத்தாம் ......... *(பா.31)*

*பாடல்கள்* 4, 31, 73, 83, 88, 103, 156, 181, 197, 222, 256, 275, 311, 368, 382, 388.

---

★ *பாடல்கள்* 1, 3, 5, 7, 8, 9, 10, 13, 14, 15, 17, 18, 20, 21, 22, 23, 24, 25, 27, 28, 30, 32, 33, 36, 38, 40, 43, 46, 48, 49, 50, 52, 53, 56, 58, 59, 60, 61, 62, 63, 64, 66, 67, 68, 71, 74, 76, 77, 78, 79, 80, 81, 82, 84, 85, 86, 87, 89, 90, 91, 92, 94, 95, 97, 98, 99, 100, 101, 102, 106, 107, 111, 112, 113, 116, 118, 119, 121, 122, 123, 124, 125, 127, 128, 129, 130, 131, 138, 10, 142, 144, 149, 152, 159, 160, 161, 162, 165, 166, 167, 168, 169, 170, 171, 173, 174, 175, 183, 184, 186, 187, 190, 193, 194, 18, 202, 203, 204, 205, 209, 210, 211, 212, 214, 215, 216, 217, 218, 219, 223, 225, 226, 227, 228, 231, 232, 233, 234, 235, 238, 247, 249, 250, 252, 253, 254, 255, 257, 259, 260, 264, 265, 266, 268, 269, 270, 271, 273, 276, 277, 279, 283, 284, 285, 286, 287, 289, 290, 291, 292, 294, 295, 296, 297, 298, 299, 300, 301, 303, 305, 306, 307, 310, 312, 313, 314, 315, 316, 317, 318, 319, 320, 321, 323, 324, 325, 327, 329, 330, 334, 335, 336, 337, 338, 339, 340, 341, 342, 343, 344, 346, 349, 352, 353, 354, 355, 356, 358, 359, 360, 361, 362, 366, 369, 370, 371, 372, 373, 374, 375, 376, 378, 379, 380, 383, 384, 385, 386, 387, 389, 390, 391, 392, 394, 396, 398, 399, 400

*பின் மூன்றடிகளும் ஒரே எதுகை அமைந்த பாடல்களும் உள்ளன.*

தாழ்கொண்ட
வாழ்தலும்
தாழ்வின்றி *(பா.192)*

*நான்கடியும் ஒரே எதுகை அமைந்த பாடல்களும் உள்ளன.*

துகள்தீர் .........
பகடு .........
அகடுற .........
சகடக்கால் ......... *(பா.2)*

*ஏனைய பாடல்கள்* 16, 25, 35, 39, 44, 45, 57, 75, 93, 96, 104, 105, 109, 110, 114, 115, 141, 150, 154, 155, 164, 172, 191, 200, 208, 220, 221, 224, 229, 236, 237, 240, 246, 251, 258, 261, 263, 267, 281, 288, 302, 304, 322, 331, 347, 350, 351, 377, 381, 393, 397

*நான்கடியிலும் எதுகை அமையாத செந்தொடைப் பாடல்களும் உள்ளன.*

விளக்கு .........
தவத்தின் முன் .........
தேய்விடத்து .........
தீர்விடத்து ......... *(பா.51)*

*பிற பாடல்கள்* 6,42.

*இறுதி இரண்டு அடியில் மட்டும் எதுகை அமைந்த பாடல்களும் உள்ளன.*

வாழ்தலின் ஊதியம் .........
ஆழ்கலத் தன்ன கலி *(பா.12)*

*பிற பாடல்கள்* 11, 47, 55, 65, 107, 117, 120, 134, 143, 148, 158, 176, 177, 178, 182, 189, 196, 230, 239, 242, 243, 244, 245, 278, 280, 293, 308, 345, 363, 364, 365.

முன் இரண்டு அடியில் மட்டும் எதுகை அமைந்த பாடல்களும் உள்ளன.

சென்றே எறிப .........
நின்றே எறிப *(பா.24)*

பிற பாடல்கள் 26, 37, 69, 70, 72, 126, 133, 135, 136, 145, 146, 147, 151, 157, 195, 262, 282, 328, 367, 395.

**உவமை அணி**

பொருளின் தன்மையை விளக்குவதும், அதனைச் சிறப்பிப்பதும் சிறந்த உவமை ஆகும். நாலடியாரின் அறத்துப் பாலில் 24 உவமைகளும் பொருட்பாலில் 96 உவமைகளும் உள்ளன.★ இவற்றுள் நூற்றுக்கும் மேற்பட்ட உவமைகள் வினை அடிப்படையில் அமைந்தவை.

பிறர்மனை நயத்தல் அருவருப்பானது. அத்தோடு மிகவும் ஆபத்தானது என்பதை விளக்க நாலடியார் 'பாம்பின் தலையை நக்கினாற் போல' என்ற உவமையைப் பயன்படுத்தியுள்ளது. தனித் தன்மை வாய்ந்த இவ்வுவமை தீய செயலின் விளைவைச் சுட்டிக் காட்டி எச்சரிப்பதாக அமைந்துள்ளது. உடம்பாடில்லாத வருடன் வாழ்வது பாம்புடன் உடனுறைவது போன்றது என்ற குறள் உவமை இணைத்து எண்ணத் தக்கது.

நட்பைக் குறித்து விளக்கும் பாடல்களில் ஒரே பொருளை வைத்து இரு வேறு நிலைகளை விளக்கியிருப்பது நாலடியார் உவமைகளின் தனித் தன்மைகளுள் ஒன்று எனலாம்.

உறங்கல், விழித்தல், வாழ்தல், சாதல், கனி, கருக்காய், உடம்பு, உயிர், உப்பு அமைதல், உப்பு மிகல் என இணைத்து உவமை கூறும் நிலை திருக்குறளிலும் அமைந்துள்ளது.

★ பாடல்களின் பட்டியல் 2, 8, 10, 17, 21, 28, 29, 30, 34, 38, 45, 51, 66, 68, 70, 87, 89, 96, 99, 101, 115, 116, 123, 125, 133, 135, 138, 139, 141, 148, 149, 151, 152, 156, 164, 166, 171, 176, 177, 180, 184, 185, 186, 189, 191, 192, 193, 197, 198, 199, 200, 201, 202, 203, 211, 213, 215, 216, 218, 221, 225, 226, 231, 232, 234, 236, 237, 239, 240, 241, 244, 245, 250, 254, 256, 257, 258, 259, 262, 263, 66, 269, 274, 279, 283, 284, 290, 298, 300, 315, 317, 321, 322, 331, 332, 333, 336, 337, 341, 345, 347, 351, 352, 354, 355, 359, 360, 367, 368, 370, 371, 374, 375, 376, 377, 378, 381, 386, 388, 390

பெரியோர் நட்பு பிறைநிலா போல நாளும் வளரும். சிறியோர் தொடர்பு மதியம் போல நாளும் தேயும் *(பா.125)*. கற்றறிந்தார் நட்பு நுனியிலிருந்து கரும்பு தின்பது போன்றது. பண்பிலார் தொடர்பு வேரிலிருந்து கரும்பு தின்பது போன்றது *(பா.138)*. சிறியவர் கேண்மை முற்பகல் நிழல் போலக் குறைந்து கொண்டே போகும். புகழாளர் தொடர்பு பிற்பகல் நிழல் போல வளர்ந்து கொண்டே செல்லும் *(பா.166)*. கற்றறிந் தார் கேண்மை குருத்திலிருந்து கரும்பு தின்பது போன்றது. கல்வியறிவில்லாதார் தொடர்பு அடியிலிருந்து கரும்பு தின்பது போன்றது *(பா.211)*. இவ்வாறு இரு வகை நட்பு நிலைகளுக்கு ஒரு பொருளை வைத்து உவமையாட்சி செய்துள்ளது நாலடி யார். பெரியோர், கற்றறிந்தார், நட்பைக் குறிக்க மூன்று பாடல் களில் கேண்மை என்ற சொல்லையும் சிறியோர், கல்லாதார் தொடர்பைக் குறிக்க தொடர்பு என்ற சொல்லையும் தேர்ந்துள்ளது எண்ணத் தக்கது.

தொடர்புடைய பொருள்களை வைத்து உவமை கூறு வதும் இந்நூல் இயல்பாகும்.

*(எடு)* அறச் செயல் கரும்புச் சாறு போலப் பயன்படும். அதைச் செய்யப் பயன்பட்ட உடம்பு கரும்புச் சக்கை போல போகும் *(பா.34) (மேலும் காண்க 51, 96, 279)*.

பலர் விரும்ப வாழ்பவர் ஊர்நடுத் திண்ணை சுற்றிய பனை மரம் போன்றவர். இரவலர்க்குக் கொடுக்காத மனிதர் சுடுகாட்டுஆண்பனை போன்றவர் *(பா.96)*.

ஒரு பாடலில் இரண்டு மூன்று உவமைகளைக் கையாண் டிருப்பதும் குறிக்கத் தக்கது.

நாய்க்கால் சிறுவிரல்போல் நன்கணிய ராயினும்
ஈக்கால் துணையும் உதவாதார் நட்பென்னாம்
சேய்த்தானும் சென்று கொளல் வேண்டும் - செய்விளைக்கும்
வாய்க்கால் அனையார் தொடர்பு *(பா.218)*

*(மேலும் காண்க பா.216)*.

முடிவுரை

அற இலக்கியப் பாடல்களைச் சிறந்த கவிதைகள் (Potery) என்று மதிப்பிட இயலாது. ஆனால், தேர்ந்தெண்ணிச் செய்யப்பட்ட செய்நேர்த்தி மிக்க செய்யுட்கள் அவை (Verse) என்ற கருத்து ஏற்கத் தகுந்ததாகும். கட்டுரையின் தொடக்கத்தில் குறிப்பிட்டது போல சொற்களைத் தேர்வதில், தொடரமைப் பில், நிறுத்தங்களைச் செய்வதில், ஒலிக் குறிப்பு, அளபெடை விளிகளைப் பயன்படுத்துவதில், தொடையாக்கத்தில், உவமை அணியை நயம்படக் கையாண்டிருப்பதில், நாலடியார்ப் பாடல்கள் சிறந்த செய்யுட்களாக உள்ளன. கடிகை, திரிகடுகப் பாடல்களும் இந்நோக்கில் கருதத் தக்கன.

# நான்மணிக்கடிகை அமைப்பழகும் அறக் கருத்துக்களும்

பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் அறநூல்கள் பதினொன்று. அவற்றுள் வைணவ சமயத்தைச் சார்ந்த விளம்பி நாகனாரால் எழுதப்பட்ட இனிய எளிய அறநூல் நான்மணிக் கடிகை. மர்ரே பதிப்பில் இரண்டு கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள் உட்பட 103 பாடல்கள் நான்மணிக்கடிகையில் உள்ளன. கழகப் பதிப்பின் வண்ணம் 106 பாடல்கள் உள்ளன. கழகப் பதிப்பில் வைததனால் *(103)* ஒருவன் *(104)* இன்சொலால் *(106)* எனத் தொடங்கும் பாடல்கள் கூடுதலாக உள்ளன. இந்நூல் கவிதை நயம்பட அறக் கருத்துகளை எளிமைப்படுத்திக் கூறியுள்ளது. பாடல்தோறும் இரத்தினம் போன்ற நான்கு கருத்துகள் உள்ளதால் நான்மணிக்கடிகை எனப் பெயர் பெற்றது என்பர். சிற்றிலக்கியங்கள் போல சொல்லழகு அமையப் பாடப் பெற்ற நூல். வெண்பா யாப்பில் இவ்வளவு ஓட்டமாகப் பாட முடியும் என்று மெய்ப்பிக்கும் நூல். அடிதோறும் முதற்சீர் அல்லது இரண்டாம் சீர் அல்லது மூன்றாம் சீரில் ஒரே சொல் திரும்பத் திரும்ப வரும்படி பாடப்பட்ட சிறப்பு இந்நூலுக்கு மட்டுமே உரியது. பல்வகை அறங்களை இந்நூல் கூறியுள்ளது. கல்வி, குலப் பிறப்பு, மக்கட் பேறு, சுற்றம் தழுவுதல், பெண்கள் நிலை முதலியவை குறித்த நல்லறங்கள் இந்நூலில் பேசப் பட்டுள்ளன.

ஒரு முறை படித்தவுடனே உள்ளத்தில் பதியும் கவிதை நயம் அமைந்த தொடர்கள் பல இந்நூற் பாடல்களில் உள்ளன. சில *(எ.கா)*

எல்லாம் பொருளில் பிறந்துவிடும்
திரு ஒக்கும் தீதுஇல் ஒழுக்கம்
தனக்கு அணி தான் செல் உலகத்து அறம்
வெல்வது வேண்டின் வெகுளி விடல்
மனைக்கு ஆக்கம் மாண்ட மகளிர்
புகழ் செய்யும் பொய்யா விளக்கம்
இன்மையின் இன்னாதது இல்லை
ஈன்றாளின் என்ன கடவுளும் இல்
ஈத்துண்பான் என்பான் இசைநடுவான்
வைதாரின் நல்லர் பொறுப்பர்
மகன் உரைக்கும் தந்தை நலத்தை
நா அன்றோ நட்பு அறுக்கும்
யார் மாட்டும் கொள்ளாமை வேண்டும்பகை
ஆசாரம் என்பது கல்வி

நான்மணிக்கடிகை ஆசிரியர் வைணவரே என்பதற்குக் கூடுதல் சான்றுகள் காட்டுவதும் அந்நூல் கூறும் நல்லறங்களைத் தொகுத்துக் காண்பதும் அமைப்பழகை எடுத்துக் காட்டுவதும் ஒரு சில பாடல்களில் நான்கு கருத்துகளுக்குப் பதில் ஓரிரு கருத்துகள் இடம் பெற்றிருப்பதை விவரிப்பதும் இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

**நூலாசிரியர் வைணவரே**

நூலின் கடவுள் வாழ்த்துப் பாடல் இரண்டும் திருமால் பற்றியனவாக உள்ளன. மதி மாயவன் முகத்தை ஒக்கும். ஞாயிறு அவன் கைச் சக்கரத்தை ஒக்கும். தாமரை மலர் அவன் கண்களை ஒக்கும். காயா மலர் அவன் மேனி நிறமொக்கும் என முதல் பாடல் அவன் உருவத் தோற்றத்தை விவரிக்கிறது.

உலகத்தை வயிற்றில் வைத்தான், திருவடிகளால் மூன்று முறை தாவி உலகை அளந்தான், இந்திரனின் கல் மழையால் பசுக்கள் நடுங்கிய போது கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தான், பாணாசுரனின் அரிய நெருப்பு மதிலை அழித்தான் எனத் திருமாலின் ஆற்றலை இரண்டாம் பாடல் எடுத்துரைக்கிறது.

''எள்ளற்க என்றும் எளியாரென்று'' என நூல் தொடங்குகிறது. திருமால் வாமன அவதாரம் எடுத்தபோது மிகவும் குள்ளமாக எல்லாரும் கண்டு எள்ளும்படி தோன்றினான். ஆனால், அவன் செயல் அனைவரும் உள்ளும்படி அமைந்தது.

''சிறியன் என்று இளஞ்சிங்கத்தை இகழேல் கண்டாய்.''

என்பது பெரியாழ்வார் வாக்கு.

இரண்டாம் அடி ''கொள்ளற்க கொள்ளார் கை மேற்பட'' என்கிறது. தகாதவர் கொடுக்க வாங்காதே என்பது பொருள். இறைவன் ''கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றெல்லாம் தரும்'' என்று அவன் புகழ் பாடும் நம்மாழ்வார் ஏனையோரிடம் பொருள் பெறுவது குறித்து ''என்னாவது எத்தனை நாளைக்குப் போதும் புலவீர்காள் மன்னா மனிசரைப் பாடிப் படைக்கும் பெரும் பொருள்'' என்று ஆற்றுப்படுத்தியுள்ளார். எனவே, முதற் பாடலிலேயே வைணவ அடியார் கூறும் கருத்து வெளிப் படுத்தப்பட்டுள்ளது எனலாம்.

23ஆம் பாடலில் ''குழவி அலைப்பினும் அன்னே என் றோடும்'' என்ற அடி, தாய் குழந்தையை அடித்தாலும், குழந்தை அம்மா என்றே அலறும் *(என்கிறது)*. இக்கருத்து ''அரிசினத்தால் ஈன்ற தாய் அகற்றிடினும் மற்றவள் தன் அருள் நினைந்தே அழுங்குழவி அதுவே போன்றிருந்தேனே'' என்ற குலசேகராழ் வார் வாக்கை நினைவுபடுத்துவதாக உள்ளது.

26ஆம் பாடலில் ''கோல்நோக்கி வாழும் குடியெல்லாம்'' என்ற அடி உள்ளது. குறள் வழி அமைந்த இத்தொடர் ''தார் வேந்தன் கோல்நோக்கி வாழும் குடிபோன்றிருந்தேனே'' என்ற குலசேக ராழ்வார் பாடல் அடியை நினைவுபடுத்துவதாக உள்ளது.

50ஆம் பாடலில் ''ஒருவனை உள்ளற் பொருளது உறுதிச் சொல்; உள் அறிந்து சேர்தற் பொருளது அறநெறி'' என்ற அடிகள் உள்ளன. ஒருவன் ஏற்றுக் கொள்ளுதற்குரியது பெரி யோர் கூறும் உறுதிச் சொல். உண்மையறிந்து தெளிந்து கடைப் பிடித்தற்குரியது அறவழி என்பது பொருள்.

அறிந்தறிந்து தேறித்தேறி யான் எனதாவியுள்ளே
நிறைந்த ஞான மூர்த்தியாயைநின்மலமாக வைத்துப்

பிறந்தும் செத்தும் நின்றிடறும் பேதைமை தீர்ந்தொழிந்தேனே

என்பது நம்மாழ்வார் திருவாய்மொழி. இறைவனை நன்றாக அறிந்து மிக்க தெளிவுடையவனாகி அறிவே உருவான இறைவனை அனுபவித்து பிறப்பதும் இறப்பதும் ஆகிய இப்பிறவிக் கடலைத் தவிர்த்துக் கொள்ளப் பெற்றேன் என்பது பாடற் பொருள்.

48ஆம் பாடலில் ''வரைந்தார்க்கு அரிய வகுத்து ஊண் இறந்தார்க்கொன்று இல் என்றால் யார்க்கும் அரிது'' என்ற அடிகள் உள்ளன. உணவைத் தமக்கென்றே அளவு செய்து வாழ்பவர்களுக்குப் பிறருக்கும் பகுத்தளித்து உண்ணுதல் அரிதாகும். ஆனால், ஈர நெஞ்சம் உள்ளவர் எவர்க்கும் தம்பால் வந்து இரந்து கேட்டவர்க்கு ஒரு பொருள் இல்லை என்று மறுத்துக் கூறுதல் அரிதாகும் என்பது பொருள். பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் தலையாய அறம் என்றும், தென்புலத்தார் முதலிய ஐம்புலத்தாரையும் ஓம்ப வேண்டும் என்றும் திருக்குறள் கூறும். தம் வயிற்றையே ஓம்பி வாழ்பவர் குறித்து, ''பண்டிப் பெரும்பதியை ஆக்கிப் பழிபாவம் கொண்டிங்கு வாழ்வார்'' என்கிறார் பூதத்தாழ்வார். ''வயிற்றைப் பெருநரகமாக்கி ஈட்டும் பொருள் எல்லாம்தன் வயிற்றுக்கே போதாது என்று கருதிச் சொத்துகளைச் சேர்த்துக் குவிப்பது பழி பாவத்துக்குக் காரணமாகும் என்பது பொருள்'' பழியஞ்சிப் பாத்தூண் உடைத் தாயின்'' என்று குறள் கூறுவதும் இணைத்துக் கருதுவதற்குரியது.

92ஆம் பாடலில் ''குலந்தீது கொள்கை அழிந்தக்கடை'' என்ற அடி உள்ளது. கொள்கை *(குறிக்கோள்)* இல்லாமல் வாழ்வது தீது என்பது பொருள். ''குறிக்கோள் இலாது கெட்டேன்'' என்பர் நாவரசரும். ''கொன்றேன் பல் உயிரைக் குறிக்கோள் ஒன்றில்லாமையால்'' என்று கூறும் பரகாலர், ''சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து, சுரிகுழல் மடந்தையர் திறத்துக் காதலே மிகுந்து கண்டவா திரி தந்ததொண்டனேன்'' என்று விரித்துரைத்துள்ளார்.

''தொண்டுக்கே கோலம் பூண்டேன்'' என்று குறிக்கோளை எடுத்தியம்பியுள்ளார் தொண்டரடிப் பொடியாழ்வார்.

கழகப் பதிப்பில் 104ஆம் பாடலாக இடம் பெற்றுள்ள ''ஒருவன் அறிவானும்'' எனத் தொடங்கும் பாடலில்,

குணன் அடங்கக் குற்றம் உளானும்ஒருவன்
கணன் அடங்கக் கற்றானும் இல்

என்ற அடிகள் உள்ளன. குணமே இல்லாத குற்றமுடையவர் யாரும் இல்லை. அறியாமை சிறிதும் இல்லாமல் முழுதும் அறிந்தவரும் இல்லை என்பது பொருள்.

இராமாயணத்தில் வெற்றிச் செய்தியைப் பிராட்டியிடம் தெரிவிக்கும் அனுமன், திங்கள் பலவாகத் தொல்லை தந்த அரக்கிகளை ஒரு கை பார்க்க வேண்டும் என்று ஆவேசமாகப் பேசும் போது, உலகில் குற்றம் செய்யாதவர் எவர் என்ற தொடங்கி மறுமொழி கூறுகிறாள் சீதை.

106ஆம் பாடலில் ''மென்சொலின் நாவினால் அருள் மனம் அம் மனத்தான் வீவிலா வீடாய் விடும்'' என்ற அடிகள் உள்ளன. நயமான சொற்களால் அருள் நெஞ்சம் உண்டாகும். அவ்வருள் நெஞ்சத்தால் வீடுபேறு உண்டாகும் என்பது பொருள்.

நாவினால் நவிற்று இன்பம் எய்தினேன்
மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையே

என்று மதுர கவியாழ்வார் வாக்கு இணைத்து எண்ணத் தக்கது.

திருமகள் சேர்ந்திருந்தால் செல்வம் உண்டாகும் என்பதை, ''திருக்குழாம் ஒண் செய்யாள் பார்த்துறின் உண்டாகும்'' என்கிறது 64ஆம் பாடல். 40, 39, 29ஆம் பாடல்களிலும் திருமகள் குறித்த செய்திகள் உள்ளன.

இக்கருத்துகளை எல்லாம் எண்ணிப் பார்க்கும் போது நூலாசிரியர் வைணவர் என்ற கருத்து உறுதியாகிறது.

### குலம் குடி குறித்த கருத்துகள்

குலப் பெருமை, குடிச் சிறப்பு குறித்த கருத்துகளில் உடன்பாடு உடையவர் கடிகையாசிரியர். மன்னர் விழையும்

குடி உள *(51)* என்று குறிப்பிட்டுள்ளார். தகாதவர் நட்பு குலஞ் சிதைக்கும் *(பா.21)* குலத்துயர்வும் குடியொழுக்கமும் கல்லாமைக் கண் கெடும் *(பா.80)* கொள்கை அழிந்தவிடத்துக் குலம் தீது *(பா.92)*.

கீழ்மக்கள் நெல்லரிசிச் சோற்றால் இன்புறுவர், மேன் மக்கள் தங்கள் தகுதிக்கேற்ற மதிப்புச் செயல்களால் இன்புறுவர் *(பா.65)*. கீழ்மக்கள் வாயில் இரப்புச் சொல் தோன்றும் *(பா.95)*. தளையிலிட்டுத் தண்டித்தாலும் கீழ்மக்கள் தம் இயல்பைக் காட்டி விடுவர் *(பா.97)*. அந்தணரின் நல்ல பிறப்பில்லை*(பா.32)*. நன்றூக்கல் அந்தணர் உள்ளம் *(பா.87)*. ஏலாதான் பார்ப்பான் *(பா.52)* என அந்தணர் குறித்தும் கொண்டாளும் நாட்டான் வீறெய்துவர் மன்னவர் *(பா.83)*. முறையொடு வென்றி அறிப அரசர்கள் என்று அரசர் குறித்தும், எருதுடையான் வேளாளன் *(பா.82)* என வேளாளர் குறித்தும் குறிப்பிட்டுள்ளார்.

### மக்கட் பேறு குறித்த கருத்துகள்

பெற்றோர்கட்கு மக்களைப் போல ஒளியுள்ள பொருள் கள் வேறில்லை *(பா.54)*. நன்மக்கட் பேறு பழியின்மையைத் தரும் *(பா.61)*. தந்தையின் நன்மையைப் புதல்வன் தன் நல்லியல்பால் பிறர்க்கறிவிப்பான் *(பா.68)* என மக்கட்பேறு குறித்துக் கூறியுள்ளது கடிகை. ஆண் மக்கட்பேறே சிறப்பிக்கப் பட்டுள்ளது.

### சுற்றம் தழுவுதல்

ஒருவனுக்குக் கேடு வரும்போது உதவி புரிபவர்கள் சுற்றத்தார்களே *(பா.3)*. சுற்றத்தாரை நீக்கி விடுதல் கேட்டினைப் பெருக்கும் *(பா.20)*. சுற்றத்தாரை நீக்கி விடுதல் கேட்டுக்கு முயலுதல் *(பா.84)* எனச் சுற்றம் தழுவி வாழ வேண்டும் என்பதை மூன்று பாடல்களில் குறிப்பிட்டுள்ளது இந்நூல்.

### கல்வி நலம் குறித்த கருத்துகள்

கல்வியறிவு பெறாத உடம்பு வெறும் புலாலுடம்பு. அது பிறவியெடுத்த தனக்கு பாழ் *(பா.20)*. கல்வியறிவு கண்ணொளி

உடையவராகச் செய்யும் *(பா.22)*. கற்பதனால் அறியாமை குறையும் *(பா.22)*. கல்வியைப் போல் துணையாவது பிறி தில்லை *(பா.29)*. ஐயம் திரிபறக் கற்றல் மதி நன்று *(பா.69)*. கல்வியறியுடையவன் தளர்ச்சி அடைந்தால் எப்படியும் உய்வான். கல்லாத பேதை தளர்ச்சி அடைந்தால் முயற்சி கெட்டு அழிவான் *(பா.72)*. ஒரு குடியில் கல்லாது மூத்தவனைப் பாராட்டாமல் கற்றவனைப் பாராட்டும் உலகு *(பா.63)*. கற்றவனை விரும்புபவர் கற்றவரே ஆவர் *(பா.73)*. கல்வி யறிவில்லாதவர்களுக்கு அவர் வாய்ச் சொற்களே கூற்றமாகும் *(பா.82)*. இளமைப் பருவத்தில் கல்லாமை குற்றம் *(பா.91)*. மக்களைக் கல்லாமல் வளர விடுதல் தீது *(பா.92)*. கல்வியின் பயன் நல்லொழுக்கம் *(பா.93)*. கற்றார் வாயிலிருந்து இரப்புச் சொற்கள் தோன்றா *(பா.95)*. கல்வி கேள்விகள் நிறைந்த அவையில் கல்லாதான் பெருமை இல்லாதவன் *(பா.96)*. தகை சான்ற புதல்வர்க்கு விளக்கம் கல்வி *(பா.101)*. இவ்வாறு கல்வி யின் சிறப்புகளையும் கற்றார் நலங்களையும் கல்லார் இழிவு களையும் பலவாறு விரித்துரைத்துள்ளது கடிகை.

**விலக்க வேண்டிய குணம் சினம்**

சினம் கொள்வாரிடத்தில் எல்லா நன்மைகளும் தோன்றா மல் கெடும் *(பா.8)*. வெகுளியை என்றும் விடல் வேண்டும் *(பா.11)*. பிறரை வெல்ல வேண்டுமானால் வெகுளியை விட வேண்டும் *(பா.15)*. கெடுப்பதனால் வெகுளியைக் கெடுக்க வேண்டும் *(பா.79)*. செல்லா இடத்துச் சினத்தைச் சுருக்க வேண் டும் *(பா.86)*. உறவினர் துணை இல்லாத இடத்தில் பிறரோடு சினத்தல் குற்றமாம் *(பா.91)*. இவ்வாறு சினத்தை விட வேண்டும் என்பதைத் திரும்பத் திரும்ப வலியுறுத்தியுள்ளது கடிகை.

**பாடலும் பண்ணும் குறித்த கருத்துகள்**

பண்ணமையாத யாழ் என்னும் இசைக் கருவியை விடப் பறை நன்று *(பா.13)*. யாழின் நரம்பு அதிர்ந்தால் பாடல் அதிரும் *(பா.19)*. பண்ணறியாதார் முன்பாடல் கெடும் *(பா.44)*. வேதங்களுக்கு நிகரான பாட்டுகளும் உள *(பா.51)*. பாட்டுகள்

உள்ளும் சிறப்பான பாட்டும் உள்ளன *(பா.62)*. நாடகம் பாடலால் மேன்மைச் சிறப்பு பெறும் *(பா.83)*. நட்புடையார் இடித்துரைக்கும் வன்சொல் நரம்புகளால் இசை கூட்டப்பட்ட யாழிசை ஒக்கும் *(பா.98)*. இக்கருத்துரைகள் மூலம் பண் ணமைந்த பாடல்களில் ஈடுபாடுடையவர் நூலாசிரியர் என்பது புலனாகிறது.

**பெண் அறங்கள்**

நான்மணிக்கடிகை குடும்பம் என்ற அடிப்படையிலேயே பெண்ணறம் பேசுகிறது.

மனைக்கு ஆக்கம் மாண்ட மகளிர் *(18)*

மனைக்குப் பாழ் வாணுதல் இன்மை *(20)*

மனைக்கு விளக்கம் மடவாள் *(101)*

என்று திரும்பத் திரும்ப பெண்ணை மனையோடு சேர்த்துப் பேசுகிறது.

வினைத்திறன் அறியா ஆடவரினும் கற்பமைந்த பெண்டிர் மேலானவர் *(பா.13)*. பெண்மை நலத்துக்கு அணி நாணம் *(பா.1)*. கொடுங்குழை நல்லாரை நல்லவர் நாண்உவப்பர் *(பா.53)*. நாணின் வரைநிற்பர் நற்பெண்டிர் *(பா.87)* ஒன்றுபட்டு வாழ்தல் பெண்டிர் தொழில் நலம் *(பா.84)*. கணவனைப் போற்றி அவன் வழி நின்றால் பெண்டிர் இனியர் ஆவார் *(பா.36)*. மனைவிபால் கண்ணோட்டம் பெருகினால் சுற்றத்தார் பெருகுவர் *(பா.90)*. கணவனை அல்லாத பிற தெய்வங்களைப் பெண்டிர் வணங்க மாட்டார்கள் *(பா.88)*. நல்ல பெண் கற்பொழுக்கத்தில் வழுவ மாட்டாள். நற்பண்பு இல்லாதவள் எத்தனை காவல் செயினும் பிறரோடு மருவுவாள் *(பா.89)*. நாலடி *(பா.362)*. இல்லறத்தில் இருந்து கொண்டு மறைவாய்க் கற்புக் கெடுபவள் கணவனுக்குக் கூற்றச்சி ஆவாள் *(பா.82)*. சுருங்கச் சொன்னால் கற்பு, நாணம், கணவனோடு ஒன்றுபட்டு வாழ்தல் ஆகிய பண்புகளையே இந்நூலும் ஏனைய அற நூல்களைப் போலப் பாராட்டிப் பேசியுள்ளது. நற்பண்பு

இல்லாத பெண் எவ்வளவு காவல் செய்யினும் பிறரோடு மருவுவாள் என்று நாலடியார் போலக் கடிகையும் வலியுறுத்து வது கருதத் தக்கது.

மனைத்தக்க மாண்புடையவள், தற்காத்துத் தற்கொண் டான் பேணி முதலிய குறள் விவரிப்புகளில் பெண்ணின் அறி வாற்றல் குறிப்பாகப் புலப்படுகிறது. ஆனால், உருவோடு அறிவுடையாள் இல்வாழ்க்கைப் பெண் *(பா.52)* என்றும், பிணியன்னார் பின்நோக்காப் பெண்டிர் *(பா.31)* என்றும், பின்வருவதை முன் அறியும் அறிவாற்றல் உடையவள் பெண் என இந்நூல் வெளிப்படையாகச் சுட்டுகிறது என்பது குறிப்பிடத் தக்கது. கணவன் ஒழுக்கத்தில் கலங்கினால் மனைவியும் கலங்கு வாள் என்று கடிகை குறிப்பிடுவது ''அன்புடைக் கணவர்'', ''அழிதகச் செய்யினும் பெண் பிறந்தோர்க்குப் பொறையே பெருமை''என்ற பெருங்கதைக் கருத்துக்கு மாற்றாக இருப்பது கருதத் தக்கது. தற்கொண்டாள் வளத்தக்காள் என்ற குறள் மொழிக்கு மாறாக வீட்டில் வருமானம் குறைந்தால் மனைவி வரம்பு கடந்து பேசுவாள் *(பா.99)* என்று குறிப்பிட்டிருப்பது யதார்த்தமாக உள்ளது.

## அமைப்பழகு

**யாப்பமைதி**

கடவுள் வாழ்த்துப் பாடல்கள் இரண்டில் முதற் பாடல் 5 அடியால் அமைந்த பஃறொடை வெண்பா. 2ஆம் பாடல் இன்னிசை வெண்பா. நூலில் 41* பாடல்கள் நேரிசை வெண்பா வாகவும் 60** பாடல்கள் இன்னிசை வெண்பாவாகவும் உள்ளன.

**நேரிசை***

1, 2, 5, 6, 8, 10, 11, 15, 18, 19, 21, 23, 25, 28, 30, 31, 33, 35, 36, 37, 41, 42, 44, 47, 49, 50, 52, 55, 56, 57, 63, 66, 67, 68, 69, 71, 89, 92, 94, 95, 96, 101.

**இன்னிசை****

கடவுள் வாழ்த்து 2ஆவது பாடல் 3, 4, 7, 9, 12, 13, 14, 16, 17, 20, 22, 24, 26, 27, 29, 32, 34, 38, 39, 40, 43, 45,

46, 49, 51, 53, 54, 59, 60, 61, 62, 64, 65, 70, 72, 73, 74, 75, 76, 77, 78, 79, 80, 81, 82, 83, 84, 85, 86, 87, 88, 90, 91, 93, 97, 98, 99, 100.

*பஃறொடை வெண்பா*

முதற் கடவுள் வாழ்த்துப் பாடல் 27, 58.

*பின்வரு நிலை அணி*

நான்மணிக்கடிகை ஆசிரியர் வந்த சொல்லே திரும்பத் திரும்ப வரும்படி பாடுவதில் மிகுதியும் அக்கறை காட்டியுள்ளார்.

முதற்சீரில் வந்த சொல்லே திரும்பத் திரும்ப வரும்படி பாடப்பட்டவை. *(எகா)*

திருவொக்கும் தீதில் ஒழுக்கம் பெரிய
அறனொக்கும் ஆற்றின் ஒழுகல் பிறனைக்
கொலையொக்கும் கொண்டு கண் மாறல் புலையொக்கும்
போற்றாதார் முன்னர்ச் செலவு *(பா.6)*

*ஏனைய பாடல்கள்*

1, 13, 21, 24, 26, 28, 30, 31, 34, 36, 43, 44, 49, 55, 68, 69, 73, 78, 84, 86, 88, 98. மொத்தம் 23 பாடல்கள்.

இரண்டாம் சீரில் வந்த சொல்லே திரும்பத் திரும்ப வரும்படி பாடப்பட்டவை

கல்லில் பிறக்கும் கதிர்மணி காதலி
சொல்லில் பிறக்கும் உயர் மதம், மெல்லென்
அருளில் பிறக்கும் அறநெறி, எல்லாம்
பொருளில் பிறந்துவிடும் *(பா.5)*

*ஏனைய பாடல்கள்*

3, 8, 9, 10, 12, 17, 18, 19, 20, 21, 22, 35, 37, 38, 41, 42, 45, 47, 48, 50, 58, 59, 65, 67, 70, 75, 77, 83, 85, 89, 90. மொத்தம் 33 பாடல்கள்.

மூன்றாம் சீரில் வந்த சொல்லே திரும்பத் திரும்ப வரும்படி பாடப்பட்டவை

கள்வம் என்பார்க்கும் துயில் இல்லை காதலி மாட்டு
உள்ளம் வைப் பார்க்கும் துயில் இல்லை ஒண்பொருள்
செய்வம் என்பார்க்கும் துயில் இல்லை அப்பொருள்
காப்பார்க்கும் இல்லை துயில் *(பா.7)*

*ஏனைய பாடல்கள்*

4, 15, 29, 32, 33, 46, 51, 52, 54, 56, 60, 61, 62, 63, 64, 79, 81, 85, 87, 92, 94, 95, 99. மொத்தம் 24 பாடல்கள்.

நான்காம் சீரில்வந்த சொல்லே திரும்பத் திரும்ப வரும்படி பாடப்பட்வை

இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்
வளம் இலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றம்
கிளைஞர் இல் போழ்தில் சினம் குற்றம்
தமர் அல்லார் கையகத்து ஊண் *(பா.91)*

*ஏனைய பாடல்கள்* **82, 96, 100** *(மொத்தம் 4 பாடல்கள்).*

முதல் அடியில் இரண்டாம் சீரிலும் இரண்டாம் அடியில் மூன்றாம் சீரிலும் மூன்றாம் அடியில் நான்காம் சீரிலும் வரும்படி பாடப்பட்ட பாடல்.

கன்றாமை வேண்டும், கடிய பிறர் செய்த
நன்றியை நன்றாக் கொளல் வேண்டும்; என்றும்
விடல் வேண்டும் தன்கண் வெகுளி, அடல் வேண்டும்
ஆக்கம் சிதைக்கும் வினை *(பா.11)*

பெயர்க் காரணமும் வேறுபட்ட பாடல்களும்

நான்கு இரத்தினம் போன்ற செய்திகளைக் கூறும் பாடல்களின் தொகுப்பு என்பதால் இந்நூல் நான்மணிக்கடிகை என்னும் பெயர் பெறுவதாயிற்று என்பர். 101 பாடல்களில் ஏறத்தாழ 91 பாடல்கள் இத்தன்மையனவே, 2, 4, 5, 9, 10, 33,

40, 63, 96, 97 ஆகிய பாடல்கள் சிறிது வேறுபட்ட தன்மை உடையவை எனலாம்.

### மூன்று கருத்துகள் அமைந்த பாடல்கள்

வாலிழையார் முன்னர் வனப்புஇலன் பாடு இலன்
சாலும் அவைப்படின் கல்லாதான் பாடுஇலன்
கற்றான் ஒருவனும் பாடு இலனே கல்லாதார்
பேதையார் முன்னர்ப் பாடின் *(பா.96)*

அழகிய நகை அணிந்த பெண்கள் முன் ஆடவரும், கற்றார் அவையில் கல்லாதவரும், கல்லாதார், அறிவுடையரோடு சேர்ந்த கற்றவரும் பெருமையில்லாதவர் ஆவர் என்பது பாடற் கருத்து. இப்பாடலைக் கல்லாதார், பேதையார் எனத் தனித் தனியாகக் கொண்டு கூட்டி நான்கு பொருள் கூறுவதாகக் கொள்வர்.

மாசுபடினும் மணி தன் சீர் குன்றாதாம்
பூசிக் கொளினும் இரும்பின் கண் மாசு ஒட்டும்
பாசத்துள் இட்டு விளக்கினும் கீழ்தன்னை
மாசுடைமை காட்டி விடும் *(97)*

அழுக்குப் பட்டாலும் மணி தன் பெருமை குறையாது. கழுவி எடுத்தாலும் இரும்பின்கண் அழுக்கு சேரும். கீழ்மக்கள் தளையிலிட்டு ஒறுத்தாலும் அறிவு கூறி விளக்கினாலும் தம் கீழ்மைத் தன்மையையே காட்டுவர் என மூன்று கருத்துகளே இப்பாடலில் உள்ளன. முதற் கருத்தின் மூலம் மேன்மக்கள் இயல்பு குறிப்பாகப் புலப்படுத்தப்பட்டுள்ளது.

### இரண்டு கருத்துகள் அமைந்தவை

நான்கடியில் முன் இரண்டு அடிகள் ஒரு கருத்தாகவும் பின் இரண்டு அடிகள் ஒரு கருத்தாகவும் அமைந்த பாடல்கள் இரண்டு உள்ளன. இவற்றை உவமானம் உவமேயமாகப் பொருத்திப் பார்க்கலாம். *(எடு. பாடல் 2,33).*

பறைபட வாழா அசுணமா; உள்ளம்
குறைபட வாழார் உரவோர்; நிறை வனத்து

நெல்பட்ட கண்ணே வெதிர்சாம்; தனக்கு ஒவ்வாச்
சொல்பட்டால் சாவதாம் சால்பு (பா.2)

பறை ஓசை செவியில் பட்டால் கேகயப் பறவைகள் உயிர் வாழா. அதுபோல் அறிவுடையோர் பழிச் சொல் கேட்டால் உயிர் வாழார். நெல் உண்டானால் மூங்கில்கள் பட்டுப் போகும். அது போல சான்றோர் இழிவுரை உண்டானால் உயிர் வாழ மாட்டார்.

இரும்பின் இரும்பு இடை போழ்ப பெருஞ்சிறப்பின்
நீர் உண்டார்நீரான் வாய் பூசுவ தேரின்
அரிய அரிய வற்றால் கொள்ப; பெரிய
பெரியரான் எய்தப்படும் (பா.22)

இப்பாடலில் முன் இரண்டு அடிகளை உவமைகளாகவும் பின் இரண்டு அடிகளை உவமேயமாகவும் கொள்ளலாம். இரும்பால் செய்யப்பட்ட கருவிகளால் இரும்பை வெட்டுவர். அது போல அரிய செயல்களை அரிய முயற்சிகளால் கொள்வர். நீருணவுகளை உண்பவர் நீரினால் வாய் கழுவுவர். அதுபோல பெரியோரான் பெரிய பேறுகளை எய்துவர்.

## இறுதி அடியில் கருத்து அமைந்த பாடல்கள்

'நல்லார் பிறக்கும் குடியை யார் அறிவார்?' என்ற ஒரே கருத்தைச் சொல்லும் பாடலில் கள்ளி வயிற்றில் அகிலும், மான் வயிற்றில் அரிதாரமும், கடலில் முத்துக்களும் பிறக்கும் என்று முதல் மூன்று அடிகளில் சொல்லப்பட்டுள்ளது. இவற்றின் மூலம் நான்காம் அடியில் முதன்மைக் கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது *(பா.4)*.

'தனக்கு அணி தான் செல் உலகத்து அறம்' என்ற கருத்தைச் சொல்லும் பாடலில் நெல்லும் கரும்பும் நிலத்திற்கும், தாமரை குளத்திற்கும், நாணம் பெண்மைக்கும் அணி என்ற கருத்து முதல் மூன்று அடியில் சொல்லப்பட்டுள்ளது *(பா.9)*.

சான்றோரை அன்பினால் பிணிக்க வேண்டும் என்ற கருத்தைச் சொல்லும் பாடலில், களிற்றைக் கந்திலும், நாகத்தை

மந்திரத்தாலும், கயத்தை இரும்பிலும் பிணிப்பர் என்ற கருத்து முதல் மூன்று அடிகளில் சொல்லப்பட்டுள்ளது *(பா.10)*.

திருமகள் கூடினால் செல்வம் பெருகும். அவள் நீங்கினால் செல்வம் கெடும் என்ற கருத்தைச் சொல்லும் பாடலில் உயிர் பிறக்கும் போது உடம்பை விட்டு நீங்கென்றால் நீங்காது. இறக்கும் போது நில் என்றால் நில்லாது என்ற கருத்து எடுத்துக்காட்டாகத் தரப்பட்டுள்ளது *(பா.40)*.

ஒரு குடியில் பிறந்திருந்தாலும் கல்லாத மூத்தவனை மதியாமல், கற்ற இளையவனை உலகத்தார் பாராட்டுவர் என்ற ஒரே கருத்தைச் சொல்லும் பாடலில் உலகத்தோர் திரிச்சுடர் சிறிதாயிருப்பினும் வணங்குவர், விறகுச் சுடர் பெரிதாயிருப்பினும் இகழ்வர் என்ற உவமை எடுத்துக்காட்டாகத் தரப்பட்டுள்ளது *(பா.63)*.

வறுமையுற்ற காலத்தில்தான் உறவினரால் ஆய பயன் அறியப்படும் என்ற கருத்தைச் சொல்லும் பாடலில் மணிகளின் இயல்பைக் கழுவியும், குதிரையின் இயல்பை ஏறியமர்ந்தும், பொன்னின் இயல்பை அதனை உருக்கியும் அறிவர் என்ற கருத்து முதல் மூன்று அடிகளில் சொல்லப்பட்டுள்ளது. இவற்றை எடுத்துக்காட்டுகளாகக் கொள்ளலாம் *(பா.5)*.

**நிறைவுரை**

விதியறங்களாகச் சிலவற்றையும் விலக்கறங்களாகப் பலவற்றையும் குறிப்பிட்டுள்ளது.

கல்விச் சிறப்பு, குடிப் பெருமை, சுற்றம் தழுவி வாழ்தல், கோடி பொருள் பெறினும் நெஞ்சம் கோடாமை, ஈதல், இசை பட வாழ்தல், மனைமாட்சி, மக்கட் பேற்றால் சிறப்பு, பொறுமைப் பண்பு முதலியவற்றைப் பாராட்டி தான் செய்யும் அறமே தனக்கு அணியாகும் என்று வழிப்படுத்துகிறது இந்நூல்.

அந்தணர்க்கு முதன்மை தரல், ஆண் மக்கட்பேற்றைச் சிறப்பித்தல், ஆண் முதன்மையை ஏற்றுப் பெண்ணின் நாணம், கற்பு முதலிய பண்புகளை மீண்டும் மீண்டும் வலியுறுத்தல்,

குடும்பம் சார்ந்தே பெண்ணின் பெருமை பேசுதல் என அக் காலச் சமுதாயம் ஏற்றிருந்த கருத்துகள் இந்நூலில் விவரிக்கப் பட்டுள்ளன. கணவன் ஒழுக்கத்தில் குறை காணப்பட்டால் மனைவியும் குறைவு படுவாள் *(பா.19)*. வீட்டின் வருமானம் குறையுமானால் பெண் நிலை கடப்பாள் *(பா.99)* என்றெல் லாம் நடப்பியல் கலந்த கருத்துகளையும் குறிப்பிட்டுள்ளது கருதத் தக்கது.

கருத்துகளை வெளிப்படுத்தியுள்ள நிலையில் அமைப் பிற்கு முதன்மை அளித்து, பின்வரு நிலை அணியை முதற் சீரில், இரண்டாம் சீரில், மூன்றாம் சீரில் எனப் பலவாறு கையாண்டு சிறக்கிறது. ஒரு சில பாடல்களில் நான்கு கருத்துகள் இடம் பெறவில்லை என்பதும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

# பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் காட்டும் அரசியல் அறம்

சங்க மருவிய கால இலக்கியங்கள் எனப்படும் கீழ்க் கணக்கு நூல்களில் இடம் பெற்றுள்ள அரசியல் குறித்த செய்தி களைத் தொகுத்தும் வகுத்தும் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சங்கச் சமுதாயம் ''முடியாட்சி முறையைப் போற்றி மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்'' என்ற வாழ்ந்த சமுதாயம். வழி வழி ஆட்சி முறையை ஏற்றிருந்த சமுதாயம். ''திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேன்'' என்று அரசனைத் தெய்வமாகவே போற்றி வழிபட்ட சமுதாயம். சங்கத் தொடர்ச்சியான கீழ்க்கணக்கு நூல்களிலும் இக்கருத்துகளையும் மேல் வளர்ச்சியையும் காண முடிகிறது. இந்நூல்களில் ''அரசியல் அறம்'' என்று குறிப்பிடுவது அரசனைப் பற்றிய கருத்தாக்கமே.

## திருக்குறள் காட்டும் அரசியல் அறம்

கீழ்க்கணக்கு நூல்களில் மட்டுமல்ல, தமிழ் நூல்களிலேயே முதன்மையான திருக்குறள் அரசியல் குறித்து இறைமாட்சி முதல் இடுக்கணழியாமை ஈறாக 25 அதிகாரங்களில் விரித்துரைக் கிறது. அரசனின் நற்குண நற்செயல்கள், குடிகாத்தல், அறி வாற்றல், பெரியோரைத் துணைக் கோடல், காலம், இடம், வலிமை அறிந்து செயல்படுதல், கண்ணோட்டம், ஆள்வினைத்

திறம் முதலியவை இப்பாடல்களில் விரித்துரைக்கப்பட்டுள்ளன. ''இறை மாட்சி'' என்ற அதிகாரம் ஒன்றே வள்ளுவரின் அரசு குறித்த கருத்தைத் தெளிவாக உணர்த்தப் போதுமானது எனலாம். இருப்பினும் வள்ளுவர் அரசன் குறித்துக் கூறும் பல்வேறு இன்றியமையாச் செய்திகளைப் பின்வருமாறு தொகுத்துக் கொள்ளலாம். ''முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை என்று வைக்கப்படும்'' *(கு.388)* என்று சங்க மரபை ஏற்கிறார் வள்ளுவர். மழைத் துளி இல்லாவிட்டால் உலகம் எத்தகைய துன்பம் அடையுமோ அத்தகைய துன்பத்தை அரசனுடைய இரக்கம் பெறாத குடிகள் அடைவார்கள் என்று *(கு. 557)* அரச முதன்மையை எடுத்துரைக்கிறார்.

### பொருளாக்கம்

அரசாங்கம் செயல்பாடப் பொருளாதாரம் முதன்மையானது. செல்வமற்ற நாடு விரைவில் சீர்குலைந்து போகும். எனவே அரசன் நாடு புரப்புதற்கு உரிய பொருளைத் திட்டமிட்டுச் சேர்த்து, காத்து, வகுக்க வேண்டும் *(கு.385)*.

### நான்கு பண்புகள்

வறியோர்க்குக் கொடுத்தல், ஏழை எளியவர்பால் கருணை காட்டுதல், நீதிநெறி தவறாமல் ஆட்சி புரிதல், குடிமக்களுக்கு எவ்விதத் துன்பமும் நேராமல் பாதுகாத்தல் இவை அரசனுக்குரிய இன்றியமையாத நான்கு பண்புகள் *(390)*.

### அறிவுத் திறம்

அரசன் நூலறிவும் கேள்வியறிவும் உலகத்தோடு கூட ஒழுகும் பேரறிவும் *(426)* உலகியலறிவும், வாய்ந்தவனாகத் திகழ வேண்டும். பின் வருவதை முன் அறிந்து தடுத்துக் கொள்ளும் அறிவுடையவனாகச் சிறக்க வேண்டும் *(429)*.

பெரியோரைத் துணையாகக் கொண்டிருக்க வேண்டும் *(460)*. இடித்துரைப்பவரைத் துணைக் கொண்டிருக்க வேண்டும் *(448)*. காட்சிக்கு எளியவனாகவும் கடுஞ்சொல் கூறாதவனாக

வும் இருக்க வேண்டும் *(386)*. தன் காது கைக்கும்படி குறை கூறும் செய்திகளையும் பொறுத்துக் கொள்ளும் குணமுடையவ னாகத் திகழ வேண்டும் *(389)*. மக்கள் கருத்தறிந்து ஆட்சி செலுத்த இது அவசியமானது. தன்னை வியப்பவனாக இருக்கக் கூடாது *(439)*. தன் குற்றத்தைக் கண்டறிந்து நீக்கிக் கொள் பவனாகவும், பின்னர் பிறர் குற்றத்தைக் கண்டறிய வல்ல வனாகவும் இருக்க வேண்டும் *(346)*.

எச்செயலையும் எண்ணித் துணிபவனாக, துணிந்த பின் எண்ணாதவனாக இருக்க வேண்டும் *(407)*. செயல் முடிப்ப தற்குத் தக்கவர்களைத் தெளிந்து தேர்ந்தெடுக்க வேண்டும் *(507)*. தேர்ந்தெடுத்த தகுதியாளனை அப்பணிக்கு உரியவ னாக்கிப் பொறுப்பைத் தர வேண்டும் *(518)*.

வள்ளுவத்திற்கு முற்பட்ட காலத்தில் எழுந்த வேத சமயத்தின் புனித நூல் தொகுதிகளுள் ஒன்றான சுமிருதி *(கி.மு. 4-5)* அரசனைத் தெய்வமாகக் காட்டுகிறது. சுக்கிர நீதி என்ற வடமொழி நூல் ''அரசனின் தெய்வீகத்தை எல்லா உலகங்களும் அரசனின்றி அச்சத்தால் எப்பக்கங்களிலும் சிதறுண்டிருக்குங் கால் அவ்வெல்லாவற்றையும் காத்தற் பொருட்டுப் பிரம்ம தேவன், வாயு, இந்திரன், இயமன், சூரியன், அக்கினி, வருணன், சந்திரன், குபேரன் ஆகிய இவர்களுடைய அழிவில்லாத கூறு களைக் கொண்டு அரசனைப் படைத்தான் என்று எடுத்துரைக் கிறது. பல்வேறு தெய்வங்களின் மனித வடிவமே மன்னன் என்று நாரத ஸ்மிருதி குறிப்பிடுகிறது. மனுதர்ம சாஸ்திரம் என்ற வடமொழி நூல் வேதம் கட்டளையிட்டிருக்கின்றவாறு உப நயனம் முதலிய சம்ஸ்காரங்களைக் கொண்ட சத்திரியனால் இவ்வுலகம் விதிப்படி காப்பாற்றத் தக்கதாகும். இந்திரன், வாயு, எமன், சூரியன், அக்கினி, வருணன், சந்திரன், அளகேசன் ஆகிய திசைக் காவலர் அனைவரின் தன்மைகள் ஒருருவாகத் தோன்றியவனே அரசன்'' என்று குறிப்பிடுகிறது. இக்கருத்துக் களை ஆ. சிவசுப்பிரமணியன் சுமிருதியும் திருக்குறளும் என்ற தன் அண்மைக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார் *(பக்.12, உங்கள் நூலகம், ஆகஸ்ட் 2010)*.

சுமிருதிகள் கருத்தை ஏற்றுக் கொண்டு வள்ளுவரும் இறை என்றே அரசனைக் குறிப்பிட்டுள்ளார். ஆனால், அவை கூறும் வருணக் கோட்பாட்டை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை.

### பழமொழியில் அரசியல் அறம்

திருக்குறளுக்கு அடுத்த நிலையில் பழமொழியில் அரசன் தொடர்பான செய்திகள் ஏறத்தாழ 45 பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்நூலின் ஆசிரியர் முன்றுரை அரையனார் ஒரு குறுநில மன்னர் என்பது குறிப்பிடத் தக்கது.

*பா.* 8, 20, 21, 31, 33, 49, 76, 105, 110, 120, 147, 150, 153, 155, 165, 169, 178, 181, 187, 206, 225, 231, 234, 242, 248, 264, 273, 287, 295, 96, 309, 311, 317, 323, 328, 329, 331, 338, 341, 349, 351, 383, 391, 397 *(மர்ரே பதிப்பு).* பழமொழி நானூறு கூறும் கருத்துகளை முடியாட்சி முறை ஏற்பு, செங்கோலரசன் சிறப்புகள், கொடுங்கோலரசர் குறை பாடுகள், அரசனும் குடிகளும், அரசனும் சான்றோரும், அரசனும் வீரரும் என்னும் தலைப்புகளில் பகுத்துக் காணலாம்.

### முடியாட்சி முறை ஏற்பு

உரை முடிவு காணான், இளமையோன் என்று எண்ணிய நரைமுது மக்கள் மகிழ்ச்சி அடையுமாறு நரை முடி அணிந்து அரிய தீர்ப்பு வழங்கினான் கரிகாலன் என்று எடுத்துக்காட்டி குலவிச்சை கல்லாமல் பாகம் படும் *(பா.21)* என்கிறது பழமொழி. இப்பாடல் பரம்பரை ஆட்சியை ஒப்புக் கொண்டு பேசுவதாக அமைந்துள்ளது.

### செங்கோல் அரசர் சிறப்புகள்

அரசனுக்கு வெற்றி தருவது வேலன்று. மன்னவனின் கோணாத கோல் என்பர் வள்ளுவர். அரசன் செங்கோலனாக இருந்தால்தான் பாராட்டுவர். வெங்கோலனாக இருந்தால் இகழ்வார். கண்டிப்பு வேண்டும். ஆனால், செங்கோன்மையே மெய்யான வெற்றி தரும். அவன் அனைத்துச் செல்வங்கள்ளயும் அளிக்க வல்லவன் *(பா.248)*. அரசன் மாசு மருவற்றவனாக, மக்கள்

நலம் விரும்புபவனாக மக்கள் மீது அன்பு கொண்டு வாழ்ப வனாகத் திகழ்ந்தால் பகைவர் பலர் படையெடுத்து வந்தாலும் அவனை எதுவும் செய்து விட முடியாது. ஆயிரம் காக்கையை விரட்ட ஒரு கல் போதும் அல்லவா *(பா.165)*. பண்பு நிறைந்த அரசன் மக்களை வருத்தாது அவர்களிடம் வரி வாங்க வேண்டும்: வண்டு பூவில் தேன் அருந்துவது போல அது அமைய வேண்டும். குடிமக்களிடம் பெற வேண்டிய வரிப் பொருளை அப்போதைக்கப்போது பெற்று விட வேண்டும். மிகுதியாகச் சேர்ந்து விடுமாறு விட்டு விடக் கூடாது. காலங் கடந்து அவ்வரிப் பொருளைப் பெறுவது இயலாதது என்கிறார் *(பா.242)*. செல்வர், ஏழை என்று வேறுபாடு காட்டாமல் சம நீதி வழங்குபவனாக இருக்க வேண்டும். அப்படி வேற்றுமை காட்டுவது தாயின் ஒரு முலையிலிருந்து பாலும், மற்றொரு முலையிலிருந்து நீரும் ஒழுகுவது போன்றது என்று இதனை அருமையாகச் சித்திரிக்கிறது பழமொழி *(பா.206)*.

முறைதெரிந்து செல்வர்க்கும் நல்கூர்ந்தவர்க்கும்
இறைதிரியான் நேரொத்தல் வேண்டும் - முறைதிரிந்து
நேர் ஒழுகான் ஆயின் அதுவாம் ஒருபக்கம்
நீர் ஒழுகப் பால் ஒழுகுமாறு *(பா.206)*

புறப் பகையிலிருந்து மக்களைக் காப்பாற்ற மன்னன் போராற்றல் பொருந்தியவனாக இருக்க வேண்டும். அவன் எதிரிகளை ஒழித்தலும் ஒடுக்குவதும் அவசியம் *(பா.287)*. வன் பகை என்று அஞ்சாமல் போரிட்டு வெல்ல முயற்சி செய்ய வேண்டும் *(பா.317)*. வாய் வீரம் பேசுவது கூடாது *(பா.296)*. அலை ஓய்ந்து கடலாட முடியாது. எப்படியாயினும் மக்களைச் செந்நெறியில் நிற்கச் செய்து அவர்களை வணங்கி வாழ வேண்டும் *(பா.87)*. மனிதர்கள் தம் வாயில் சேர்ந்த நீரை உள்ளே வைத்திருப்பதும் வெளியே உமிழ்வதும் அவர்தம் மன நிலையைப் பொறுத்தது. மன்னன் தன்னை வழிபடும் மக்களைச் செல்வராக ஆக்குவதும் அழிப்பதும் அது போன்றது. இப் பாடல் அரசனுக்கு முதன்மை தந்து மக்களின் உழைப்பை, முயற்சியை அலட்சியப்படுத்துவதாக உள்ளது. சிற்பி தான்

வடித்த சிலையைக் கோயிலில் வைத்த பிறகு வழிபடுவது மாதிரி என்ற கருத்து மக்களுக்கு முதன்மை தருபவராக மன்னன் விளங்க வேண்டும் என்று சுட்டிக் காட்டுகிறது.

எந்நெறியானும் இறைவன் தன் மக்களைச்
செந்நெறிமேல் நிற்பச் செயல் வேண்டும் - அந்நெறி
மான்சேர்ந்த நோக்கினாய் ஆங்க அணங்கு ஆகும்
தான் செய்த பாவை தனக்கு

என்பது பழமொழி. அரசன் தனக்குப் போட்டியாகத் தலைமை அடையத் திட்டமிடுபவரை அருகில் வைத்துப் பெருமைப் படுத்தக் கூடாது. அது பாம்போடு உடன் உறைவது போன்றது *(பா.349)*. இவ்வாறு அரசனின் செங்கோன்மை, மக்கள் மீது அன்பு காட்டுதல், வரி வசூலித்தல், நீதி செலுத்துதல், போராற்றல், போட்டியாளரைச் சமாளித்தல் ஆகியவற்றைப் பழமொழி நானூறு அருமையாகப் பதிவு செய்துள்ளது. இக்கருத்துகளுள் சில அரையரின் பட்டறிவாக இருக்கலாம்.

**கொடுங்கோல் அரசன் குறைபாடுகள்**

கூற்றம் ஒருவர் உயிரைக் கவர்ந்து கொள்ளும் போது அவர் கருத்தைக் கேட்பதில்லை. அதுபோல் கொடுங்கோல் அரசன் மக்களை வருத்தும்போது அவர் குறையை ஆராய்ந்து தீர்ப்ப தில்லை *(பா.110)*. இவ்வாறு கொடுங்கோல் அரசனைக் கூற்று வனுக்கு ஒப்பிடுகிறார் பழமொழி ஆசிரியர். ''மருந்து இன்று மன்னவன் சீறின்'' என்கிறது மருதக்கலி *(பா.24)*.

அரசன் மக்களுக்கு அல்லவை செய்து மிகுதியாக வரி பெறுவது மயிலின் வண்ணக் கொண்டையை அறுத்து அதற்கே உணவாக இடுவது போன்றது *(பா.329)* என்னும் பழமொழி மக்களின் நலத்திற்காகப் பெறப்படும் வரிப் பொருள் மக்களைத் துன்புறுத்துவதாக அமையக் கூடாது என்கிறது.

**அரசரும் குடிகளும்**

மக்கள் அரசன் ஆணையை எவ்வித மறுப்பும் கூறாமல் உடனடியாக நிறைவேற்ற வேண்டும் என்பதை மூன்று பாடல்

களில் திரும்பத் திரும்ப வலியுறுத்துகிறது *(பழமொழி பா.31, 181, 331)*. அரசன் ஆணை பெற்றோர், வேலின் வாயிலும் வீழ்வார் என்று விவரிப்பது உயிரையும் தருவர் என்பதைப் புலப்படுத்துகிறது. ஒரு மரத்தின் கீழ் மற்றொரு மரத்தை வளர்க்க இயலாது. அது போல மன்னவன் ஆணைக்கு மாற்று இல்லை என்கிறது மற்றொரு பாடல் *(பா.311)*.

மன்னரால் மதித்து உணரப்பட்டாரை மக்களும் மதித்து ஏற்பர். *(397)*

அரசனைக் கொல்வது என்பது பனைமரம் தம்மேல் விழும் வகையில் அதனை வெட்டுவதற்கு ஒப்பானது *(பா.201)*. அரசனைச் சார்ந்து வாழ்வோர் தாம் துன்புற்று வாழ்ந்தாலும் பிறரை அணுகித் தமக்கு இன்னது வேண்டும் என்று கேட்கக் கூடாது *(பா.178)*. அரசனை வழிபடுவோர் அவன் ஏவல் வினை செய்பவரையும் உதவிக்கு அணுகுதல் கூடாது *(பா.20)*. மேற்குறிப்பிட்டவை அரசனுக்கு இழிவு சேர்ப்பன.

அரசரிடம் பழகும்போது மிகவும் அணுகி விடாமலும் மிகவும் விலகி விடாமலும் கவனமாக நடந்து கொள்ள வேண்டும் *(பா.225)*. மன்னரைச் சார்ந்தார் கவனமாக இருக்க வேண்டும். அரசனைச் சினப்பது கூடாது *(பா.341)*. அவன் பொறுமையைச் சோதிக்கக் கூடாது *(பா.305)*.

அரசன் தகாதன செய்தாலும் பதிலுக்கு வேண்டாதன செய்தல் கூடாது. அது தூங்கும் புலியை எழுப்புவது போன்றது *(பா.33)*. அரசன் விரும்பும் பொருளைத் தாமும் விரும்புவது புலியை அருகில் அழைப்பது போன்றது *(பா.309)*. அரசன் சிறப்பிழந்தாலும் அவரை இகழக் கூடாது. அவ்வாறு செய்வது இளையது என்று பாம்பை இகழ்வது போன்றது *(பா.383)*. அரசன் செங்கோலன் அல்லனேல் குடிகள் செய்வதற்கு ஒன்றுமில்லை. இதனை விளக்க யானை கலத்தை உருட்டி விட்டால் அதனை மூடும் கலன் இல்லை என்கிறது பழமொழி. இவ்வாறு அரசனை புலி, பாம்பு, யானை, கூற்றுவன் ஆகியவற்றோடு ஒப்பிட்டு அறிவுரை கூறுகிறது பழமொழி.

அரசனைச் சார்ந்தோர் பயன் பெறாது போவதில்லை. அரசர் மனம் மகிழுமாறு நடந்து கொண்டால் கடலில் உண்

டாகாதன கூடக் கிடைக்கும் *(பா.225)*. அரசனோடு தொடர்புடையவர் யாருக்கும் மனத்தாலும் அஞ்ச வேண்டியதில்லை. அனைவராலும் மதிக்கவும் பெறுவர் *(பா.76)*.

இவ்வாறு எந்நிலையிலும் அரச முதன்மையைப் போற்றி, பரம்பரை ஆட்சிக்குப் பல்லாண்டு பாடி முடியாட்சித் தத்துவத்தை முழுமையாக ஆதரித்துள்ளது பழமொழி. எதிர்ப் புணர்வை முற்றாக மழுங்கடிப்பதாகப் பதிவுகள் உள்ளன.

**அரசரும் அமைச்சரும்**

அரசன் அதிகார முதன்மை உடையவனாக இருப்பினும் அமைச்சன் சொல் கேட்டு ஆட்சி நடத்துபவனாக இருக்க வேண்டும் என்றும், சிற்றினம் சேராதவனாக இருக்க வேண்டும் என்றும் எடுத்துரைக்கும் வள்ளுவம். அரசனுக்கு மூத்தோர் அறிவுரை முன் இன்னாதது. பின் இன்பம் தருவது *(பா.35)*. கல்வி வல்லாரையும் கட்டுரை வல்லாரையும் அரசர் தன் அவைக் களத்தில் சூழ்வாராக வைத்துக் கொள்ள வேண்டும். அரசவை கொண்டு அரசன் இயல்பை அறிந்து கொள்ளலாம் *(பா.264)*. குற்றம் தீர்ந்த அரசனின் செங்கோல் சிறப்பிற்கு அருகில் உள்ள அமைச்சர் காரணம் *(பா.226)*. நல்லது தீயது என்பவற்றைப் பகுத்தறியும் பெரியோரைப் பெற்ற அரசர் நிலை, காளைகள் அன்பு பூண்டு ஒழுகுதலை ஒத்தது *(பா.104)*. சான்றோர் அறிவுரை பெறாத அரசன் நரம்பு அறுந்த யாழ் ஆவான் *(பா.228)*. அரசன் தீங்கு செய்யின் அமைச்சரையே சாரும். தாய் தன் பிள்ளைகளை மருட்டுவது போன்று அமைச்சர் அரசனை நெறிப்படுத்த வேண்டும் *(பா.323)*.

அரசன் தீயவை செய்தாலும் கற்றறிந்தார் காய்வன செய்யார் *(பா.234) (புலியிடம் இருந்து மான் தப்ப முடியாது)* என்று எச்சரிக்கிறது. செங்கோல் அரசன் அமைச்சர் சொல் கேட்டு ஆட்சி நடத்த வேண்டும் என்றும், அமைச்சர் சூழல் அறிந்து அழுத்தமாக அறிவுறுத்த வேண்டும் என்றும் திரும்பத் திரும்ப வற்புறுத்தும் பழமொழி. அரசன் அல்ல செயினும் காய்வன செய்யக்கூடாது என்றும் அமைச்சர் அடங்கிப் போக ஆற்றுப் படுத்துகிறது.

## அரசரும் வீரரும்

அரசன் நோக்கினால் உடனே போர் ஏற்போம் என்பர் வீரர் *(பா.231)*. அரசன் ஆணையிட்டால் வேலின் வாயிலும் விழுவர் *(பா.31)*.

மனத் திண்மை உடையவர் *(பா.296)*. உடம்பைக் கொடுப்பவர் *(பா.239)* தம் வீரத்தைப் புகழ்ந்து சொல்லாதவர் *(பா.131)*. பகை நிலை அறிந்து போரிடுபவர் *(பா.382;317)*. புறமுதுகிட்டோடுபவர் மீது போர் தொடுக்காதவர் என வீரர் இயல்புகளை விவரிக்கிறது *(பா.284)*. வினை செய்யாத வீரர் அரசனைக் குறை கூறுவது தவறு என்கிறது *(பா.155)*.

அரசனின் செங்கோன்மை, மக்கள் அன்பு, நடுநிலை தவறாமை, வரி வசூலித்தல், போராற்றல் முதலியவற்றைப் பழமைத் தடத்தில் போற்றியுரைக்கும் பழமொழி அவன் வலிமையை - புலி, யானை, பாம்பு ஆகியவற்றோடு ஒப்பிட்டு மக்களின் பணிவையும், சகிப்புத் தன்மையம் வளர்க்க முற்பட்டுள்ளது. அச்ச உணர்வைத் தூண்டி அடிமை நிலையில் இருப்பதை ஆதரிக்கிறது. அரசன் தவறு செய்தாலும் எதிர்ப்பது கூடாது என்கிறது. கட்டுப்படாதவர் காயப்படுவர் என்று அச்சுறுத்தியும் வணங்கி வாழ்பவர் செல்வமும் மதிப்பும் பயனும் பெறுவர் என்று ஆசை காட்டியும் அரச முதன்மையை வலியுறுத்துகிறது. அரசர் அமைச்சர் சொற்கேட்டு நல்லாட்சி புரிய வேண்டும். இருப்பினும் அவர் தீயன செய்தாலும் அமைச்சர் காய்வன செய்யக் கூடாது. வீரர், அரசர் செய் என்றால் செத்து மடிபவர்களாக இருக்க வேண்டும் என்கிறது.

## நான்மணிக்கடிகையில் அரசியல் அறம்

11 பாடல்களில் அரசரைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.

அரசர்கள் ஆட்சி முறையையும் வெற்றிக்குரிய வழிகளையும் அறிந்திருப்பர் *(முறையொடு வென்றி அறிப அரசர்கள்)* பா.88 யார் பக்கமும் சார்பில்லாமல் நீதி வழங்குவதும் உள்நோக்கம் எதுவுமின்றி ஆட்சி புரிவதும் அரசர்க்குரிய சிறந்த ஆளுமைப்

பண்புகளாகும் *(பா.93)*. அரசன் நல்லவனாக இருந்தால் அது நாட்டிற்கு ஆக்கமாகும் *(பா.18)*. மக்கள் நலம் நாடுகின்றவர் களாக அரசர் விளங்க வேண்டும். மண்ணில் உள்ள மக்கள் கலங் கினால் அரசனின் ஆட்சியும் கலங்கும் *(பா.19)*. நல்ல குடி மக்கள் இல்லறம் செய்யா இடத்தில் அரசன் இருப்பதில்லை *(பா.46)*. ஆளும் நாட்டு வளங்களால் அரசர் பெருமை பெறுவர் *(பா.83)*. இவ்வாறு ஆட்சித் திறம், நீதியுணர்வு, நற்பண்புகள், மக்களைப் போற்றல், நாட்டு வளம் முதலிய செய்திகளை மரபுத் தடமொற்றிப் பேசும் கடிகை புதிய புதிய நாட்டை வெல்லு தல் மன்னர்க்குச் சிறப்பு *(பா.84)* என்றும் அரசர் போரில் நேரடி யாகப் பங்கு கொண்டால் வீரர்களிடம் மறக்களிப்புத் தோன்றும் *(பா.34)* என்றும் அரசரின் வீரச் சிறப்பை விதந்து பேசுகிறது.

வீறுசால் மன்னர் விழையும் குடி உள *(பா.51)* என்றும் சர்வாதிகாரம் செய்யும் அரசனுக்கு அவன் படையே துன்பத்தைத் தரும் *(பா.49)* என்றும் புதிய கருத்தைக் கூறி யுள்ளது கடிகை *(வேந்தனையும் தன் அடைந்த சேனை சுடும்)*.

### திரிகடுகத்தில் அரசியல் அறம்

திருக்குறள் படை, குடி, செல்வம், அமைச்சு, நட்பு, அரண் என்ற ஆறும் அரசனுக்குரிய அங்கங்கள் என்று குறிப் பிட்டுள்ளது. திரிகடுகம் பத்தினித் தன்மை உடைய படை, அஞ்சா மதில் அரண், விழுநிதி ஆகிய மூன்றும் அரசனுக்குரிய உறுப்புகள் *(பா.100)* என்கிறது. மூன்று பாடல்களில் அரசன் மழையோடு தொடர்புபடுத்திச் சொல்லப்பட்டுள்ளான். முறையாக ஆட்சி புரியும் அரசன் நாட்டில் மழையும் விளைச்ச லும் இருக்கும் *(பா.545)* என்று குறள் கூறுவதை மிகைப்படுத்தி கொடிது நீக்கி நல்லது செய்யும் அரசன் பெய் என்று சொல்ல மழை பெய்யும் *(பா.96)* என்கிறது இந்நூல். மன்னன் நீதி தவறினால் மழை பெய்யாது என்று குறள் கூறுவதை *(பா.559)* பொருள் விரும்பிக் குடிகளைத் துன்புறுத்தும் அரசன் மழை அறுக்கும் தீயகோள் ஆவான் *(பா.50)* என்று விவரிக்கிறது. இயற்கை ஆற்றலையே ஏவல் கொள்வான் அரசன் என்பது பொருள். புறநானூற்றுப் பாடலிலும் இத்தகைய கருத்து உண்டு.

அரச் உறுப்புகள் பற்றிக் குறிப்பிட்டிருப்பதும் அரசனை மழையோடு தொடர்புபடுத்திப் பேசுவதும் பழமொழியில் இல்லாதவை.

சாலக் குடியோம்ப வல்லவன் அரசன் *(பா.13)* அவன் குடிமக்களையும் அமைச்சரையும் படை வீரரையும் தழுவித் தன் கைக்குள் வைத்திருக்க வேண்டும் *(பா.33)* என வரும் குறிப்புகள் அரசனின் கடமைகளைச் சுட்டுவனவாக உள்ளன.

அரசன் கோல்கோடி வாழக் கூடாது. அது சால்போடு பட்டதல்ல *(பா.66)*. உலகோர் எனப்படும் மூவரில் நீதி தவறா அரசனும் ஒருவன் ஆவான் *(பா.34)*. இவ்வரிசையில் பார்ப்பான் முதலில் வைக்கப்பட்டிருப்பது சிந்திக்கத் தக்கது.

அமைச்சரைப் பொருள் கொடுத்துப் போற்றுதல், உறவினரை அணைத்துக் கொள்ளுதல், நல்லோரை இன்சொற்களால் இணைத்துக் கொள்ளுதல் ஆகியன இளவரசன் கடமைகள் *(பா.58)* என்று அடுத்த தலைமுறையின் கடமைகளைச் சுட்டுவது இந்நூலில் மட்டுமே இடம் பெற்றுள்ள கருத்தாகும்.

### ஏலாதியில் அரசியல் அறம்

ஏலாதி நூலில் அறநோக்கின் அடிப்படையில் அரசர் குறித்த கருத்துகள் விவரிக்கப்பட்டுள்ளன. 15 பாடல்கள் *(35, 42 முதல் 48, 52-54, 56, 57, 59, 60)* பசிப் பிணி தீர்ப்பவர்கள் மறு பிறவியில் அரசன் ஆவார்கள் என்று திரும்பத் திரும்ப வலியுறுத்துகின்றன. கள், புலால் உண்ணாமல், சூது விரும்பாமல், கொலை புரியாமல், பொய்யாமல், வாது புரியாமல், செருக்காமல், யாரையும் வையாமல், பிறர் மனையாளை விரும்பாமல், இல்லற நெறி பிறழாமல், வழிபாட்டு நெறி பிறழாமல், ஒழுக்கம் குன்றாமல், வறியவரை நகையாடாமல், பெரியோர் சொல் போற்றி, வஞ்சகர் சொல் கேளாமல், கொடுஞ்சொற் கூறாமல், பணிவுடையவராய், நல்வழி நடப்பவராய், நல்லோர் உரை கேட்பவராய், நுண்ணிய நூல் கற்பவராய், நெறி பிறழாமல் வாழ்பவர்கள் அரசர் ஆவார்கள் என்றும்,

துறந்தார், துறவாதார், வறியர், தென்புலத்தார், ஏழைகள், சிறுவர், சான்றோர், மாதவர், எளியோர், இல்இழந்தார், கண் இழந்தார், பொருள் இழந்தார், நெல் இழந்தார், நிரை இழந்தார், கடன்பட்டார், காப்பில்லார், கால்முடம் பட்டார், மூத்தார், பார்ப்பார், பசித்தார், துறவி, பிறரால் வெறுக்கப்படுபவர், காலில் விலங்கிடப்பட்டவர், தண்டிக்கப்பட்டவர், உயர் நிலையிலிருந்து தாழ்ந்தவர், பெண்டிர், கருஞ்சிரங்கு, வெண் தொழுநோய், கல் அடைப்பு நோய், வாத நோய், கழலை நோய், பெரும் வயிற்றுத் தீயார் ஆகியோர்க்கு உணவளிப்பவர்கள் அரசர் ஆவார்கள் என்றும் ஐயம் *(ஏற்போர்க்கிடுவது)*, பிச்சை *(துறவோர்க்கிடுவது)* தவசிகளுக்கு ஊன் ஆடை தருபவர் வையகமும் வானகமும் ஆள்வர் என்றும் விவரிக்கிறது இந்நூல். பண்புச் சிறப்புகள் அனைத்தும் உடையவராய்ப் பகுத் துண்பவர்கள் அரசர் ஆவார் என்று இப்பாடற் கருத்துகளைத் தொகுத்துக் கூறலாம். ஈகையை வலியுறுத்தும் நோக்கில் கூறப் பட்டவை. அரசராய் இருப்பவர்கள் சமுதாயத்தின் அனைத்து நிலை மக்களையும் புரப்பவர்களாக இருக்க வேண்டும் என்று நேரிடையாக அறங்கூறாமல் அனைத்து நிலை மக்களையும் புரப்பவர்களாக இருப்பவர் அரசர் ஆவர் என்று மாற்றிக் கூறுகிறது ஏலாதி.

இன்ப நுகர்ச்சி, தேடிய பொருளைப் பாதுகாவாமல் அழித்தல், வேட்டையாடுதல், கள்ளுண்ணல், சூதாடல், வன் சொற்கூறல், மிக்க கோபத்தால் தண்டித்தல் இவை ஏழும் உறாத அரசர் பகையரசரின் சினத்திற்கு ஆளாக மாட்டார் என்று ஒரு பாடல் *(பா.18)* குறிப்பிடுகிறது.

**ஆசாரக் கோவையில் அரசியல் அறம்**

ஆசாரக் கோவையில் அரசன் தொடர்பான அறநெறிகள் 13 பாடல்களில் *(16, 17, 66, 67, 69, 71, 72, 73, 78, 81, 84, 85, 100)* கூறப்பட்டுள்ளன. மன்னரைச் சேர்ந்தொழுகல் குறித்துக் கூறும் கருத்துகள் சில ஆசாரக் கோவையில் விரிக்கப்பட் டுள்ளன. மிகுந்த பணிவுடன் அரசரிடம் நடந்து கொள்ள வேண்டும் என்று வலியுறுத்துகிறது ஒரு பாடல்.

அரண்மனையிலும் மன்னர்கள் வெளியில் உலா வரும் போதும் பெரியோர்களைக் கண்டால் வணங்கக் கூடாது என்கிறது மற்றொரு பாடல் *(பா.72)*.

செவிச் சொல்லும் சேர்ந்த நகையும் கூடாது என்று குறள் குறிப்பிடுவதை நகையொடு என்ற பாடலில் குறிப்பிடுகிறது ஆசாரக் கோவை *(பா.73)*.

இளையர் என்று இகழாமல் அரசனோடு ஒழுக வேண்டும் என்று குறள் கூறுவதை விரித்து பாம்பு, அரசு, நெருப்பு, சிங்கம் இவை இனியவை, எளியவை, பழக்கமுடையவை என்ற நெருங்கிப் பழகக் கூடாது என்கிறது ஒரு பாடல் *(பா.84)*.

அரசர் கூத்துப் பார்க்கும் போதும் மனைவியோடு இருக்கும் போதும் புகக் கூடாது என்கிறது ஒரு பாடல் *(பா.81)*.

அரசனிடம் சொல்லத் தகாதவை இவை எனப் பட்டிய லிடுகின்றன சில பாடல்கள் *(பா.67, 71)*.

அரசனோடு எவ்வாறு பழக வேண்டும் என்கிறது ஒரு பாடல் *(66)*. நடந்து கொள்ளும் முறையை விவரிக்கிறது ஒரு பாடல் *(பா.69)*.

அரசர் முன் செய்யத் தகாதவற்றைச் சில பாடல்கள் விவரிக்கின்றன *(பா.70, 73, 78, 84, 85)*. இவற்றுள் 69,73, 85 ஆகிய பாடற் கருத்துகள் மிக முக்கியமானவை. அரசன் செய்வன வற்றை வெறுக்க மாட்டார். அவனொடு கலகம் செய்யார்.

அரசன் காக்கையின் நிறம் வெள்ளை என்றால் மறுக்க மாட்டார் *(பா.69)*. செல்வச் செருக்கு, கல்வி மேன்மை, விளக்கம் சீர்குணம் குறித்துத் தற்புகழ்ச்சி தோன்ற மீண்டும் மீண்டும் உரைக்கக் கூடாது *(பா.71) (2892)* அறம் புரிதல், திருமணம், ஆள்வினை, வீடு இவை மன்னரை விட மேம்படச் செய்யக் கூடாது. அவனைவிட நன்கு அலங்கரித்து கொள்ளக் கூடாது *(பா.66)*.

தொகுத்துச் சொன்னால் அரசனுக்கு நிகர் அரசன்தான். அவனுக்கு இணையாக எண்ணவோ, சொல்லவோ, செயல்

படவோ கூடாது என அரச முதன்மையைத்தான் இப்பாடல்கள் வற்புறுத்துகின்றன எனலாம்.

சிறுபஞ்ச மூலத்தில் அரசியல் அறம்

10 பாடல்கள் அரசனைப் பற்றிய கருத்துகளைக் கொண்டுள்ளன. *(பா.2, 5, 7, 44, 45, 47, 56, 69, 71, 78)* கற்புடைய நாட்டுக்கு அரசன் அமிர்து *(2)*.

"குடிதழீ இக் கோலோச்சும் மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு."

என்ற குறள் வழி குடியுயர அரசன் உயர்வான் என்கிறது ஒரு பாடல் *(44)*. குடிகளை வருத்தாமல் ஆட்சி செய்யும் அரசன் நல்லது என்று உலகத்தார் புகழ் கூறுவது வனப்பு *(பா.7)* என்று இரண்டு பாடல்கள் உள்ளன. அகழி, காடு, சேற்று நிலம், மலை, மக்கள் ஐந்தும் அரணாக உடையவனை வேந்தனாக நாட்டல் விதி *(47)* என்கிறது ஒரு பாடல். வீரர்கள் பகைவர்களோடு சேர்ந்து கொள்ளாமல் அரசன் பகை மீது ஏவும் வேல் வழிநிற்றலும் குடிகள் அரசன் செங்கோல் முறைப்படி வாழ்வதும் நன்மையாகும் *(பா.13)* என்றும், தமக்கு நிகரில்லாரோடு நட்புக் கொள்ள மாட்டார்கள் அரசர்கள் *(பா.78)* என்றும் இந்நூல் கூறுகிறது.

வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்

என்ற குறட் கருத்தின் சாயலோடு,

தன்னிலையும் தாழாத் தொழில்நிலையும் துப்பெதிர்ந்தார்
முன்னிலையும் ஈடில் இயல்நிலையும் - துன்னி
அளந்தறிந்து செய்வான் அரசன் *(56)*

என்கிறது ஒருபாடல்.

ஏலாதிப் பாடல்களைப் போல சிறைப்பட்டோர், இறந்தவர் பொருட்டு நோற்பவர், பட்டினி கிடப்பார், ஒரு நாள் இடை

வெளி விட்டு உண்பார், பிறை பார்த்து உண்பவர் இவர்களுக்கு ஈபவரும் *(69)* வலியழிந்தார், மூத்தார், வடக்கிருந்தார், நோயால் நலிந்தோர், இவர்களுக்கு ஒரு கவளம் கொடுப்பவரும் மன்னர் ஆவார் *(71)* என இரண்டு பாடல்கள் குறிப்பிடுகின்றன.

## இனியவை நாற்பது கூறும் அரசியல் அறம்

*(5, 8, 15, 32, 33, 35)* இந்நூலில் ஆறு பாடல்களில் அரசன் குறித்த செய்திகள் உள்ளன. குடிகள் மாட்டு அன்பு, போர்த்திறம், ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றொரு ஒற்றினால் ஒற்றிக் கொள்ளும் திறன், நடுவு நிலைமை, முறை செய்தல் ஆகியன அரசர் குணம் எனப் போற்றுகின்றன இந்நூற் பாடல்கள். இந்நூல் யானை முழக்கம் கேட்பதும், யானைப் போர் காண்பதும் இனிது என்பதால் இந்நூலாசிரியர் வாழ்ந்த காலத்தில் யானைப் போர் சிறப்புற்றிருந்தது எனக் கருதலாம்.

''ஒற்றினால் ஒற்றி'' என்ற பாடலில்

> ''பற்றிலனாய்ப் பல்லுயிர்க்கும் பார்த்துற்றுப் பாங்கறிதல்
> வெற்றிவேல் வேந்தர்க் கினிது.'' *(பா.33)*

என்ற பாடல் குறிப்பிடத் தக்கது.

## இன்னா நாற்பது கூறும் அரசியல் அறம்

இந்நூலில் 2, 3, 5,13, 22, 38 ஆகிய ஆறு பாடல்களில் அரசர் குறித்த செய்திகள் உள்ளன. அரசன் செங்கோலனாக, குடிமக்களைக் காப்பவனாக, நீதி தவறாமல் ஆட்சி புரிபவனாக, யானை ஊர்பவனாக, யானைப் படையுடையவனாக, வீர மிக்கவ னாக விளங்க வேண்டும் என்பன இந்நூல் கூறும் கருத்துகளாகும்.

## முதுமொழிக் காஞ்சி கூறும் அரசியல் அறம்

செங்கோல் முறையில்லாத அரசர் நாட்டிலிருந்து அவர் கொடுங்கோன்மையை அறிஞர் பழியார் *(3.6)* முறைமை யில்லாத அரசன் நாடு வறுமையுறும் *(9.1)* குடி மக்கள் இன்பம் விரும்பும் அரசன் முறையோடு அரசாட்சி செய்தலைத் தவிரான்

*(ஏமம் வேண்டுவோன் முறைசெயல் தண்டான் 10.9)* அரசன் செங்கோல் முறைப்படி ஆட்சி செய்ய வேண்டும் என்பன முதுமொழிக் காஞ்சி கூறும் கருத்துக்களாகும்.

நாலடியார், கார் நாற்பது, திணைமொழி ஐம்பது, இன்னிலை, திணைமாலை நூற்றைம்பது, ஐந்திணை ஐம்பது ஆகிய நூல்களில் அரசர் தொடர்பான கருத்துகள் மேலோட்ட மான குறிப்புகளாகவே உள்ளன.

முடிவுரை

சங்கப் பாடல்கள் அரசனைப் பற்றிப் பாடுகிறபோது வீரம், போராற்றல், செங்கோன்மை, பொருளீட்டல், ஈகை, குடி காத்தல், நடுநிலை பிறழாமை, புகழ்பட வாழ்தல் முதலிய சிறப்புகளை உடையவனாகச் சித்திரித்துள்ளன. சங்கப் பாடல் கள் கூறும் அரச அறங்களைத் திருக்குறள் செம்மையாகத் தொகுத்தும் வகுத்தும் விளக்கியுள்ளது. வள்ளுவர் காட்டும் இலட்சியம் மிக்க அறத்தின் உருவமான அரசனைப் பின்வரும் அற நூல்களில் முழுமையாகக் காண இயல்வில்லை.

அரச முதன்மையும் அரச அதிகாரமுமே அறநூல்களில் குறிப்பாகப் பழமொழியில் மிகுதியும் வலியுறுத்தப்படுகிறது. அரசன் தகாதன செய்தாலும் பதிலுக்கு வேண்டாதன செய்தல் கூடாது. *(எ.கா. வாயில் உள்ள நீரை விழுங்குவதும் உமிழ்வதும்)* பரம்பரை ஆட்சி ஏற்கப்படுகிறது. போட்டியாளரை அருகில் வைத்துப் பெருமைப்படுத்தக் கூடாது என அறிவுரை கூறியிருப் பது கருதத் தக்கது.

சர்வாதிகாரம் செய்யும் அரசனுக்கு அவன் படையே துன்பத்தைத் தரும் என்று எச்சரிக்கிறது நான்மணிக்கடிகை. இயற்கையையே ஏவல் கொள்வான் நல்லரசன் என்கிறது திரிகடுகம். அரச குடும்பத்தின் அடுத்த தலைமுறையின் கடமை களை எடுத்துரைக்கிறது இந்நூல். ஏலாதி அனைத்து நிலை மக்களையும் புரப்போர் அரசர் ஆவார் என்று மாற்றிக் கூறுகிறது.

கீழ்க்கணக்கு நூல்களில் திருக்குறளுக்கு இணையாக அரச அறம் கூறும் நூல் வேறு எதுவும் இல்லை. குறளுக்கு அடுத்த நிலையில் பழமொழி நூலில் அரசனைப் பற்றிய கருத்துகள் அனுபவ நிலையில் விவரிக்கப்பட்டுள்ளன. சுருங்கச் சொன்னால் அற நூல்களில் பரம்பரை ஆட்சியும் அரச முதன்மையும் அரச அதிகாரமும் ஏற்கப்பட்டு மக்கள் எந்நிலையிலும் அடிபணிந்து வாழ வேண்டும் என்பது அறக் கருத்தாக வலியுறுத்தப் பட்டுள்ளது.

# வள்ளலார் வரிசை நூல்கள்

திருவருட்பா
திருவருட்பா (தேர்ந்தெடுத்த பாடல்கள்)
திருவருட்பா (கற்பதிப்புப் பாடல்கள்)
திருவருட்பா தினசரி வழிபாடு
அருட்பெருஞ்சோதி அகவல்
மனுமுறை கண்ட வாசகம்
சீவகாருண்ய ஒழுக்கம்
விண்ணப்பங்கள்

**ம.பொ. சிவஞானம்**

வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு

**சாமி. சிதம்பரனார்**

வள்ளலார் கூறும் வாழ்க்கைநெறி
வள்ளலார் வாய்மொழி

**திரு.வி.க.**

வள்ளலார்
உள்ளொளி

**வாமனன்**

வள்ளலார்

**முனைவர் ச. மெய்யப்பன்**

வள்ளலார் வரலாறு

**முனைவர் ச.வே. சுப்பிரமணியன்**

திருவருட்பா

**H. இராமசாமி**

வள்ளலார் கண்ட நால்வர்

**க. வெள்ளைவாரணன்**

திருவருட்பாச் சிந்தனை

**மு. பாலசுப்பிரமணியம்**

அருட்பெருஞ்சோதி அகவல் தெளிவுரை

# உவமைக் கவிஞர் சுரதாவின் நூல்கள்

தேன் மழை
அமுதும் தேனும்
முத்துப் பந்தல்
துறைமுகம்
வினாக்களும் சுரதாவின் விடைகளும்
துறைமுகம்
பட்டத்தரசி
உண்மையைச் சொல்கிறேன்
எப்போதும் இருப்பவர்கள்
தொடாத வாலிபம்
எச்சில் இரவு
அரசியல் அரங்கம்
பாரதிதாசன் பரம்பரை
வாழ்த்துமழை
விதைகள்
மங்கையர்க்கரசி
நெய்த செய்திகள்
நெஞ்சில் நிறுத்துங்கள்
திரை ஓசை
சுவரும் சுண்ணாம்பும்
விரல்நுனி வைரங்கள்
முன்னுரை ஊர்வலம்
பூக்கூடை
அரங்கத்தில் அறிமுகம்
தோரணவாயில்
தமிழ்ச்சொல்லாக்கம்
முன்னும் பின்னும்
இதழ் மலர்கள்






# மணிவாசகர் பதிப்பகம்

## பொன்விழா ஆண்டு

## 1961-2011

நிறுவனர் பதிப்புச் செம்மல்

## ச. மெய்யப்பன்

**வெளியீடுகள் : 2500**

**பரிசு பெற்ற நூல்கள் : 80**

**பாடநூல்கள் : 75**

துறைதோறும் தமிழுக்கு ஆக்கம் தரும்

நூல்களை வெளியிடும் பதிப்பகம்

**மணிவாசகர் பதிப்பகம்**

12-B, மேல சன்னதி, சிதம்பரம் - 608001. ✆:04144-230069

31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600108. ✆:044-25361039

6, சிவஞானம் தெரு, தி. நகர், சென்னை - 600017. ✆:044-24357832

110, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை - 625001. ✆:0452-2622853

15, ராஜ வீதி, கோயமுத்தூர் - 641001. ✆:0422-2397155

296/134, செரி சாலை, சேலம்-636007. ✆:0427-3207722

28, நந்தி கோயில் தெரு, திருச்சி - 620002. ✆:0431-2706450